15-4

# பெருந் தெய்வம்





'ஸ்ரீ வைணவச் செல்வம்'
'சிந்தாமணிச் செம்மல்'

புலவர் மு. இராமசாமி, எம். ஏ., பி. எட்.,

இராசிபுரம்.



வெளியீடு:

திருவரங்கம் பதிப்பகம்,

இராசிபுரம்.

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பெருந்தெய்வம் |
| ஆசிரியர் | : | புலவர் மு. இராமசாமி, எம். ஏ., பி. எட்., |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| ஆண்டு | : | 13 - 7 - 90 |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | ஆசிரியர் மு. இராமசாமி. எம்.ஏ., பி.எட்., |
| தாள் | : | டெம்மி 7.2 |
| அளவு | : | 1X8 |
| பக்கம் | : | 244 |
| எழுத்து | : | 10, 12, 18. |
| கட்டு | : | அட்டைக்கட்டு லேமினேசன் |
| விலை | : | ரூ. 30-00 |
| வெளியீடு | : | திருவரங்கம் பதிப்பகம் |
| படிகள் | : | 1000 |
| அச்சிட்டோர் | ; | சன்-மூன் பிரிண்டர்ஸ்<br>அம்மாப்பேட்டை, சேலம்-3. |

# பொருள் அடக்கம்

**பெருந்தெய்வம்:**

ஸ்ரீ:

# காணிக்கை

செந்தா மரைக்கண் திருமால் பதத்தைச்
சந்ததம் போற்றும் சார்புறு மரபினர்;
வேத காலத்து வித்தக முனிவரர்
போதம் முற்றும் பொலிந்த உளத்தினர்;
வடமொழி தென்மொழி குடமொழி பயின்று
திடமொடு சாரம் தேக்கிய அறிவினர்;
இலங்கை முதலாத் துலங்குபல் பதிகளில்
நலங்கெழு புலமை நாட்டிய திறலினர்;
ஆங்கிலம் புரிந்த அரியநல் தவத்தால்
ஓங்கு சீ தாயனம் உவந்தருள் மாண்பினர்;
உலகமா மறையாய் ஒளிர்திருக் குறளை
இலகுமாங் கிலத்தில் இயற்றிய புகழினர்;
சத்திய வடிவாம் சாவித் திரியின்
உத்தமப் பொருளில் ஒன்றிய வாழ்வினர்;
நிரந்தரம் பெற்ற அரவிந் தச்சுடர்
புகுந்தவுள் ளத்தால் பொலியும் முகத்தினர்
விட்டுசித் தன்போல் வித்தகப் புதல்வியால்
மட்டிலாப் புகழ்பெறு மாசறு தவத்தினர்;
பங்கயத் திருநேர் பதுமா சனியின்
செங்கரம் பற்றிச் சிறப்பெலாம் பெற்ற
அற்புதச் சீநி வாசஅய் யங்கார்
பொற்பதம் தன்னில் பொலிகஇந் நூலே.

ஸ்ரீ:

# நோக்கம்

**நாடிய பொருள்கை கூடும்: ஞானமும் புகழும் உண்டாம்:**
**வீடியல் வழிய தாக்கும் வேரிஅம் கமலை நோக்கும்:**
**நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய வாகை**
**சூடிய சிலைஇ ராமன் தோள்வலி கூறு வோர்க்கே.**

நாடிய பொருள் கைகூட வேண்டுமென்ற நோக்கத்தோடுதான், மக்கள் நாள்தோறும் உழைத்துக் கொண்டிருக்கின்றார்கள். ஓய்வின்றி ஓடி உழைக்கும் உழைப்பின் நோக்கம் நிறைவேறுவது, எதிர்பார்க்கும் பொருள் கைக்கு வந்து சேரும் போதுதான். சேர்ந்த பொருள், வாழ்க்கையைப் பயனுடையதாக்க வேண்டும்.

பயன்தரும் பொருளைப் பெறும் நோக்கத்தோடு வாழும் வாழ்வே. நல்வாழ்வாக அமையும். அதுவே உயர் வாழ்வு எனப்படும். நன்மையும் உயர்வும் நாளும் நல்கக் கூடிய நற்பொருளை, நாடிக்கொண்டிருக்கும் மக்களுக்கு, அதனை எளிதாகக் கொடுக்கக்கூடிய ஒன்று இருக்குமானால், அதனை நாடலாமே? அத்தகைய நாட்டத்துக்கு உரியது இராமசரிதம்.

இராமன் தோள் வலிகூறும் இராம சரித்திரம், இராமாயணப் பெருங்காப்பியமாக விரிந்து பரந்துள்ளது. இந்தப் காப்பியப்பரப்பில்,தேடப்பட்ட பெரும்பொருள் கிடைத்தது பற்றிப் பேசுகின்ற பகுதிக்கு, சுந்தர காண்டம் என்று பெயர் இந்தக் காண்டத்தின் பெருமை, எழுத்தால் எழுதிக் காட்ட முடியாத அளவுக்கு மேன்மை பெற்றது ஒன்றாகும்.

இழந்த ஒருபெரும் பொருளை, இனி எப்படி எய்துவது என்று ஏங்கிக் கொண்டிருந்த நிலையில், அந்தப் பொருள் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்த நற்செய்திக்குரிய பகுதி, இந்த சுந்தரகாண்டம். அதனாலேயே இது மேன்மைக்குரியதாக விளங்குகின்றது.

பிறர் யாவராலும், நாடிக்(தேடி) காணமுடியாத அந்தப் பெரும் பொருளை, தான் ஒருவனாகவே சென்று நாடிக் கண்டுபிடித்து வந்து, அந்த நற்செய்தியைச் சொன்னவன் அனுமன். அவன், 'கல்லாத கலையே இல்லை' என்ற அளவுக்கு ஞானம் பெற்றவனாகையாலே, தேடிப்போன ஒன்றைத் தெய்வமாகக் கண்டான். அதனால், 'வேத நல் நூல் உய்ந்துள காலமெல்லாம் புகழோடு ஓங்கி நிற்பவன் ஆகின்றான் அனுமன்.

'நாடிய பொருள் நம்மை வந்து அடைய வேண்டும், அதற்கு நமது ஞானம் துணையாக நிற்கவேண்டும், அதனால் புகழ் பெருகவேண்டும்' என்பதை நோக்கமாகக் கொண்ட நன்மக்கள், சுந்தர காண்டத்தை அணுகினால் போதும். எண்ணியது அனைத்தும் எளிதாகக் கிட்டும்.

சுந்தர காண்டம் முழுமையையும் கற்க இயலாத அன்பர்களுக்கும், அவர்களது எண்ணம் எளிமையாக நிறைவேறச் செய்து. உதவுதற்குரிய ஒரு பகுதி இதனுள் உண்டு. அதற்குத் திருவடி தொழுத படலம் என்று பெயர்.

ஞானமும் புகழும் நிரம்பிய அனுமன், தான், இலங்கையில் கண்டுவந்த தெய்வத்தின் பெருமையை, இராமபிரானிடம் கூறுவதாக அமைந்தது இந்தப்படலம். இது, ஐம்பத்திரண்டு கவிதைகளால் நிரப்பப் பெற்றது. இங்கு முப்பது கவிதைகளே விளக்கத்துக்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன.

இராமபிரான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் நற்செய்தியை அனுமன் சொல்வதாக அமைந்த பாடல்கள் இருபத்தொன்று. (21) அதன் முன்னும் பின்னுமாக அமைந்துள்ள பாடல்கள் ஒன்பது. (9) ஆக இந்த முப்பது

பாடல்களில், நாடிய பொருள் கை கூடியதையும், அதனால் இராமபிரான் பெற்ற மகிழ்ச்சியையும், சுந்தர காண்டத்தின் முழுக் கருத்தினையும் காணலாம். நோக்கத்தின் நிறைவு முப்பதில்.

**முப்பது ஏன்?**

சீதாப் பிராட்டி இருக்கும் இடத்தைத் தேடிக் கண்டு பிடித்து, வந்து சொல்வதற்கு ஒரு கால எல்லை வகுக்கப் பட்டிருந்தது. அக்கால எல்லை, குறித்த நாள்' என்றும் (6023) 'கூறினநாள்' என்றும் (6026) இராமபிரானால் முப்பது நாட்களுக்குரியதாகத் தெரிவிக்கப்பட்டிருந்தது.

சீதாப் பிராட்டி, தன்னை இராமபிரான் வந்து மீட்டுக் கொண்டு செல்வதற்கு ஒரு கால எல்லையைச் சுட்டிக் காட்டியிருந்தாள். 'திங்கள் ஒன்று இருப்பென் இன்னே' என்பதுதான், பிராட்டி வகுத்த கால எல்லைக் கோடு.

பிரிந்திருந்த பெருமானும் பிராட்டியும் கூடுவதற்குக் குறித்த நாள் முப்பது. இந்த முப்பதில், இவர்களது நாட்டம் நிறைவேறியுள்ளது. 'நாடிய பொருள் கைகூடப் பெற்று மகிழ்வதற்கு முப்பது போதும்' என்பதை இராமாயணக் காப்பியம் தெளிவாக்குகிறது.

**ஆண்டாள் :**

பெரியாழ்வாரின் திருக்குமார்த்தி, ஆண்டாள். சூடிக் கொடுத்த சுடர்க்கொடி என்று பெயர் பெற்ற இந்த நாச்சியார், தான் நாடிய பொருளைப் பெறுவதற்குப் பாடியப் பாடல்கள் முப்பது. 'கண்ணன் என்னும் கருங் கடவுள் காட்சியில் பழகிக் கிடந்த இந்தப் பிராட்டி' அந்தக் கண்ணனையே கணவனாகப் பெறவேண்டும் என்ற நோக்கத்தை, சங்கத் தமிழ் மாலை முப்பதின் மூலமாக நிறைவேற்றிக் கொண்டுவிட்டாள். 'உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது' என்று, நாச்சியார் நாடிய பொருளை, நிறைவேற்றிய திருப்பாவையின் நிறைவும் முப்பது பாசுரங்களால் ஆகியது.

**பராசர பட்டர் :**

ஸ்ரீ கூரத்தாழ்வானின் திருக்குமாரர் பராசரபட்டர். இவர், செய்தற்கு அரிய பெருங்காரியங்கள் பலவற்றை, மிக இளமைக் காலத்திலேயே செய்து முடித்து, வைணவ ஆச்சாரியர் வரிசையில் சிறந்ததோர் இடத்தைப் பெற்றவர். இவருக்கு, எம்பெருமானார் இராமானுஜர் இட்ட கட்டளை களுள் ஒன்று, 'மாதவர்' என்ற வேதாந்தியை வெல்வது. மாதவர் என்ற இந்த வேதாந்தி வாழ்ந்தது மேல்நாட்டுத் திருநாராயணபுரம்.

அங்கு சென்று, வேதாந்தியை வெல்வதாகிய நாடிய பொருளைக் கை கூடப் பெறுவதற்கு எடுத்துக் கொண்ட நூல் திருநெடுந்தாண்டகம் என்ற திருமங்கை யாழ்வாரின் பிரபந்தமாகும். இது, முப்பது பாசுரங்களால் நிறைவு பெற்ற ஒரு வெற்றிப் பிரபந்தம்

'கொள்கையாலும், வாழ்ந்த இடத்தாலும் பிரிந்து பட்டிருந்த வேதாந்தியை, வென்று. விசிட்டாத் வைதி யாக்கி நம்மோடு ஒன்றாகக் கூட்டு வித்தது எப்படி? என்பது இராமானுஜரின் கேள்வி. 'திருநெடுந்தாண்டகம்' என்ற பிரபந்தம், என் வெற்றிக்கு உதவியது என்பது பட்டரின் பதில். இது 'குரு பரம்பரைப் பிரபாவம்' கூறும் வரலாற்றுச் செய்தி.

பட்டரின் நோக்கத்தை நிறைவேற்றியதும், 'மாதவர்' என்ற வேதாந்தியை 'நஞ்சீயர்' என்ற ஆச்சாரியராக உயர்த்தி வைத்ததும், முப்பது என்ற எண்ணிக்கைக் குரிய பாசுரங்களைக் கொண்ட 'திருநெடுந்தாண்டகம்' என்ற பிர பந்தமாகும்.

இவ்வாறாக. வைணவச் செல்வர்களின் நன்னோக் கத்தை நிறை வேற்றுவதில், முப்பது முக்கியத்துவம் பெற்றிருப்பதால், அடியேனும், எனது நோக்கத்தை இந்த முப்பதில் நிறை வேற்றிக் கொள்ள விருப்பம் கொண்டேன்

'பெருந் தெய்வம்' என்ற இந்த நூலை உருவாக்க வேண்டும் என்ற அடியேனது விருப்பம், நிறைவேறுவதற்கு கிடைத்த நாட்களும் முப்பதே. எம்பெருமாட்டியின் திரு வருள், இதனை முப்பது நாட்களில் முழுமை பெறச் செய் துள்ளது. என்னே திருவருளின் மேன்மை; அது, பெருந் தெய்வத்தின் திருவருளாகையால், நாடிய பொருளாகிய இந்த நூல், முப்பது நாட்களில் கைகூடி விட்டது போலும்!

கையெழுத்துப் பிரதியாக இருந்த இது, அச்சு வாகனம் ஏறி, அழகு உருவம் பெற்று, புத்தக வடிவில் வெளியேறுவதற்குக் கிட்டிய நாட்களும் முப்பதே. குறித்த முப்பது நாட்களில் இது, புத்தகமாக அவதாரம் செய்து விட்டது. இதற்குக் காரணம், பெருந் தெய்வமாகக் காட்சியளிக்கும் சீதாப் பிராட்டியின் திருவருள் தான்.

**இந்நூல் :**

கம்பராமாயணக் காப்பியத்துத் திருவடி தொழுதபடல த்துள் அமைந்த முப்பது கவிதைகள் விளக்கம் பெறுகின் றன. இங்கு கருத்து விளக்கத்துக்கு உதவியாக, ஆதிகவி வான்மீகி பகவான் அருளிய சில சுலோகங்களும், அதன் விரிவுரைகளும், பிற பேரறிஞர்களின் விளக்கவுரைகளும் ஆங்காங்கு இடம் பெற்றுள்ளன. இறுதியில், சுந்தர காண் டத்துள் வந்துள்ள சீதாப்பிராட்டி பற்றிய கவிதைத் தொடர்கள் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

**அணிந்துரை :**

இத்தகையதொரு அமைப்பினைக் கொண்ட இந்தச் சிறு நூல், கம்பன் காப்பிய, ரசிகப் பெருமக்களின் திருக் கரங்களைச் சேர்ந்து, அவர்களது நல்வாழ்த்தினைப் பெறவேண்டுமே என்று எண்ணினேன் என் எண்ணத்தின் நிறைவு, ஒரு அணிந்துரையில் அடங்கி விடும் என உணர்ந்

தேன். உணர்வின் உந்துதலால், என் உள்ளம், இதற்கு அணிந்துரை நல்கக்கூடிய ஒரு நல்லோரை நாடியது. அந்நாட்டத்தின் விளைவாக. எனக்குக் கிடைத்தவர்தான், பேராசிரியர் திரு. என். சுப்புரெட்டியார் அவர்கள்.

பேராசிரியர் ரெட்டியார் அவர்கள், பக்தி உணர்வில் தோய்ந்து எழுந்த பரந்து பட்ட திருவுள்ளத்தினர்: பலப் பல்வகையான துறைகளின் கருத்துக்களையும், ஆங்கிலத்தின் மூலமாகவும் அருந்தமிழின் மூலமாகவும் ஆழமாகக் கற்றறிந்த அனுபவம் முதிர்ந்த பேரறிஞர்: கற்றும் கேட்டும் அறிந்த உயர்ந்த பெருங்கருத்துக்களை எல்லாம், யாவரும் எளிதில் உணரும் வண்ணம் எழுத்துருவில் வடித்துக் கொடுக்கும் சிறந்த எழுத்தாளர்: சமயப் பேரறிஞர்களுக்கும் புரியாத தத்துவக்கருத்துக்களின் உண்மைகளை, தம் நுண்மாண் நுழைபுலம் கொண்டு ஆய்வு செய்யும் ஆற்றல் பெற்ற ஆராய்ச்சியாளர்: கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் பல ஆய்வாளர்களை உருவாக்கிய பேராசிரியச் சீலர்; எந்த நூலை எடுத்துக் கொண்டாலும், அதனை நன்கு திறனாய்வு செய்யும் இலக்கியத் திறனாய்வாளர்: விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம், உடல் நலம். உளவளம், சமூகம், சமுதாயம், கல்வி கற்பித்தல் முதலிய பல துறை நூல்களையும் உருவாக்கி. அவைகளை, தமிழ் கூறும் நல்லுலகத்தில் உலாவரச் செய்த உழைப்புச் செல்வர்: பிறப்பால்; சைவக் குடும்பத்தினர்: சிறப்பால், வைணவ சமயச் சால்புடைப் பெருமகனாராக விளங்குபவர்.

இத்தகைய பெருந்தகையாளரது, திருவுள்ளத்தின் முன்னிலையில், இச்சிறு நூலை முதன் முதலாகச் சமர்ப்பித்து, அவரது அன்பு கலந்த ஆசியால் வழங்கும் அணிந்துரையை இந்நூல் பெற்றுக்கொண்டால், அது, இந்நூலின் சிறப்புக்கு உரியதொன்றாக அமையும் எனக் கருதினேன்.

என் கருத்தினை பேராசிரியரிடம் வெளியிட்டேன், அவரும் எனது கருத்தை ஏற்றுக் கொண்டு, மனம் உவந்து, இதற்கு ஒரு அணிந்துரை நல்கியுள்ளார்கள்.

இச்சிறு நூலுக்கு, நல்லுரையாக ஒரு அணிந்துரை வழங்கிய அவரது திருக்கரம், நூறு என்ற எண்ணிக் கையை எட்டிக் கொண்டிருக்கும் அளவுக்கு, நூல்களை உருவாக்கித் தந்த பெருஞ் சிறப்புக்கு உரியதாகும். அந்தக் கை வண்ணம்தான், இந்த அணிந்துரை. என்றால், இது எவ்வளவு பெருமைக்குரியதாக மதிக்கப்படவேண்டும்.

இப்படி மதிக்கத்தக்கதொரு உரையை, இந்நூலுக்கு அணியாகத் தந்து உதவிய பேராசிரியரை என்றும் என் நெஞ்சத்து இருத்தி நன்றி காட்டி மகிழ்வேன். என் நன்றி உணர்வு, என்றும் பேராசிரியர் அவர்களுக்கு உரித்தாக அமையும்.

**நன்றி :**

இந்த நூலை நாமக்கல் கம்பன் கழக 29-வது ஆண்டு விழாவில் வெளியிடுவதற்கு அனுமதி வழங்கிய தலைவர். திரு. R. சுந்தரராஜீ ரெட்டியார் உள்ளிட்ட உறுப்பினர்கள் அனைவர்க்கும் என் அன்பு கலந்த நன்றி.

இதனை. உரியகாலத்தில் அழகுற அச்சிட்டுக் கொடுத்த அன்புத் தம்பி திரு. எஸ். சண்முகம் அவர்களுக்கு நன்றி கலந்த நல்வாழ்த்துகள். அவரது சன்-மூன் அச்சகம் நாளும் வளர்க! வாழ்க!' என உளமார வாழ்த்துகின்றேன்.

**நிறைவாக :**

இந்த நூலைக் கண்ணுறும் அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள். இதில், தங்கள் கருத்துக்கு ஏதேனும் பிழையாகக் காணப்படுவதைத் தெரிவித்தால், அதில் திருத்தம் கண்டு மகிழ்வேன். கருத்துப் பிழை என்பால் திருத்தம் பெறும். எழுத்துப் பிழையை அச்சகம் தனக்கு இயல்பாக்கிக் கொண்ட காலம் இது. அதனால், வாசகர்களே அதனைத் திருத்திப் படித்துக்கொள்ள வேண்டுகின்றேன்.

மேலும், 'இதனைப் படித்ததனால், நான் பயன் பெற்றேன்' என்று யாராவது எழுதித் தெரிவிப்பார்களானால், அவர் வாழும் திசை நோக்கித்தொழுது மகிழ்வேன். அவர்களுக்கு நன்றியனாயிருப்பேன்.

இராசிபுரம்
10-7-90

அன்புள்ள அடியேன்,
**மூ. இராமசாமி.**

ஸ்ரீ:

# அணிந்துரை

'அருங்கலைக் கோன்' 'ஸ்ரீ சடகோபன் பொன்னடி'

பேராசிரியர் டாக்டர். ந.சுப்பு ரெட்டியார்

தேடிய அகலிகை சாபம் தீர்த்ததாள்;
நீடிய உலகெலாம் அளந்து நீண்டதாள்;
ஓடிய சகடுஇற உதைத்து, பாம்பின் மேல்,
ஆடியும் சிவந்ததாள் என்னை ஆண்டதாள்!

வில்லி புத்தூராழ்வார்.

'இதிகாச சிரேஷ்டமான இராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது' என்பது பிள்ளை உலகாசிரியரின் திருவாக்கு. பிராட்டி என்னாது "சிறையிருந்தவள்" என்று அருளிச் செய்தது பிராட்டியின் பேரருளின் மிகுதியைக் காட்டுவதற்காக. தேவ தேவனுடைய பட்டத்து தேவியான தன்னுடைய பெருமையும், சிறையிருத்தலின் தாழ்ச்சியும் பாராமல் தேவ மாதர்களின் சிறையை விடுவித்தற்காகத் தான் சிறையிருந்தது, பேரருளின் வசப் பட்டவள் என்பது தெளிவாகின்றது. குழவி கிணற்றிலே, விழுந்தால் ஒக்கக் குதித்தெடுக்கும் தாயைப் போலே இவ்வாருயிர்கள் விரும்பாத பிறவிக் கடலிலே தானும் ஒக்க வந்து பிறந்து இவர்கள் பட்டதைத் தானும் பட்டு காப்பாற்றுகையாலே ஒரு காரணம் பற்றி வாராத தாயாராகிற சம்பந்தத்தால் வந்து அளவில்லாத அன்பாகிய குணத்திற்கும் இஃது ஒரு விளக்கமாகும். நம்மாழ்வாரின் 'தனிச் சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்' (திருவாய் 4:8:5) என்ற சொற்றொடர், அருள் முதலிய இந்த மேம்பட்டகுணத்தை வெளியிடுவதால் அதனையே பிள்ளை உலகாசிரியரும் தம் வாக்கியத்திற்கு மூலமாக எடுத்துக்கொண்டார்.

---

1. வி. பா: நான்காம் போர்ச் சருக்கம் - காப்பு.
2. ஸ்ரீவச. பூஷ. சூத்திரம்-5.

'ஸ்ரீ ராமாயண காவியம் முழுவதும் பிராட்டியினுடைய பெருமை பொருந்திய சரிதமே' என்று வால்மீகி பகவான் வாயோலையிட்டு வைத்ததனால் இவளுடைய ஏற்றம்தெளி யலாம்.பராசர பட்டரும் தமது'குணரத்ன கோசத்தில்' 'என் தாயே, ஸ்ரீமத் ராமாயணமும் உன்னுடைய சரிதையை சொல்லியே வாழ்கின்றது' என்று அருளிச்செய்ததும் ஈண்டு நினைக்கத்தக்கது. இவற்றையெல்லாம் நன்கு கருதியே பேராசிரியர் **கே.ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார்** "சீதாயணம்" (ஆங்கிலம்)என்ற நூலை வெளியிட்டுப் பிராட்டியைப் போற் றியுள்ளார்.

"**பெருந்தெய்வம்**" என்ற இச்சிறிய பனுவல் கம்பன் காவியத்தில் சுந்தர காண்டத்தில் 'திருவடி தொழுத படலத் திலிருந்து தேர்ந்தெடுத்துக் கொண்ட முப்பது பாடல்களை விளக்கும் பாங்கில், பிராட்டியின் பெருமையை விளங்க உரைப்பது. இதனை எழுதி உபகரித்தவர் என் உடன் பிறவா அருமைத் தம்பி **மு. இராமசாமி** என்பவர். இவரை நான் துறையூரில் பணியாற்றிய காலம் முதல் (ஜுன்-1941) திருவையாறு அரசர் கல்லூரியில் வித்துவான் வகுப்பில் படித்த காலம் முதல், நான் நன்கு அறிவேன். 'இவனை வளர்த்தானும் வசிட்டன்காண்' என்ற கம்பன் வாக்கின் படியே இவரும், இவரோடொத்த எங்கள் குலச்செல்வர்கள் சிலரும், பேராசிரியர் **பு. ரா. புருடோத்தம நாயுடு** அவர் களின் அணுக்கச் சீடர்களாகையாலே ஒழுக்கம், அடக்கம் தமிழுணர்வு வைணவப்பற்று முதலிய பண்புகள், இரண்டா வது இயற்கையாக அமையப் பெற்றவர்கள். அன்று அவர் களிடம் வாமனம் போல் வளர்ந்து வருவதைக் கண்டு மகிழ் கின்றேன்; உள்ளம் பூரிக்கின்றேன். தாயுமான அடிகட்கு மௌன குரு சுவாமிகள் சொன்ன 'சும்மா இரு' என்ற மறை மொழி எனக்கும் என் தம்பி இராமசாமிக்கும் ஒத்து வராத மொழியாகும். பணியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகும் "வாசித் தும் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்குகின்

றோம் பொழுதை" எங்கள் தொண்டு பிறருக்குப் பயன்படு வதோ இல்லையோ (அதனை அறிபவர்கள் வாசகர்கள்) யாங்கள் மன அமைதியுடன் உள்ளோம்.

எங்கள் திருமேனி சிங்கப்பிரான் சேர்ந்த திருக்கோ யில் ஆகி விட்டதால் மங்கிய வல்வினை நோய்கள் எங்க ளைத் தீண்டாமல் "பட்டினம்" காக்கப் பெறுகின்றது.

நம்மாழ்வாரின் திருவாய்மொழித் (4:6:2) தொடரான 'இது மிக்க **பெருந்தெய்வம்**' திருவிருத்தத் (20) தொடரான சின் மொழி நோயோ கழி **பெருந்தெய்வம்**" என்பவை இவர் தம் நூல் திருநாமம் பெறுவதற்கு மூலமாக அமைந் தவை போலும். இங்குப் பெருமான் பெருந் தெய்வமானா லும் "ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த தேவியும்' புருஷகார பூதையுமான பிராட்டிக்கு அப்பெயர் அமைந்தது மிகவும் பொருத்தமாகும். நம் பாவ மூட்டைகளை அகற்றி நம்மை உய்விக்கப் பெருமானுக்குப் பரிந்துரை செய்யும் பெருமாட்டியைப் பெருந்தெய்வமாகக் கருதுவது சாலவும் பொருத்தமாக அமைகின்றது.

"ஆழங்கால் படுதல்" என்பது வைணவத் தமிழ் நடையில் தாண்டவமாடும் ஓர் அருமையான தீந்தமிழ்த் தொடர். ஆரா அமுதமாகவும் இனிக்கும் தொடர்; பாசுரங்களை ஆழ்ந்து பயில்தல் கருத்துகளை ஆழ்ந்து சிந்தித்தல் (In-depth Study) அனைத்தையும் மறந்த நிலையில் ஆழியானையே சிந்தித்தல் போன்ற செயல்களை விளக்கும் போது இச் சொற்றொடர் பயன்படும். தம்பி இராமசாமி திருவடி தொழுத படலத்தின் முப்பது பாடல்களைப் பயின்று பிராட்டியாரை நம் மனக் கண்முன் நிறுத்தும் போது அவர் பாடல்களில் "ஆழங்கால் பட்ட பாங்கை" உணர முடிகின்றது. "கற்றனைத்து ஊறும் அறிவு" என்ற வள்ளுவத்தின் உண்மையையும் காண முடிகின்றது.

எடுத்துக் காட்டாக "மண்ணொடும் கொண்டு போனான்" (13-ம் பாடல்) என்ற பாடலை விளக்கும் போது அவர் பாடலில் ஆழங்கால் பட்ட பாங்கை அறியலாம்.

நன்னூலார் கூறும் உத்திவகைகளையும் மேனாட்டார் கூறும் பின்னோக்கு (அரிமாநோக்கு - Flashback) போன்ற விளக்க முறைகளையும் காணலாம், இவண் குறிப்பிட்ட பாடலை விளக்கும் போது ஆழ்வார் பாசுரங்கள் துள்ளி வருகின்றன (தான் எடுத்து மொழிதல்-உத்தி) அநுமனுக்கும் பிராட்டிக்கும் இடையே நடைபெற்ற விரிவான உரையாடல் நிகழ்வது சூளாமணிப் படலத்தில். அந்தக் கருத்தை இங்கு எடுத்துக் காட்டி (பின்னோக்கு-அரிமா நோக்கு) விளக்குவது இவர்கையாளும் முறை இவண் எடுத்துக்கொண்ட பாடலில், "உலகம் பூத்த கண்ணகன் கமலத்து அண்ணல்" என்ற தொடரை விளக்கும்போது. "தேவும் எப்பொருளும்" (திருவாய் 2 : 2 : 4) என்ற நம்மாழ்வார் பாசுரத்தை நினைவு கூர்கின்றார். "கருத்திலாள் தொடுதல் கண்ணின் எண்ணருங் கூறாய் மாய்தி" என்ற தொடரை விளக்கும்போது "புஞ்சிகஸ்தலை என்ற தேவமாது இராவணனுக்கு இட்ட சாபத்தை எடுத்துக் காட்டுவார். இந்த வரலாற்றைப் பிராட்டி அனுமனுக்குக் கூறியனவாகவுள்ள சூளாமணிப் படலத்திலுள்ள "மேவு சிந்தையில்" (5565) " அன்னசாபம் உளதென் "(5566) என்ற பாடல்களைப் பின்னோக்காக (Flashback) அரிமா நோக்காக எடுத்துக் காட்டுவார். இப்படிப்பல இடங்கள். ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் போதும்.

நம்முடைய கவிஞர்கள் எண்ணுடன் விளையாடுவதுண்டு 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்' என்பது பாட்டியின் வாக்கு எண்ணென்பஏனைஎழுத்தென்ப இவ்விரண்டும் கண் என்ப வாழும் உயிர்க்கு குறள் 392 என்பது வள்ளுவம் எண்ணின் பயன்கள் சொல்லி முடியா வாழ்க்கையில் தொட்ட இடம் எல்லாம் அது தட்டுப்படும்.

3) நாள், மாதம், ஆண்டுகள், காவலர், கைதிகள், மாணவர்கள், தொழிலாளர்கள், இவர்கள் எண்களால் குறிக்கப் பெறுகின்றனர். புறம் - 400; அகம் - 400; நாலடி - 400 ஐங்குறுநூறு - 500; போன்றவை எண்களால் குறிக்கப்பெறுகின்றன மூன்று மூர்த்திகள் சைவ சமய குரவர்கள் நால்வர் இறைவனின் 64 திருவிளையாடல்கள் மூன்று தத்துவங்கள், 8 எழுத்து மந்திரம் 5 எழுத்து மந்திரம், 64 நாயன் மார்கள், 10 அவதாரங்கள், பஞ்ச பூதங்கள், பஞ்ச பாண்டவர்கள் போன்ற வழக்குகளில் எண்கள் முக்கிய பங்கினை வகிக்கின்றன. இக்கால அணுவியலும். அணுக்களுக்கு எண்ணால் பெயரிடுகின்றது. ஆறும் ஆறுமாய், ஓர் ஐந்தும் ஐந்துமாய் ஏழுசீர் இரண்டும் மூன்றும் ஏழும் ஆறும், எட்டுமாய் (2) ஐந்தும் ஐந்தும் ஐந்தும் ஆகி (3) என்றெல்லாம் எண் விளையாட்டுகளில் தத்துவங்களை விளக்குவார் திருமழிசைப்பிரான். இங்ஙனமே இந்த நூலாசிரியர் "முப்பது" என்ற எண்ணைக் கொண்டு விளையாடுகின்றார்.

இந்த நூலுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாடல்கள் 30; ஆண்டாள் பாவைப் பாசுரங்கள் 30' "மாதவர்" என்ற வேதாந்தியை நஞ்சீயர் என்ற விசிட்டாத் வைதியாக்கப் பயன்பட்ட திருநெடுந்தாண்டகப் பாசுரங்கள் 30, இந்த நூல் பாடல்களின் விளக்கம் கையெழுத்துப் படியாக்கப் பெற எடுத்துக்கொண்ட நாட்கள் 30. நூல் அச்சு வடிவம் பெற ஆனகாலம் 30 நாட்கள் ஆக ஆசிரியர் "நாடிய பொருள் கைகூட 30 என்ற எண் பெரும் பங்கு கொண்டதைக் கூறிக் களிக்கின்றார். இன்னும், இதனை வளர்த்தால், சனிக்கோள் ஆதவனை வட்டம் இட 30 ஆண்டுகள் எனலாம். இந்த நூலைப் படித்து

---

3) The Guinness Book of Numbers by Adrian Room, Guinness Publishing std. 33. London Road Enfield, middle Sex, Britain and 6.95 என்ற நூலில் விவரம் காண்க.

அணிந்துரை எழுத எடுத்துக்கொண்ட நேரம் 30 மணி" எனவே இந்த "ஞானப் பனுவல்" வெளிவர "முப்பது" என்ற எண் தப்பாமல்வந்து கொண்டிருப்பது ஒரு விநோதம், இந்த விநோதம் நடைபெற்றது தெய்வாதீனம் என்று எண்ணத் தோன்றுகின்றது. வாழ்க **"பெருந் தெய்வம்"** என்ற நூல் பெருந் தெய்வத்தின் திருவருளால்!

இங்ஙனம் தம்பி இராமசாமி அவர் விரும்பும் காலம் வரை வாழ்ந்து தமிழுக்கும் வைணவத்திற்கும் சமூகத் திற்கும் பயன்படும் நூல் பல தந்து ஒல்லும் வகையெல்லாம் பணியாற்ற பரமபதநாதன் திருவருள்புரிய பெருந்தெய்வம் புருஷகாரமாக அமைவாளாக என வாழ்த்துகின்றேன். மனம்போல வாழ்வு அமைவது மாதவன் திருவருள் தானே.

★ ஏத்திமத மெல்லாம் எதையறிந்தேம் என்னும் எதைச்
சாத்திரம் நன் காய்ந்து சலிக்கும்? எதை- நாத்திகமோர்
சற்றுமே ஓர்ந்திலதாச் சாதித்திடும் அதையே
பற்றுவாய் நெஞ்சே! பரிந்து 4.

—வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

'வேங்கடம்'
AD-13 (Plot No. 3354)
அண்ணா நகர்,
சென்னை—600 040.
4-7-1990.

இங்ஙனம்,
ந. சுப்பு ரெட்டியார்
தொ. பே. 6211583

★ அகலிகை வெண்பா - காப்பு-4

ஸ்ரீ:

# 1. ஏற்றம் பெற்றது

**கல்வி :**

மனிதனுக்கு நல்லதொரு வாழ்முதல் பொருளாக அமைவது கல்வி. அது, மனிதனுள் அடங்கிக் கிடக்கும் அவனது திறமைகளைத் தட்டி எழுப்பும் வேலையைச் செய்யும்: பிறகு, எல்லோரும் கண்டு வியக்கும்படியாக, அத்திறமைகளை வெளிப்படுத்தும்: கண்டாரை வியக்கவைத்த அந்தத் திறமைகளை அந்த மனிதனிடத்திலேயே வளர்ந்தோங்கச் செய்வது, அதனுடைய அடுத்த வேலை.

தனி மனிதனிடத்தில், ஓங்கி வளர்ந்து விளங்கும் அத்திறமைகள் அனைத்தையும், சமுதாய நன்மைக்குப் பயன்படும்படியாக, அவனை வாழவைப்பதும் அந்தக் கல்விதான். சமுதாய வளர்ச்சிக்காகவே, தனது திறமைகளைப் பயன்படுத்திக் கொண்டு வாழ்பவன், சமய வாழ்வினனாக உயர்ந்துவிடுகின்றான்.

'மாநிலம் பயனுற வாழ்வதற்குச் சேவை செய்வதற்காகத்தான், தனக்கு இந்த மானிடப் பிறப்பு கிடைத்துள்ளது' என்று எவன் ஒருவன் எண்ணுகின்றானோ, அவன், முழுச் சமய வாழ்வினனாக மாற்றம் பெற்றுவிடுகின்றான். அதனால் வாழ்க்கையில் ஏற்றமும் (உயர்வு) பெற்றுவிடுகின்றான்.

பிறவிப் பயனை, பிறர்க்குத் தொண்டு செய்வதில் கண்டு மகிழும் வண்ணம், மனிதனைச் செயல்படுத்திக் கொண்டிருப்பது

எதுவோ, அதுதான், உயர்ந்த கல்வியாகும். மனிதன் தான் பெற்ற கல்வி தரத்தினை, அவனது சொல்லும் செயலும் வெளிப் படுத்திவிடும்.

**நூல்கள் :**

தரமான கல்வியை அளிக்க வல்ல நூல்கள் யாவை? தமது வாழ்க்கை அனுபவத்தில் உலக உண்மைகளைக் கண்டறிந்த ஞானிகள், எல்லாக் காலத்து மக்களுக்கும் பயன்படும் படியாக வாழ்க்கைத் தத்துவத்தை எடுத்துக் கூறியுள்ள நூல்கள்,மக்களை நல்வழிப்படுத்தும். அவைகள் தரமான கல்வி பெறவும் உதவும்.

அந்த நூல்கள், "உண்டியே உடையே" என்று உகந்து ஓடி, உலக வாழ்வில் உழன்று கொண்டிருக்கும் மக்களை மேலான வாழ்க்கைக்கு அழைத்து செல்கின்றன. தம்மோடு தொடர்பு கொண்டவர்களை, அனைத்து உயிர்களோடும் தொடர்புகொள்ள செய்து அவர்களை, மேலான சமயப் பெருவாழ்விற்கு அழைத்து செல்லும் நூல்கள் எல்லாம்; ஞானப் பெருமக்களால் அருளிச் செய்தனவாகத்தான் இருக்கும். அப்படிப்பட்ட நூல்கள் பல உண்டு நம் பாரதப் பெருநாட்டில் அவைகளுள், "அனைவராலும் எளிதாகக் கற்றுக் கொள்ளத் தகுந்த நூல் எது" என்பதையும் சுட்டிக் காட்டி உள்ளனர் நம் நாட்டுப் பெரியவர்கள்.

**கற்கத் தக்க நூல்:**

வாழ்க்கைக்கு வழிகாட்டிய வள்ளுவப் பெருந்தகை, "கற்க" என்று மக்களுக்கு முதலில் அறிவுரை கூறினார். பிறகு எப்படி கற்க வேண்டும் என்பதற்கு விடை கூறும் முறையில், "கசடு அற" (குற்றம் நீங்க)என்றார்.அதற்குப் பிறகு,"எதைக் கற்க வேண்டும்" என்ற கேள்விக்கு விடையாக, "கற்பவை" என்ற சொல்லை அமைத்தார். மனிதன் கற்ற பிறகு, அவனை கற்றதன்படியே வாழ்க்கையில் நிற்கச் (நடக்கச்) செய்வது எதுவோ, அந்தநூல் தான் வள்ளுவர் அகராதியில் கற்கத்தக்கநூல் ஆகும். (கற்பவை ஆகும்)

**இராமாயணம்:**

வள்ளுவர் வகுத்துக் காட்டிய வழியில், மனிதனை நடத்திச் செல்லும் நூல் இராமாயண காப்பியமாகும். மக்கள் கற்க வேண்டிய நூல் இராமாயணம்தான் என்ற உண்மையை தனது ஞானப் பெருவாழ்வில் கண்டவர் நம்மாழ்வார். மக்கள், கற்றுத் தெளிய வேண்டிய நூல், இராமாயணம்தான் என்பதை அழுத்தமாகக் கூற விழைந்த ஆழ்வார், அந்த கருத்தை "கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ" என்ற வினாவின் அமைப்பில், தமது திருவாய் மொழியில் பாசுரம் இட்டுள்ளார். மக்கள் தமது வாழ்க்கையில் கற்க வேண்டிய நூல் இராமாயணம்தான் என்பது நம்மாழ்வரது நிலையான கருத்தாகும்.

மக்கள், பலவிதமான உறவுகளால் பிணைக்கப்பட்டு வாழ்கின்றனர். தந்தை மைந்தன், தாய் சேய், கணவன் மனைவி மாமன் மைத்துனன், மாமி மருகி, அண்ணன் தம்பி, அரசன் அமைச்சன், என்ற இவை போன்ற உறவுகளால் கட்டுண்ட மக்கள் வாழ வேண்டிய முறைகளைத் தெளிவாகக் காட்டும் இலக்கியம் இராமாயணக் காப்பியமாகும்.

வையத்து வாழ்வாங்கு வாழும் நெறிகளுக்கு இலக்கணமாக அமைந்தது திருக்குறள். அந்த வாழ்க்கை இலக்கணத்துக்கு நல்லதொரு இலக்கியமாகத் திகழ்வது இராமாயணம் நடைமுறை இலக்கியமாக அமைந்த இந்தப் பெருங்காப்பியத்தின், கதாநாயகன், இராமபிரான், அப்பெருமான், தந்தைக்கு ஏற்ற மைந்தனாகவும்,தாய் சொல் தட்டாத தனயனாகவும் தம்பியைத் தழுவிய தமையனாகவும், ஆசாரியரைப் பணிந்த சீடனாகவும், மனைவியின் மனதுக்கு இயைந்த மணாளனாகவும் துறவிகளின் துன்பத்தைத் தீர்க்கும் தொண்டனாகவும் பகைவர்களும் பாராட்டும் பண்பாளனாகவும் வையகத்தில் வாழ்ந்து சிறந்தவன்

**இராமபிரான்:**

காப்பியத் தலைவன், இராமபிரான், 'நாட்டில் பிறந்து, படாதனபட்டு, மனிதர்க்காக, நாட்டை நலியும் அரக்கரை

நாடித் தடிந்திட்டு, நாட்டை அளித்துய்யச் செய்து நடந்தவன்' என்று நம்மாழ்வார் பாடுகின்றார். அப்படி நடந்த இராம பிரான், நாராயணன்தான் என்றும் தெளிவு படுத்தியுள்ளார், ஆழ்வார் பரம் பொருளாகிய நாராயணனையே காப்பியத் தலைவனாகக் கொண்ட ஏற்றம் பெற்றது இராமாயணம். பாற்கடலில் துயின்ற பரந்தாமனே, இராமபிரானாக அவதாரம் செய்து, நடையில் நின்றுயர் நாயகனாக வாழ்ந்து காட்டியதைக் கூறும் காப்பியமாக இராமாயண நூல் அமைந்திருந்தாலும். இந்நூலின் ஏற்றத்தைப் பற்றி வேறு வகையில் வைத்து சிந்தித்துப் பார்த்தார்கள் வைணவச் சான்றோர்கள். ஏன்?

**'அறம்தலை நிறுத்தி, வேதம் அருள் சுரந்து, அறைந்த நீதித்**
**திறம் தெரிந்து, உலகம் பூணச்செந்நெறி செலுத்தி, தீயோர்**
**இறந்து உக நூறி, தக்கோர் இடர்துடைத்து ஏக, ஈண்டுப்**
**பிறந்தனன் - தன்பொன் - பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான்.'**
**(கம் - 5885)**

திருமால், இராமபிரானாக அவதாரம்செய்ததன் நோக்கம், சிதைந்துகிடக்கும் தருமத்தை உலகத்தில் நிலைநாட்டுதல், உலகினரின் நல்வாழ்வுக்காக, வேதம் கருணைகொண்டு கூறி யுள்ள நீதிவழியில் மக்களை நடக்கச் செய்தல், இதற்கு இடையூ றாக உள்ள அல்லோர்களை அழித்தல், நல்லோர்களது துன்பங் களைத் தீர்த்தல் ஆகிய நான்கு காரியங்களைச் செய்தலாகும்.

பெருமான், இத்தகைய அரும்பெருங்காரியங்களைச் செய்து முடிப்பதற்குத் துணையாக நின்றது யார்? காரியங்களின் முழு நிறைவிற்கு, பிறர் யாராலும் ஏற்றுக்கொள்ள முடியாத பெரும் பொறுப்பினை, தானே முன்வந்து ஏற்றுக்கொண்டது யார்?

இந்த நான்கினும் மிக மிக முக்கியமானது, "தீயோரை இறந்துஉக நூலுதல்" என்பதாகும் அல்லோர்களை அடியோடு அழிப்பதற்கு அவர்கள் இருக்கும் இடத்திற்கே சென்று தாங்க முடியாத துன்பங்களைத் தாங்கிக் கொண்டு, காலத்தைக் கழித்தது யார்? பதிவிரதா தர்மத்தோடு பத்து மாதம், பகை வனின் சிறையில் பாங்காக நின்றது யார்?" இந்த கேள்விகளுக்கு

எல்லாம் விடையாக வருபவள் யாரோ அந்தப் பிராட்டியினு டைய மனத்திட்பமும் வினைத்திட்பமும் இல்லையென்றால் இராமாவதார நோக்கம் நிறைவேறுமா?" என்பதுதான், வைணவப் பெருமக்கள் உள்ளத்தில் எழுந்த சிந்தனையின் ஓட்டம்.

இந்த சிந்தனையின் ஓட்டம் சீதாப்பிராட்டியின்பால் சென்று நின்றது அவதாரநோக்கம் நிறைவேறுவதற்காக தானே முன்வந்து தன்னை அல்லலுக்கு ஆட்படுத்திக் கொண்ட பிராட்டியின் மனத்திட்பச் செயலோடு, பெருமான் செய்த அரும் பெருங்காரியங்களை ஒப்பிட்டுப் பார்த்தார்கள் வைணவச் சான்றோர்கள் அந்த ஒப்பீட்டில், பிராட்டியின் அரும் பெருஞ்செயலே மேலோங்கி நிற்பதாக உணர்ந்தார்கள் ஆழ்வாருகளும் ஆசாரியர்களும்.

**சீதாப் பிராட்டியின் சிறப்பு :**

இராமாவதாரச் செயலின் விளைவைப்பற்றிப் பேச எண்ணிய நம்மாழ்வார்,

○ **"தளிர்நிறத்தால், குறையில்லாத் தனிச்சிறையில் விளப்புற்ற**
**கிளிமொழியாள் காரணமாக் கிளர்அரக்கன் நகர்எரித்த**
**களிமலர்த் துழாய் அலங்கல் கமழ்முடியன்."**

என்று பாசுரம் இட்டு மகிழ்கின்றார்.

இராமாவதார நோக்கம் அரக்கனாகிய இராவணனை அழிப்பது. அந்த நோக்கம் நிறைவேறுவதற்குப் பெருந் துணையாக நின்றது சீதாப் பிராட்டிதான். அதுவும் அந்தப் பிராட்டி சிறையில் இருந்த போதுதான்.

'கிளர் அரக்கன் நகர் எரித்தலுக்கு, தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள் காரணமாயிருந்தாள்' என்பது இப்பாசுரப் பொருள்.

---

○ திருவாய்மொழி 4. 8. 5. கிளிமொழியாள்-சீதை: கிளர் அரக்கன்-கிளர்ச்சியை (கொழுப்பு) உடைய இராவணன்: அலங்கல்-மாலை.

இதற்கு, ஆசாரியர் கூறும் விரிவுரை (வியாக்கியானம்) இதனை நன்கு தெளிவுபடுத்துகிறது.

"தனிச் சிறை-ஒளியையும் ஒளியை உடைய பொருளையும் (சூரியனையும்) பிரித்து வைத்தாற்போலே இருப்பது, ஒன்றே அன்றோ, அரக்கியர் நடுவில், தடைபட்டவளாய் இருந்தபடி? (பிராட்டி. இராட்சசிகள் நடுவே இருக்கச் செய்தேயும் தனிச்சிறை என்பது-பிராட்டிக்கு இராமபிரானை ஒழிய வேறு தனிமை இல்லை) 'விளப்புற்ற' என்பதற்கு இரண்டு பொருள்: 1. சொல்லுதல் 2. பிரசித்தையாயிருத்தல். (விளம்புதல்-சொல்லுதல்: விளக்கம் பெறுதல்)

(விளப்புற்ற-சொல்லத்தக்க) கண்ணீரால் நிறைந்த முக முடையவளும். இரங்குதற்குரியவளும் ஆகாரம் இன்மையால் இளைத்திருப்பவளும் என்கிறபடியே; தன்னைப் பேணாதே இருந்தாள் என்று திருவடியாலே (அனுமான்) பெருமாளுக்கு விண்ணப்பம் செய்யப்பட்டவள் என்னுதல்.

(விளப்புற்ற-பிரசித்தமாக)அன்றிக்கே;'தெய்வப் பெண்கள் கால்களில் விலங்கை வெட்டி விடுகைக்காகத் தன்னைப் பேணாதே அங்கே புக்குத்தன் காலிலே விளங்கைக் கோத்துக் கொண்டவள்' என்று நாட்டிலே பிரசித்தையானவள் என்னுதல்'

கிளிமொழியாள் காரணமா திருவடி (அனுமான்) வாயிலே ஒன்று தங்கிய அவள் வார்த்தையைக் கேட்டு, அவ்வழியாலே "இனியவளும் இனிய வார்த்தையையுடையவளும்" என்றாரே அன்றோ? அதனை நினைத்துக் 'கிளிமொழியாள்' என்கிறது. அப்படிப்பட்ட வார்த்தையையுடையவள் காரணமாக என்றபடி

கிளர்அரக்கன்-கொழுத்தவனான இராவணனுடைய நகர் எரித்த எல்லாவற்றாலும் நிறைவுற்றிருந்த நகரத்தை எரித்துச் சாம்பல் ஆக்கின ★ என்பது வியாக்கியானம்

---

★திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் பக்கம்: 310, 311, 312.

"தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள் காரணமாக் கிளர் அரக்கன் நகர் எரித்த" என்ற இந்தத்திருவாய் மொழிப் பாசுரப் பகுதியும் இதன் விரிவுரையும் சீதை சிறையிருந்த சிறப்பையும் அதனை அனுமான் கூறுதலையும் இராமபிரான் அதனைக் கேட்டு மகிழ்தலையும் இலங்கை நகர எரிந்ததையும் தெளிவாகக் கூறுகின்றன.

இதனை அடிப்படையாக்கிக் கொண்டு இதில் தம் சிந்தனையைச் செலுத்திப் பார்த்தார் ஒரு ஆசாரியப் பெருமகனார் அவர் பிள்ளை லோகாசாரியர் என்ற திருப் பெயருடையவராவார்.

**பிள்ளை லோகாசாரியர் :**

இவர், வடக்குத் திருவீதிப்பிள்ளையின் மூத்த திருக் குமாரர்: அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் திருத்தமையனார்: திருவாய் மொழிக்கு ஈடு முப்பத்தாறாயிரப் படி வியாக்கியானம் அருளிய நம்பிள்ளையின் சீடர். இவரது திருத்தாயார் 'ஸ்ரீரங்க நாய்ச்சியார்' என்ற பெண் மணி யாவார்.

தமது திருத்தாயாரது அரவணைப்பாலும், திருத்தகப்ப னாரது கல்விவளச் சேர்க்கையாலும், ஆசாரியரது அருட் கடாட்சத்தாலும், ஆன்மீகத் துறையில் நன்கு வளர்ச்சி பெற்ற இவர், அருளிச் செய்த நூல்கள் பதினெட்டு என்ற எண்ணிக்கைக்கு உரியனவாகும். அவைகள் அனைத்தும் வைணவச் சமயச்சிறப்பினை விளக்குவன. அவைகள் அஷ்டாத சரஹஸ்யம்' (அஷ்ட-எட்டு: தசம் - பத்து - 18) என்று சிறப்பித்துப் பேசப்படும்.

அவைகளுள் 'ஸ்ரீவசன பூஷணம்' என்பது ஒன்று. இந்நூலின் முதல் பிரகரணத்து முதல் சூத்திரம், இந் நூலாசிரியரின் இராமாயணச் சிந்தனையை வெளியிடு கின்றது.

"இதிகாச சிரேஷ்டமான ஸ்ரீ ராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது"

என்பது சூத்திரம் இச்சூத்திரம் தளிர் நிறத்தால்' என்ற திருவாய்மொழிப் பாசுரத்திலும், அதற்கு நம் பிள்ளை அருளியுள்ள விரிவுரையிலும் (வியாக்கியானம்) இந்நூலாசிரியர், பிள்ளை லோகாசாரியர் எவ்வளவு ஆழமாகக் கருத்தைச் செலுத்தியுள்ளார் என்பதை நன்கு தெரிவிக்கின்றது.

திருவாய் மொழிப் பாசுரமும் அதன் விரிவுரையும் தெரிவிக்கும் செய்திகள் நான்கு 'சீதாப்பிராட்டியின் சிறை இருந்த சிறப்பு அதனை தெரிவிக்க வந்த அனுமான் (திருவடி) கூற்று அதனைத்தெரிந்துகொண்ட இராமபிரானின் மனநிலை இலங்கை நகரை எரித்தல்' ஆகிய இந்த நான்கு நிகழ்ச்சிகளும் ஆசாரியரின் சிந்தனையில் தாங்கிக்கொண்டுவிட்டன. இந்நிகழ்ச்சிக்கு உரியவர்கள் சிறையிருந்த சீதாப்பிராட்டி, அதனின்றும் விடுவித்த இராமபிரான், அதற்குத் துணை நின்ற அனுமான் அழிவுக்குரிய இராவணன் ஆகிய நால்வர் இந்த நால்வர் நடந்த நெறிகளையும் தமது இதயத்தில் இருத்திக்கொண்டு இராமாயணத்தின் ஏற்றம் காண்கின்றார் பிள்ளை லோகாசிரியர்.

**இராமாயண ஏற்றம் :**

★ "இதிகாச சிரேஷ்டமான" என்றது, இதிகாசங்களுள் ஸ்ரீ ராமாயணத்திற்கு 'பிறகு வால்மீகி மாமுனிவருக்கு ஒரு தவிசு கொடுக்கப்பட்டது முனிவரும், பிரமனுடைய கட்டளையை பெற்று அத்தவிசில் அமர்ந்தார்; என்கிறபடியே எல்லா உலகங்கட்கும் மூதாதையான பிரமனாலே சிறப்பிக்கப்பட்டவரான ஸ்ரீ வால்மீகிபகவானாலே கூறப்பட்டதாகையாலும்; செய்யப்படும் இந்தக்காவியத்தில் உன்வாக்கியம் ஒன்று கூடப் பொய்ப்படுவதில்லை; புண்ணியமாவதாயும் மனத்திற்கு

---

★ ஸ்ரீவசனபூஷணம் வியாக்கியானத்தின் தமிழாக்கம்.
பக் 48,49,50.

இன்பத்தைத்தருவதாயும் சுலோகங்கள் வடிவில் உள்ளதாயும் இராமாயணத்தைச் செய்வாயாக; என்று பிரமன் திருவருள் புரிந்த படியாலே, இக்காவியத்தில் கூறிய பொருள்கள் எல்லாம் மெய்யாகக்கடவன ஆகையாலும், பூமியில் மலைகளும் ஆறுகளும் எத்துணைக்காலம் இருக்கின்றனவோ, அத்துணைக் காலம் இராமசரிதை எல்லா உலகங்களிலும் பரந்து நிலைத் திருக்கப் போகிறது,' என்கிறபடியே எல்லா உலகங்களிலும் மேற்கொள்ளப்படுமதாய் இருக்கையாலும், மற்றை இதிகாசங் களைக் காட்டிலும் வலியுடைய பிரமாணமாக இருத்தலைத் தெரிவித்தபடி.

மேலும், 'வேதங்களில் பேசப்படுகின்ற பரமபுருஷன் சக்கரவர்த்தி திருமகனாக அவதரித்தவாறே, வேதங்க ளானவை, பிரசேதசின் புத்திரனான வால்மீகி பகவானிடத் தினின்றும் இராமாயண வடிவமாகப் பிறந்தன,' என்கிற படியே எல்லாரிலும் மேம்பட்டவனான சர்வேச்வரன், வினை வயப்பட்டுப் பிறந்து உழலும் இவ்வுலக மக்களைக் காப்பாற்றும் பொருட்டு, மற்றவர்களோடு ஒத்த வடிவத்தில் வந்து அவதரித்தாற்போலே, எல்லாப் பிரமாணங்களுள் உயர்ந்த பிரமாணமான வேதமும், அந்த அவதாரத்தின் குணங்களையும் செயல்களையும் கூறுமுகத்தால், மக்களுக்கு அம்மூர்த்தியைப் பற்றுதற்குச் சுவையை உண்டாக்கிக் காப்பதற்காக ஸ்ரீ ராமாயணமாக அவதரித்தது என்று சொல்லப் படுகையாலும், இதனுடைய ஏற்றமும் தடையின்றி எல்லாராலும் ஒப்புக்கொள்ளப் பட்டதாகும்.

(இத்தகைய ஏற்றம் பெற்ற இராமாணம் யாருடைய ஏற்றத்தைச் சொல்கின்றது? என்ற கேள்விக்கு விடையாக, மேலும் வியாக்கியானம் தொடர்கின்றது)

**சிறையிருந்தவள் ஏற்றம் :**

'சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது,' என்றது, பிராட்டியினுடைய பேரருளின் மிகுதியைத் தெளிவுபடுத்துவதற்காகப் 'பிராட்டி' என்னுது, 'சிறையிருந்தவள்' என்று அருளிச் செய்கிருர், தேவ தேவனுடைய பட்டத்துத் தேவியான தன்னுடைய பெருமையும், சிறையிருத்தலின் தன்மையும் (சிறுமையும்) பாராதே, தேவமாதர்களுடைய சிறையை விடுவித்தற்காகத்தான் சிறையிருந்தது பேரருளின் வசப்பட்டவளாய் அன்ரே என்றபடி, குழவி கிணற்றிலே விழுந்தால் ஒக்கக் குதித்து எடுக்கும் தாயைப்போலே, இவ் உயிர்கள் விழுந்த பிறவிப் பெருங்கடலிலே தானும் ஒக்க வந்து பிறந்து இவர்கள் பட்டதைத் தானும் பட்டுக் காப்பாற்றுகையாலே, ஒரு காரணம் பற்றி வாராத தாயாகிற சம்பந்தத்தால் வந்த அளவில்லாத அன்பு குணத்திற்கும் இது ஒரு விளக்கமாம். இந்த மேம்பட்ட குணத்தை வெளியிடுகைக்காகவன்ரே பரமாசாரியரான நம்மாழ்வார் 'தனிச் சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்' என்று அருளிச்செய்தது. அவருடைய திருவாய்மொழியன்ரே இவர் (பிள்ளை லோகாசாரியர்) சிறையிருந்தவள்' என்று அருளிச் செய்தற்கு மூலம்?' என்பது, இந்தச் சூத்திரத்திற்கு மணவாள மாமுனிகள் செய்த வியாக்கியானத்தின் தமிழாக்கமாகும்.

'என் தாயே, ஸ்ரீமத் ராமாயணமும் உன்னுடைய சரிதையைச் சொல்லியே வாழ்கின்றது' என்று 'பட்டர்' என்ற ஆசாரியப் பெருமகனாரும் கூறியுள்ளார்.

சீதாப்பிராட்டி, மிதிலையில் ஜனகப் பேரரசனின் மகளாக அயோத்தியில் தசரதப் பேரரசனின் மருமகளாக வாழ்ந்தவள்: ஆரணியத்தில் இராமபிரானைப் பிரியாத இணையற்ற மனைவியாக, பதின்மூன்று ஆண்டுகளாக உடன் நின்று உதவியவள். ஆனாலும் இந்த நிலைகளை, பிராட்டியின்

---

பட்டவர்; இவர் கூரத்தாழ்வானுடைய புதல்வர் எம்பாருடைய மாணவர் : நஞ்சீயருக்கு ஆசாரியர்.

ஏற்றமாகக் கூறவில்லை இராமாயணம் அந்தப் பிராட்டி பத்து மாதம் சிறையிருந்த நிகழ்ச்சியைத்தான் ஏற்றமாகக் கூறுகிறது காவியம். அதனால் 'சிறையிருந்தவள்' என்றே ஆழ்வாரும் ஆசாரியரும் பிராட்டிக்குப் பெயர் கொடுத்து ஏற்றம் காண்கின்றனர்

**சுந்தர காண்டம் :**

பிராட்டி சிறையிருந்த நிகழ்ச்சியை விவரிக்கும் காவியப் பகுதிக்கு சுந்தர காண்டம் என்று பெயர். இராமாயணத்து மற்றைய காண்டங்களுக்குக் கொடுக்கப்பட்ட பெயர்களோடு இதனை ஒப்பிட்டுப் பார்த்தால், இக்காண்டத்தின் சிறப்பு விளங்கும்.

முதல் பிரிவாகிய பால காண்டம் இராமபிரானது இளமைக்கால நிகழ்ச்சியைக் கூறும் (பால-இளமை) இறுதிப் பிரிவாகிய யுத்தக் காண்டம் இராம இராவண யுத்தத்தின் செயல்களை விவரிப்பது. இரண்டாம் பிரிவு, அயோத்தியில் நடந்த நிகழ்ச்சியைக் கூறுவதால் அயோத்தியாக் காண்டம் எனப்பட்டது. மூன்றாவது பிரிவு, ஆரணியத்தில் (காடு) நிகழ்ந்த நிகழ்ச்சிகளை உள்ளடக்கிக் கொண்டதால் ஆரணிய காண்டம் என்ற பெருக்கு உரியதாயிற்று. நாலாவது பிரிவு கிட்கிந்தை மலையில் நடந்த செயல்களை விளக்குவதால் கிட்கிந்தா காண்டம் என்று பெயரிடப்பட்டது.

முதலும், இறுதியும், செயல்விளக்கத்தால் பெயர் பெற்றன. இடையில் நின்ற மூன்று பிரிவுகளும் இடங்களால் பெயர் பெற்றன. சுந்தர காண்டம் மட்டும், இரண்டுக்கும் அப்பாற்பட்ட ஒன்றால் பெயர் பெற்றுக் கொண்டுள்ளது.

'சுந்தரம்' என்றால் 'அழகு' என்று பொருள். ஆறு காண்டங்களுள் அழகான காண்டம் இது. என்ன அழகு இங்கு உள்ளது?

காப்பியத் தலைவியாக விளங்கும் சீதாப் பிராட்டியின் அழகு இந்தக் காண்டத்தில்தான் சிறப்பாகப் பேசப்

படுகின்றது. அசோகவனத்தில், சோகத்தாளாய நங்கையாகச் சிறைப்பட்டிருந்த போதுதான் பிராட்டியின் அழகு ஒளிவிட்டு விளங்குகிறது.

**வள்ளுவப் பெண்மை:**

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை உண் டாகப்பெறின்." (திருக்குறள்-54)

"தெய்வம் தொழாஅள் கொழு நன் தொழுதுஎழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை." (55)

"தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்." (56)

"சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும்? மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை." (57)

என்ற நான்கு திருக்குறள் கூறும் பெண்மை இலக்கணத்துக்கு நல்லதொரு எடுத்துக்காட்டாகச் சீதாப் பிராட்டி திகழ்வதை, இந்தக் காண்டத்தில்தான் காணலாம்.

சீதாப்பிராட்டியின் அழகு, அவளது கற்புத்திண்மையால், மேம்பட்டு விளங்குகின்றது. அசோகவனத்தில் அதனைத் தன் கண்களால் கண்ட அனுமன்,ஆனந்தப் பெருக்கால் அழகு ஒளி பெற்றுத் திகழ்கின்றான். அனுமன் வாயிலாக அதனைக் கேட்ட இராமபிரானும் துயரம் நீங்கி, மலர்ந்த முகத்தினனாய் அழகுக் காட்சியன் ஆகின்றான்.

இப்படி மூவரின் அழகுக்கும் காரணமாக விளங்குவதால், இது 'சுந்தரகாண்டம்' எனப்பட்டது.

இப்பிரிவு, 'சுந்தர காண்டம், எனப்பெயர் பெறுவதற்கு வேறு ஒரு வகையிலும் பொருத்தம் உடையதாக அமைந்துள்ளது.

---

*திண்மை-உறுதி: கொழுநன்-கணவன்: தற்கொண்டான்-தன்னை மனைவியாக ஏற்றுக்கொண்ட கணவன்: தகை-புகழ்: கொழுநன்-கணவன்: நிறை-கற்பின் நிறைவு.*

---

சீதாப் பிராட்டி கற்புத்திறத்தால் அழகு பெற்றிருந்தாலும். அதனைக் கண்டதும், கண்டதை, இராமபிரானிடம் எடுத்துக்கூறியதும் அனுமன் தான்.

**காண்டத்தின் தலைவன் :**

அனுமனுக்குச் 'சுந்தரன்' என்ற ஒரு பெயர் உண்டு சுந்தரனே (அனுமனே) இந்தக்காண்டத்தில் கூறப்படும் செயல்களுக்கு உரியவனாக விளங்குவதாலும் இப்பெயர் பெற்றது என்னலாம்

இந்த காண்டத்துள் அமைந்த உட்பிரிவுகளின் பெயர்களைக் கவனித்துப் பார்த்தால் இந்த உண்மை விளங்கும் 1. கடல் தாவு படலம் 2. ஊர்தேடு படலம் 3. காட்சிப் படலம் 4. உருக்காட்டுப்படலம் 5. சூடாமணிப்படலம் 6. பொழில் இறுத்த படலம் 7. கிங்கரர் வதைப்படலம் 8. சம்புமாலி வதைப்படலம் 9. பஞ்சசேனாபதிகள் வதைப் படலம் 10. அக்ககுமரன் வதைப்படலம் 11. பாசப்படலம் 12. பிணிவீட்டுப் படலம் 13. இலங்கை எரியூட்டுப்படலம் 14. திருவடி தொழுதபடலம். என்பவைகள் படலப்பெயர்கள்

இவைகளை வைத்துக் கேள்வி கேட்டுப் பார்த்தால் அதற்கு விடையாக வருவது 'அனுமன்' என்ற சொல்லாகத் தான் இருக்கும். கடலைத் தாவியது யார் ? ஊரில் தேடியது யார்? காட்சியைக் கண்டது யார்? உருவைக் காட்டியது யார்? சூடாமணியைப்பெற்றது யார்? பொழிலை இறுத்தது யார்? கிங்கார்,பஞ்சசேனாபதிகள்,அக்ககுமரன் ஆகியவர்களை வதைத்தது யார்? பாசத்தில் கட்டுண்டது யார்?பிணியினின்றும் விடுவித்து கொண்டது யார் ? இலங்கையை எரி ஊட்டியது யார் ? திருவடியைத்(இராமபிரனை) தொழுதது யார்? இந்த கேள்விகெல்லாம் ஒரே பதில் அனுமன் (சுந்தரன்) என்பதுதான்.

அதனால் சுந்தர காண்டம் எனப் பெற்றது என்பதும் ஒரு அழகுதான் இந்தச் சுந்திரன் தனது திறமைகளை வெளிப் படுத்தாமற் போயிருந்தால்,சீதாப்பிராட்டியின் கற்புத்திண்மை

இராமபிரானுக்குத் தெரிந்திருக்காது சிறையிருந்தாளுடைய ஏற்றத்தை, வெளி உலகில் ஏற்றி வைத்தவன் இந்தச்சுந்தரன் தான் (அனுமன்) அதனால் இந்த அனுமனும் ஏற்றத்துக்கு உரியவனாகின்றான்.

**காணாதவர் கண்டனர் :**

சிறையிருந்த செல்வி அனுமனை இதற்கு முன்பு கண்டதில்லை செல்வியைத் தேடி வந்த அனுமனும் பிராட்டியை இதற்கு முன்பு கண்டதில்லை. ஒருவருக்கு ஒருவர் காணாதவர்களாக இருந்தவர்கள் அசோகவனத்தில் காண்பவர்களாயினர். காட்சிக்குக் காரணம் பிராட்டியின் கற்புத்திண்மையும், அனுமனது கல்வித்திறமும் ஆகும். காணாதவர்களைக் காண வைத்ததும் இக்காண்டத்தின் சிறப்புகளுள் ஒன்றாகும்.

இராமபிரான் கொடுத்திருந்த அடையாளப் பொருளாகிய திரு ஆழியை (மோதிரம்) சீதாப்பிராட்டிகண்டு மகிழ்ந்ததும், பிராட்டி கொடுத்தனுப்பிய சூடாமணியைப் பெருமான் கண்டு மகிழ்ந்ததும் இந்தக் காண்டந்து நிகழ்ச்சிகள்தான்.

**பாராயணப் பகுதி :**

இப்படிப் பலவகையாலும் சிறப்புப் பெற்று விளங்கும் இந்தச் சுந்தரக் காண்டம், இராம பக்தர்களின் அன்றாடப் பாராயணத்துக்கு, உரியதாகும் என்று நம் முன்னோர்கள் உரைத்துள்ளனர்.

இதனைப் பாராயணம் செய்வதால் ஏற்படும் நன்மைகள் பலவாகும் இழந்த பொருளை மீட்டுக் கொள்ளலாம் பிராட்டிக்கு மோதிரமும், பெருமானுக்குச் சூடாமணியும் கிடைத்தது போல வாழ்க்கையில் எதிர்பாராத உயர்ந்த பல பரிசுகள் கிட்டலாம் அனுமனுக்கு, பிராட்டி தரிசனமும் பெருமான் தரிசனமும் கிடைத்தது போன்று தெய்வ தரிசனம் கிடைக்கலாம். பிராட்டியும் பெருமானும் உளம் உவந்து அளித்த ஆசிர்வாதம் அனுமனுக்குக் கிட்டியது போன்ற,

பெரியவர்களின் ஆசீர்வாதம் வந்து சேரலாம் பிறரால் தேடிக் கண்டுபிடிக்க முடியாத பிராட்டியை தேடிக் கண்டுவந்த அனுமன் தன் ஆற்றலால் ஏற்றம் பெற்றதுபோன்று, வாழ்க்கைப் போக்கில் பல உண்மைகளைக் கண்டறியும் ஆற்றலின் வளர்ச்சியினால் ஏற்றம் (உயர்வு) பெற்றுவிளங்கலாம்.

**அமைப்பு :**

இவ்வளவு நன்மைகளைத் தரவல்ல கம்பராமாயணச் சுந்தரகாண்டம் ஏறக்குறைய ஆயிரத்து முந்நூற்று இருபது (1320) கவிதைகளைக் கொண்டது. பதினான்கு படலங்களாகிய உட்பிரிவுகளைக் கொண்டது. இன்றைய காலப்போக்கில், இவ்வளவையும் அன்றாடம் பாராயணம் செய்வது யாருக்கும் எளியதொன்றல்ல. அதனால் இதன் சுருக்கமாக ஒரு நூல் அமையுமானால், அதுயாவருக்கும் பயன்படுவதாக இருக்கும். அந்தச் சுருக்கமும், இதன் முழுப் பொருளையும் உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். அந்த அமைப்பினை, இந்தக் காண்டத்தின் இறுதிப் படலத்தில் காணலாம்.

**திருவடி தொழுத படலம் :**

'சீதாப் பிராட்டியைத் தான் கண்டுவந்த செய்தியை, அனுமன் திருவடியாகிய இராமபிரானைத் தொழுது சொன்னது.' என்பது இப்படலப் பொருள் அனுமன் சொன்ன செய்தி இருபத்திரண்டு (22) கவிதைகளில் அடங்கியுள்ளது. சுந்தரகாண்டத்தின் ஏற்றமான கருத்துக்கள் அனைத்தையும் இந்த (22) கவிதைகளில் சுருக்கமாகச் சொல்லி விடுகின்றான் அனுமன். சொல்லின் செல்வன் அல்லவா?

இதன் முன்னும் பின்னுமாக அமைந்த கவிதைகள் முப்பது. ஆக 52 கவிதைகளைக் கொண்டது இந்த இறுதிப் படலம்.

**ஆற்றல் :**

பெருக்கத்தைச் சுருக்கித்தரும் ஆற்றல் எங்கிருந்து வந்தது அனுமனுக்கு. இவன்கற்ற கல்வி அத்தகையது. 'பண்டை நூல் முறையை, கதிரவன் (சூரியன்) முன்சென்று

கற்றவன்' என்றும், 'இவன் கல்லாத கலை உலகத்து எங்கும் இல்லை' என்றும் 'நுணங்கிய கேள்வியன்' என்றும், 'கவிக்கு நாயகன்' என்றும் பலபடியாக அனுமன் பெற்ற கல்வி பற்றிப் பேசப் பட்டுள்ளது.

பெற்ற கல்வி, அனுமனது திறமைகளை வளர்த்தது: அதனை வெளிப்படுத்தியது: வளர்ந்து வெளிவந்த திறமைகளை உலக நன்மைகளுக்குப் பயன்படச் செய்தது. தன்னைப் பெற்ற அனுமனை இராம பக்தனாக்கி ஏற்றம் பெறச் செய்ததும் அந்தக் கல்விதான்.

கற்ற கல்வி, அனுமன் தனது உடலைச் சுருக்கவும் பெருக்கவும் செய்தற்குரிய ஆற்றலையும், உரையைச் (சொல்லை) சுருக்கவும் பெருக்கவும் செய்தற்குரிய ஆற்றலையும் அனுமனுக்குத் தந்துள்ளது.

சீதாப் பிராட்டிக்கும் இராமபிரானுக்கும் தனது உடலைப் பெருக்கிக் காட்டியும், உரையைச் சுருக்கிக் காட்டியும் தனது ஆற்றலை வெளிப்படுத்தி உள்ளான் அனுமன்.

இராமபிரானிடம் கூறிய சுருக்கிய உரையில்தான் சீதாப் பிராட்டியை, 'பெருந்தெய்வம்' என்று அனுமன் வெளிப்படுத்தி உள்ளான். தெய்வமாக விளங்கும் இராமபிரானிடமே, சீதாப் பிராட்டியை, பெருந்தெய்வமாக, தான் கண்ட காட்சியைக் கூறிமகிழ்கின்றான் அனுமன். 'பெருமான், தெய்வம்: பிராட்டி பெருந் தெய்வம்' இப்படிச் சொல்வது ஏற்புடையதுதானா? பொருத்தம்தானா? அனுமனது உள்ளத்து உணர்ச்சியோடு ஒன்றி நின்று இதனை ஆய்வு செய்ய வேண்டும்.

இதனைத் தெரிவிப்பது திருவடி தொழுத படலம். திருவடி என்பது யார்? தொழுதது என்பது எப்படி? இதுவும் கவிச்சக்கரவர்த்தியின் கவி உள்ளத்தோடு ஒன்றி நின்று ஆய்வதற்குரிய ஒன்றாகும்.

திருவடியின் பெருந் தெய்வத்தைக் கண்டு சேவிக்க உள்ளே செல்வோம்.

# உ. காலக் கழிவும் கவலைப் பெருக்கமும்

**காலம் :**

காலம், கடந்து கொண்டே இருக்கிறது: ஓடிக்கொண்டே இருக்கிறது. அது, எங்கும் நிற்பதும் இல்லை: என்றும் நின்றதும் இல்லை: யாருக்காகவும் எதற்காகவும் தனது போக்கைக் குறைப்பதும் இல்லை: நீட்டிப்பதும் இல்லை: யாருடைய கட்டுப் பாட்டுக்கும் தன்னை உட்படுத்திக் கொள்வதும் இல்லை. எங்கும், என்றும், எவருக்காகவும் தனது கொள்கையை விட்டுக் கொடுக்காமல் சுதந்திரமாகச் சுற்றிக்கொண்டிருப்பது, காலம் என்ற கணிப்பரிய ஒரு பொருள்தான்.

அந்தக் காலமும், தன்னை மக்கள் கணித்துக் கொள் வதற்கு. கதிரவனைக் (சூரியன்) கருவியாகக் காட்டிக் கொடுத்துள்ளது. கதிரவனை அளவு கருவியாகக்கொண்டு, நாள், வாரம், மாதம், ஆண்டு, யுகம் என்று மக்கள் தன்னைக் கணக்கிட்டு மகிழும் அளவிற்கு, எளிமைப் படுத்திக்கொண்டும் விளங்குகிறது.

**கிட்கிந்தை :**

காலக் கணிப்புக்கு எவன் ஒருவன் அளவு கருவியாக இருக்கின்றானோ, அந்தக் கதிரவனது புதல்வன் (சுக்கிரீவன்) ஆட்சிக்கு உட்பட்டது கிட்கிந்தை மலை. இந்த மலையில், இப்பொழுது காலத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருப்பவர்கள்.

கதிரவன் புதல்வனாகிய சுக்கிரீவனும், அந்த, சூரிய வமிசத்தைச் சேர்ந்தவனான இராமபிரானும்.

இராமபிரான், 'காலமும் கணக்கும் நீத்த காரணன்'தான். ஆனாலும். மனித உருத்தாங்கிய பிறகு, அதற்கேற்ப காலத்தில் கட்டுண்டு தங்கியவனாகக் காட்சி அளிக்கின்றான் கதிரவன் புதல்வனுக்கு. எல்லோருடைய துன்பத்தையும் நீக்கி, அவர் களுக்கு ஆறுதல் சொல்லவந்த இராமபிரானுக்கு, சுக்கிரீவன் ஆறுதல் மொழி கூறும் நிலையில் உள்ளது இப்போதைய காலம். கிட்கிந்தை மலைக்கு இப்போது வந்திருக்கும் காலம். 'ஒருவன் எவ்வளவு பெரியவனாக இருந்தாலும், தன்னைவிடத் தாழ்ந்தவனிடத்திலும் ஏதாவது ஒன்று கேட்டுப் பெறவேண்டிய நிலைமை ஏற்படலாம்' என்ற பேருண்மையை உலகுக்கு உணர்த்திக் கொண்டுள்ளது.

**காலக் கழிவு :**

சீதாப் பிராட்டியைத் தேடிக் கண்டுபிடித்து வருவதற்கு சுக்கிரீவனது படைகள் நான்கு திக்குகளுக்கும் அனுப்பப் பட்டுள்ளன. காணாமல் போன பிராட்டியை கண்டு பிடித்து மீண்டு வருவதற்கு ஒரு காலக்கெடு கொடுக்கப்பட்டுள்ளது கண்டு மீண்டு வரவேண்டிய காலம் கழிந்து கொண்டிருக்கின் றது. காலம் கெடுவின் எல்லையை எட்டிக் கொண்டுள்ளது. குறித்த காலம் நகர்கிறதா? ஓடுகிறதா? காலம் மெள்ள மெள்ள நகர்வதும், விரைந்து ஓடுவதும் அதனிடத்தில் இல்லை. அந்தக் காலத்தில் நிற்கும் மனித உள்ளத்தில்தான் உள்ளது காலம் நகர்தலும் ஓடுதலும்.

காலம் கழியக் கழிய கவலை பெருகிக்கொண்டே உள்ளது குறித்த காலம் சுருங்குகிறது உள்ளக் கவலை பெருகுகிறது. காலமும் கவலையும் எதிர்விகிதத்தில் நடமாடிக் கொண்டிருக் கின்றது கிட்கிந்தை மலையில்.

இந்த மலையிலிருந்து அனுப்பப்பட்ட வானவீரர்கள் பிராட்டியைக்கண்டு மீண்டுவர வேண்டிய காலம் ஒரு மாதம்

என்று குறிக்கப்பட்டிருந்தது குறிக்கப்பட்ட காலம் குறுகக் குறுக இராமபிரானது திருவுள்ளத்தில் கவலை எதிர் விகிதத்தில் பெருகிக் கொண்டே இருப்பதை சுக்கிரீவன் கண்டான், கவலைதோய்ந்த திருமுகத்தைக்கண்ட சுக்கிரீவன், இராமபிரானுக்கு ஆறுதல் மொழி கூறிக் கொண்டிருக் கின்றான்.

அந்த நேரத்தில், வெளியில்சென்ற வானவீரர்கள் வெறுங் கையோடு மீண்டனர் இவர்கள் மேற்கு, வடக்கு, கிழக்கு திக்குகளுக்கு அனுப்பப்பட்டவர்கள்.

★ 'தண்டல் இல் நெடுந்திசை மூன்றும் தாயினர் கண்டிலர் மடந்தையை' என்னும் கட்டுரை, இராமபிரான் திருவுள்ளத்தை மிக மிக வருத்தியது கவலைக்குக் காரணம்

**'ஆரியன் அருந்துயர்க் கடலுள் ஆழ்பவன்,**
**'சீரியது அன்று நம் செய்கை; தீர்வு அரும்**
**மூரிவெம் பழியொடும் முடிந்ததாம்' என**
**சூரியன் புதல்வனை நோக்கிச் சொல்லுவான்' (கம் 6022)**

இராமபிரான் தனது உள்ளக்கவலை உணர்வை சூரியன் புதல்வனான சுக்கிரீவனுக்கு, சொல்லால் உணர்த்துகின்றான்

ஆரியன் அருந்துயர்க்கடலுள் ஆழ்பவனான காலமாயிற்று இப்போது பாற்கடலுள் துயின்றவன் துயர்க்கடலுள் ஆழ் கின்றான். ஆரியன்-மேலோன் பெரியவன் மேலோனுக்கு, துயர்க்கடலுள் மூழ்கும் கீழ்மை நிலையா ?

என்ன கீழ்மை? சீதாப்பிராட்டியை இன்னும் தேடிக்கண்டு பிடிக்காமல் சோர்வுடன் இருத்தல் சிறப்பு(சீரியது)உடையது

---

★ கம் : 6021 தண்டல்-தடை : தாயினர்-தாவினவர் : மடந்தை-சீதாப்பிராட்டி : கட்டுரை-பொருள் பொதிந்த வார்த்தை. (உறுதியான உரை)

அல்ல; சொந்த மனைவியைத் தேடிக்கண்டு பிடித்து, அவளை மீட்கமுடியாத நிலைமையை உலகத்தினர் கண்டு பழிப்பார்கள் இந்தபழிச்சொல் என்றும் நீங்காத பெரியகொடுமையானதாக அல்லவா இருக்கும் நாம் சீர்மை பெறுவது எப்போது? பழி நீக்கம் பெறும் காலம் வருவது ஏப்போது? இவைதான், இராமபிரான் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருந்தது.

**இராமபிரான் ஐயம் :**

'பிராட்டியைக் கண்டு மீள்வதற்கு வரையறுக்கப்பட்ட ஒரு மாத காலம் கழிந்து விட்டது. தெற்குத்திசை நோக்கிச் சென்ற வானரவீரர்கள் இன்னும் நம்மை நோக்கி வரவில்லை அதனால், அவர்கள் உயிர்துறந்திருப்பார்களோ' உயிர் துறப்பதற்கும் காரணம் உண்டு யாரைத்தேடிக் கண்டுபிடிக்கப் புறப்பட்டார்களோ, அவள் இறந்திருக்கக்கூடும்' சிறந்தசெய்தி யைச் சொல்ல வேண்டிய நாம், பிராட்டி இறந்த செய்தியை ஏன் சொல்ல வேண்டும் என்று அந்த வானரர்கள் உயிர் துறந்திருக்கலாம் அல்லது இன்னமும் தேடித்திரிகின்றார் களோ'?

அல்லது, ஒருவேளை வானரர்கள் அரக்கரைக் கண்டிருப் பார்கள் அவர்களோடு போர் நடந்திருக்கும் அரக்கர்களது வஞ்சனைமாயையால், வானரவீரர்கள் வானகம் சென்றிருப் பார்களோ? அல்லது அரக்கரது சிறையில் அகப்பட்டுக் கொண்டு விட்டனரோ?' இவை உள்ளத்து எழுந்த ஐய உணர்வுகள்.

அனுப்பப்பட்ட தூதுவர்கள் குறித்த காலத்துக்குள் வரவில்லையென்றால், அவர்களுக்கு நடவாத ஆபத்துகள் நடந்துவிட்டனவோ என்று எண்ணுவது சாதாரணமான மனித இயல்பு. அன்பிற்கனிந்த உள்ளம், ஆபத்துகளை எண்ணி எண்ணி அஞ்சி வருந்துவது மனிதனுக்கு இயல்பாக அமைந்த ஒன்றாகும். இந்த இயல்பு இராமபிரானையும் விட்டபாடில்லை.

இறுதியாக, 'அந்த, தென்திசை சென்ற வீரர்கள் என்ன நினைத்து, என்ன செயலில் ஈடுபட்டிருந்திருப்பார்கள்' என்று இராமபிரான் சுக்கிரீவனிடம் கூறுகின்றான்.

1. **'கூறின நாள் அவர் இருக்கை கூடலம்**
**ஏறல் அஞ்சுதும்' என இன்ப துன்பங்கள்**
**ஆறினர்,அருந்தவம் அயர்கின்றார்கொலோ ?**
**வேறு அவர்க்கு உற்றது என் ? விளம்புவாய் என்றான்'**
**(கம் 6026)**

இக்கவிதை இராமபிரானின் ஐய உணர்வைத்தெளிவாக வெளிப்படுத்துகின்றது.

தென்திசை சென்ற வீரர்களது நினைவு 'நாம் சீதாப் பிராட்டியைத் தேடிக்கண்டுபிடித்து வந்து அந்த நற்செய்தியை சொல்வதற்காக வரையறுக்கப்பட்ட காலம் ஒரு மாதம். அக் காலம் தீர்ந்துவிட்டது இனி எப்படி இராமபிரான் இருக்கும் இடம் சென்று சேர்வது ? அதனால் அச்சம்தான் மேலிடு கின்றது ? என்பதுதான் வீரர்கள் எண்ணம்.

இந்த எண்ணத்திற்குப்பிறகு என்ன முடிவுக்கு வந்திருப் பார்கள்.

கண்டு பிடித்த நற்செய்தி சொன்னால் இன்பம். இல்லை என்றால் துன்பம். காரியம் கைகூடவில்லை அதனால் துன்பமே ஆகவே, நம் செயலால் கிடைக்கக் கூடிய இன்ப துன்பங்களைத் தணித்துக் கொள்வோம். இன்ப துன்பங்கள் ஆறிய (தணிந்த) பின்பு செய்ய வேண்டியது, தவம் தானே ! இன்ப துன்பங்களைத் துறந்தவர்கள் மேற்கொள்வதற்கு உரியது தவவாழ்க்கைதானே; இனி 'அருந்தவம் செய்வோம் எனத் துணிந்து அந்தச் செயலை செய்வது என்று முடிவுக்கு வந்து விட்டார்கள்.

---

இருக்கை-இருப்பிடம் : கூடலம்-அடைந்தோம் இல்லை : ஏறல்-சேருதல் : அயர்கின்றார்-செய்கின்றார்கள் : விளம்புவாய்-சொல்லுவாய்.

காலக்கழிவு, வானரவீரர்களது நினைவும் செயலும் இப்படி இருக்குமோ என்று சந்தேகப்படச் செய்கிறது.

'என் எண்ணம் இப்படி ஐயப்படச் செய்கின்றது, அவர்கள் வராததற்கு, உனக்குத் தெரிந்த வேறுகாரணம் ஏதேனும் இருக்குமானால் கூறுக' என்று சுக்கிரீவனைப் பார்த்துக் கேட்டான் இராமபிரான்.

இராமபிரான் தவ வாழ்க்கையன் ஆதலால், காரியம் கைகூடாத வானர வீரரும், தவ வாழ்க்கையையே மேற் கொண்டிருப்பார்கள் என எண்ணுகின்றான்.

'வேறு அவர்க்கு உற்றது என்?' என்ற இராமபிரானது கேள்விக்கு, சுக்கிரீவன் என்னவிடை கூறமுடியும்? விடைகூற வேண்டிய சங்கடத்தைச் சுக்கிரீவனுக்குக் கொடுக்கவில்லை கவிச்சக்கரவர்த்தி கம்பன்.

அடுத்த கவிதையிலேயே, அனுமனின் வருகையை அமைத்துக் காட்டி விட்டார் கம்பர் பிரான்.

**தெரிவது ஆயினான் :**

2. **என்புழி, அனுமனும், இரவி என்பவன்**
**தென்புறத்து உளன் எனத் தெரிவது ஆயினான்**
**பொன்பொழித் தடக்கைஅப் பொருஇல் வீரனும்**
**அன்புறு சிந்தையன் அமைய நோக்கினான் (கம் ; 6027)**

இக்கவிதை அனுமனின் வருகையையும், இராமபிரான் அதைநோக்கியதையும் கூறுகின்றது.

என்புழி "வேறு அவர்க்கு உற்றது என்? விளம்புவாய்' என்று இராமபிரான் சுக்கிரீவனைக் கேட்டுக் கொண்டிருந்த போது; அனுமனும் தெரிவது ஆயினான்: யாரைப்போல? சூரியனைப் போன்று அனுமன் எல்லோருக்கும் தெரிவதாயினான். அனுமன் தென்திசையிலிருந்து வருபவன்: அதனால் 'இரவி என்பவன் தென்புறத்து உளன்' என இல்பொருள் உவமை கூறப்பெற்றது. (இரவி-சூரியன்)

சூரியன் வருகை இருளைப் போக்கி ஒளியைக் கொடுத்து இருட்டில் காணாது கிடந்த பொருள்களைக் காண்பித்து எல்லோரையும் மகிழ்விக்கும். அதுபோல, அனுமனது வருகையும், இராமபிரான் உள்ளத்துள் இருக்கும் சந்தேகமாகிய இருட்டைப் போக்கும் இன்பமாகிய ஒளியைக் கொடுக்கும் துயரத்தால் காணாது இருந்த சீதாப்பிராட்டியின் கற்புத் திண்மையைக் காட்டும் இராமபிரானுக்கு அளவற்ற மகிழ்ச்சியையும் கொடுக்கும்.

அனுமனுக்கு சூரியனை உவமையாக்கியது இந்தக் கதை நிகழ்ச்சிக்கு மிக மிகப் பொருத்தமாகும். அனுமனது வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருப்பவர்கள் சூரியன் புதல்வனும் (சுக்கிரீவன்)சூரியவமிசத்தினான இராமபிரானும் ஆக இருத்தலால் அனுமனத்தோற்றத்தில் சூரியதோற்றத்தைத் தொட்டுக்காட்டியது,கவிதைக்கு மேலும் சுவை கூட்டுகின்றது

தென்புறத்தில் அனுமன் **வந்தான்** என்று கவிதையில் இல்லை. 'வந்தான்' என்றால் அது அனுமனது செயலாகும் 'தெரிவது ஆயினான்' என்றால், எதிரில் அமர்ந்திருக்கும் இராமபிரான் தனது வருகையைத் தெரிந்துகொள்ளுமாறு தென்புறத்துத் தோன்றினான் அனுமன்.

தென்புறத்துத் தெரிந்த தோற்றத்தை நோக்கியது யார்? எப்படி நோக்கம் இருந்தது? என்பதை பின் இரண்டு அடிகள் தெரிவிக்கின்றன.

நோக்கியவனும் ஒரு விரன்தான். எப்படிப்பட்ட வீரன். உயர்ந்த பொன்னையே, தன்னை நோக்கிவரும் இரவலர் களுக்கு ஏராளமாகக் கொடுத்துக் கொண்டிருக்கும் பெரிய கையை உடைய வீரன். (பொன் பொழி தடக்கை வீரன்) யாருக்கும் ஒப்பு இல்லாத வீரன். (பொரு இல்வீரன்) (பொரு-ஒப்பு.) இத்தகைய வீரனாகிய இராமபிரான் தென் புறத்தில் தெரியும் தோற்றதை அன்பு நிறைந்த மனத்தினனாக அமைதியாக நோக்கினான் நோக்கம் - கருத்தோடு கூடிய பார்வை.

கவிதையின் முதல் இரண்டு அடிகள் தெரிபவனைக் காட்டுவன, இறுதி அடிகள் இரண்டும் நோக்குபவன் நிலையைத் தெரிவிப்பன. நோக்கும் இராமபிரான் தன்னிடம் வருபவர்களுக்கு, பொன்போன்ற உயர்ந்த பொருள்களை வாரி வாரிக் கொடுத்து அவர்களை மகிழ்ப்பவன். அத்தகைய இராமபிரானுக்கு, இன்ப ஒளியைக் கொடுத்து, அருந்துயர்க் கடலுள் ஆழ்ந்திருந்த அப்பெருமானை மகிழ்ச்சிக் கடலில் திளைக்கவைக்க அனும ஒளி தென்திசையில் தெரிவதாயிற்று.

தெரிவதான அனுமன் நிலையையும், நோக்கியவனான இராமபிரான் நிலையையும் சேர்த்து வைத்துக் காட்டும் இக்கவிதை. கதைப் போக்கிற்கு மிகுந்த சுவையளித்துக் கொண்டிருக்கிறது.

தெரிந்த அனுமன், நோக்கிய வீரனை நெருங்கிவிட்டான். இராமபிரானை எய்திய அனுமன், வந்ததும் என்ன செய்தான்? செய்த செயல் தொடர்கிறது அடுத்த கவிதையில்.

# 3. வாழ்த்தினான்

3 எய்தினன் அனுமனும்: எய்தி, ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன்: முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன். கையினன்,
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்தினான்.
(கம் - 6028)

அனுமனது வருகையை, ஆர்வத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த இராமபிரானை அடைந்த. அந்தத் தூதுவன் எப்படி நடந்து கொண்டான் என்பதைச் சுவைபடச் சொல் கின்றது இந்தக்கவிதை.

**வாழ்த்து :**

யாரை, யார் வாழ்த்துவார்கள்? உலகத்தினர் அனைவரும் நல்வாழ்வு வாழவேண்டும் என்பதற்காகத் தனது வாழ்க்கையில், துன்பத்தைத் தாங்கிக்கொண்டு யார் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்களோ, அவர்கள்தான் வாழ்த்துப் பெறுவதற்குத் தகுதியுடையவர்களாவார்கள்.

உள்ளத்தாலும் உரையாலும் உடலாலும் (மனம், மொழி மெய்) யார் ஒருவர் மிக மிகத் தூய்மை பெற்றவராகச் செயலாற்றிக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள்தான், வாழ்த்துவதற்குத் தகுதி பெற்றவர்களாவார்கள்.

அத்தகைய முழுத்தகுதி பெற்ற வில்லிதன் தூதன்அனுமன் தான், வாழ்த்தினான். யாரை வாழ்த்தினான்?

அந்தச் சொல்லின் செல்வன் வாழ்த்து, எதிரில் தெய்வமாகவும் தலைவனாகவும் அமர்ந்திருக்கும் இராமபிரானுக்கு உரியதாக இல்லை.

தனக்குப் பெருந் தெய்வமாகக் காட்சியளித்த சீதாப் பிராட்டியைத்தான் முதலில் வாழ்த்தினான் அனுமவீரன்.

வாழ்த்தும்போது, அந்தச் செயல் வீரனின் நிலையை, இதற்கு முந்தைய சொல் விளக்குகின்றது. 'இறைஞ்சி வாழ்த்தினான்' வணங்கி வாழ்த்தினான். வணக்கமும் நின்ற நிலையில் அல்ல! மண்ணுறப்பணிந்து வணங்கி வாழ்த்தினான் (சாஷ்டாங்க நமஸ்காரம்) தெய்வத்தை வணங்கும் முறை இதுதானே!

இந்தத் தெய்வப்பக்தன், தனது பெருந்தெய்வத்தை வாழ்த்திய முறையில் இராமபக்தனாகிய் கம்ப நாட்டாராழ்வார் எவ்வளவு ஈடுபாடு கொண்டுள்ளார் என்பதை, கவிதையின் ஈற்றடி தெளிவாக்குகின்றது.

'வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்தினான்!

**வையகம்:**

நிலம் என்றுதான் இந்தச் சொல்லுக்குப் பொருள் 'மண்' என்றோ, 'பூமி' என்றோ சொல்லாமல்,' வையகம், என்ற சொல் அமைக்கப்பட்டிருப்பது ஒரு சிறப்பு கருதிதான். என்ன சிறப்பு?

அனுமனால் வாழ்த்தப்படும் பிராட்டி, முன்பு வானுறையும் தெய்வமாக இருந்தவள் தான் 'இப்பொழுது இந்த வையகத்துக்கு வந்து தோன்றி வையத்து வாழ் வாங்கு வாழ்ந்து அம்முறையை பெண் இனத்தவருக்கு எடுத்துக் காட்டி, பெருந்தெய்வமாக விளங்குகின்றாள்' என்ற கருத்தை அனுமன் உள்ளத்து உணர்வோடு ஒட்டிவைத்துப் பார்த்தால் 'வையகம்' என்ற சொல்லின் சிறப்பு விளக்கும்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும் (50) என்ற திருக்குறள் கருத்தை நினைவுபடுத்தும் சொல்லாகவும் அமைந்துள்ளது இது.

**தழீஇ :**

'தழுவி' என்று இதற்குப் பொருள். அதாவது கீழே விழுந்து இதனைக் குறிப்பதற்கு ஒரு அளபெடைச் சொல்லை அமைத்துள்ளார் கவிஞர். அளவு நீண்டு வந்துள்ளது. தழுவுதல் என்ற சொல்லை 'தழுவி' என்ற எச்சப்பொருளில் காட்டுவதற்கு 'ழீஇ' என்ற அளபெடைவந்தது என்று இலக்கணப்புலவர்கள் காரணம் கூறுவர் அது, இலக்கண அமைப்புக்குப் பொருத்தமானாலும், இந்த செயலுக்கு உரியவனுடைய உணர்வோடும், அடுத்த சொல்லோடும் இணைத்து வைத்துப் பார்த்தால்தான் இச்சொல் அளபெடையின் உண்மைப் பொருள் விளங்கும்.

அளபெடையின் கால நீட்சி (ழீ : நெட்டெழுத்து இரண்டு மாத்திரை காலம் : 'இ' குற்றெழுத்து ஒரு மாத்திரை காலம்) அடுத்த சொல்லாகிய 'நெடிது' என்ற சொல்லின் பொருளைத் தெளிவாக்குகின்றது.

**நெடிது :**

இந்த சொல் 'நீண்டு' என்று பொருள் தரும். கீழே விழுந்து வணங்கிய அனுமான், நீண்டு-நீளமாக மண்ணில் கிடந்தான் என்றும் பொருள் சொல்லலாம். அதுசிறப்பு அன்று. நீண்டு'-'நெடிது' என்பது, பக்த அனுமான் கீழே விழுந்து வணங்கிக் கிடந்த காலத்தின் நீளத்தைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும் தன் உள்ளத்தைக் கவர்ந்த பெருந்தெய்வத்தை வணங்கும் போது, அனுமன் அந்த நிலையிலேயே நீண்ட நேரம் கிடந்தான். இப்படி நிலம் தோய வீழ்ந்து நீண்ட நேரம் வணங்கிக் கொண்டிருந்த அனுமான் 'வாழி ஜானகி' என்று வாழ்த்தினான்.

நெடிது என்ற சொல்லின் கால நீட்சியை வணங்கிய காலத்திற்கும் கொள்ளவேண்டும். வாழ்த்திய காலத்திற்கும்

கொள்ளவேண்டும். அனுமன் தன் பக்தி உணர்வின் மிகுதியினால், 'ஜெய் சீதா ஜெய் சீதா' என்று நீண்ட நேரம் வாழ்த்தினான். நீண்டநேரம் வணங்கியும் கிடந்தான்.

பெருமானுக்கு முன் நின்று பிராட்டியை வாழ்த்திய அனுமப்பக்தன், அசோக வனத்தில் உயிர்விடத் துணிந்து நின்ற சீதாப் பிராட்டிக்கு முன்நின்று, தொழுதுகொண்டு 'வாழிராகவன்' என்றும், 'ஸ்ரீராம் ஜெயராம்' என்றும் சொல்லி பெருமானை வாழ்த்தினான்.

எந்த இடத்தில் எந்த சந்தர்ப்பத்தில் எப்படிச் சொல்வது என்பதை அறிந்த 'சொல் வல்லான்' அல்லவா வந்திருக்கும் அனுமன்.

பிராட்டிக்கு முன்னால் இராம பக்தனாகத் தோன்றிய அனுமன் இராமபிரானுக்கு முன்னால் சீதாப் பக்தனாகத் தோற்றம் அளிப்பதுதானே பொருத்தம். இதைத்தான் பெருமானும் விரும்புவான் என்பது அனுமனுக்குத் தெரியும்.

பக்த அனுமான், மண்ணுறப் பணிந்ததனால், அவன் மெய் (உடல்) தூய்மை பெற்றது: அசோக வனத்துச் சிறையில் தனது பெருந்தெய்வமாகத் தங்கிய பிராட்டியை எண்ணியதால் அவன் மனம் தூய்மை பெற்றது. பிராட்டியை வாழ்த்தியதால் அனுமனது வாய் தூய்மையைத் தழுவிக் கொண்டுவிட்டது.

இப்படி வணங்கி வாழ்த்தியது யாரை? என்ற வினாவிற்கு விடையாக அமைந்துள்ளது. இதற்கு முந்தைய (ஈற்றயல் அடி) அடி. கவிதையின் அந்த அடி, அதற்கு மேலும், இந்தப் பக்தனின் செயலை தெளிவாக்குகின்றது.

...... முளரி நீங்கிய
**தையலை நோக்கிய தலையன், கையினன்!**

## முளரி நீங்கிய தையல்: (1)

முளரி—தாமரை: 'செந்தாமரைக்குச் செழுநாற்றம் கொடுத்த தேங்கொள் அந்தாமரையாள்' அல்லவா இந்தப் பிராட்டி? 'செந்தாமரைப் பொகுட்டில் செம்மாந்து வீற்றிருக்கும் நந்தா விளக்காக' இருந்த திருமகள் அம்மலர்வீட்டினின்றும் நீங்கினாள். எதற்கு? உலக மக்களின் துன்ப இருளைப் போக்குவதற்கு. திருமகளாக இருந்த போது வீற்றிருந்த இடம், தீதற்ற நற்குணப் பாற்கடல் தாமரைச் செம்மலர். சீதா தேவியாக அவதரித்த பிறகு, இப்போது சோகத்தாளாகத் தங்கியிருப்பது அசோகவனச் சிறைக்கூடம். தாமரையில் வீற்றிருந்தபோது, தெய்வம்: சிறையில் சிக்குண்டு கிடக்கும் போது பெருந்தெய்வம். ஏன்? தேவமாதர்களைச் சிறை நீக்கம் செய்வதற்காகதான் தாமரை நீக்கம் செய்துவிட்டு, சிறையில் கிடக்கும் பெருந்தன்மை, சீதையைப் பெருந்தெய்வமாக்கியுள்ளது.

'அரவணைத் துயிலின் நீங்கிய தேவனே அவன்:

இவள் கமலச் செல்வியே? என்பது அனுமன் அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டபோது கூறிய கூற்று. சீதாப் பிராட்டியைக் 'கமலச் செல்வியாகக்' கண்டு கூறிய அனுமன் கூற்றை அடிப்படையாக்கிக்கொண்டு பார்த்தால், 'முளரி நீங்கிய தையல்' என்பதற்கு, தாமரை மலரினின்றும் நீங்கிய பெண் (சீதை) என்று பொருள் கொள்வது பொருத்தம்தான்.

அதனைவிட, அனுமனது உணர்வை அடிப்படையாக்கிக் கொண்டு பொருள்கொண்டால் மேலும் சிறப்பாக அமையும்.

........முளரி நீங்கிய தையல் : (2)

'முளரி' என்றால் 'நெருப்பு' என்று பொருள். நெருப்பின் சூட்டுத்தன்மை நீங்குவதற்குக் காரணமாக இருந்த பெண் நெருப்பு, யாரை நெருங்கினாலும், சுட்டு விடும் இயல்புடையது. அப்படிப்பட்ட நெருப்பு, அனுமனது வாலை நெருங்கியபோது அனுமனைச் சுடவில்லை.

இராவணனது ஆணையால், அரக்கர்கள், அனுமனது வாலில்துணி சுற்றி. எண்ணெய் விட்டு நெருப்பு வைத்தனர். எண்ணெயால் கொழுந்து விட்டு எரியும் நெருப்பு, அனுமனது வாலைச் சுடவில்லை. அதற்கு மாறாக, குளிர்ச்சி தந்தது. ஆனால், வைத்த அரக்கர்களை, சுட்டெரித்தது.

ஒரே நேரத்தில், பக்தனுக்குத் தண்மையையும் பகைவர்க்கு வெம்மையையும் கொடுத்தது வாலில் வைத்த நெருப்பு இப்படி நெருப்பின் இயல்பை மாற்றி வைத்தது யார்?

அனுமனின் வாலில் அக்கினித் தேவன் அமரப் போகின்றான் என்பதைக் கேள்வியுற்றாள் சிறையிருந்த செல்வி. உடனே, அக்கினித் தேவனுக்கு, ஆணையிடுகின்றாள் அவள். எப்படி?

**'நீயே உலகுக்கு ஒரு சான்று: நிற்கே தெரியும் கற்பு: அதனில்,**
**தூயேன் என்னின், தொழுகின்றேன்,-எரியே!**
**அவனைச் சுடல்'** என்றாள்.

கற்புக் கனலியின் சொல்லுக்குக் கட்டுப்பட்ட அக்கினித் தேவன் உடனே தனது சுடும் இயல்பினை மாற்றிக்கொண்டு விட்டான்.

---

எரி - நெருப்பு: சுடல் - சுடாதே.

'வெளுத்தமென் நகையவள் விளம்பும் ஏல்வையின்,
ஒளித்தவெங் கனலவன் உள்ளம் வெட்கினான்;
தளிர்த்தன மயிர்ப்புறம் சிலிர்ப்ப தண்மையால்,
குளிர்த்ததுஅக் குரிசில் வால் என்பு கூரவே'
(கம்-5932)

சீதாப் பிராட்டி 'எரியே! சுடல்' என்று சொன்னவுடன், அக்கினித் தேவன் தண்மையன் ஆனான். அதனால் அனுமனது வால் எலும்புவரை குளிர்ந்தது வெளியில் பற்றி எரிந்தது. சுட்டது; உள்ளே குளிர்ந்தது. அக்கினித்தேவனிடம் ஒருகணத்து இரண்டு தன்மையைக் கண்டு வியந்தான் அனுமன்.

'அற்பின்நார் அறாத சிந்தை அனுமனும், 'சனகன் பாவை
கற்பினால் இயன்றது' என்பான் பெரியது ஓர் களிப்பன்
ஆனான். (கம்-5935)

அன்பு நீங்காத மனத்தவனாகிய அனுமன், 'அக்கினித் தேவனது, இயல்பு மாறிய இந்தச் செயல், சனகன் மகளாகிய சீதையின் கற்பினால்தான் நடந்ததாக இருக்கவேண்டும்' என எண்ணினான். உடனே மகிழ்ச்சி மிக்கவன் ஆனான்.

'எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினால் சுடுவன் யான்' என்று சீதாப்பிராட்டி

தன்னிடம் நேரில் கூறியது, உண்மையானமையைத் தானே உணர்ந்தான் அனுமன். கற்புடையாள் கூற்றுக்கு இயற்கைக் கட்டுப்படும் என்பதை உணர்ந்துகொண்டான் அனுமன்.

நெருப்பின் சுடும் தன்மை நீங்குதற்குக் காரணம் பிராட்டியின் கற்பு உள்ளத்தில் எழுந்த சொல்லே ஆகும். 'சனகன் பாவை கற்பினால் இயன்றது' என்பது அனுமனது உணர்வு.

---

நகையவள் - சீதை: கனலவன் - அக்கினித்தேவன்: ஏல்வை - சொன்னபொழுது: வெட்கினான் - வெட்கம் கொண்டான்: குரிசில் - அனுமன்: என்பு - எலும்பு: அற்பு - அன்பு: அறாத - நீங்காத.

பிராட்டியைத் தன் கண்களால் கண்டு கூறிய அனுமன் கூற்றுப்படி, 'முளரி' தாமரையாக மலரும். பிராட்டியினுடைய கற்பின் ஆற்றலை உணர்ந்த அனுமன் உணர்வின்படி 'முளரி' நெருப்பாக நெருங்கும்.

'முளரி நீங்கிய தையல்' பெருந்தெய்வமாகக் காட்சியளிப் பதை, இரண்டு வகையாலும், கண்டு தரிசித்து மகிழும் வண் ணம், கம்பநாட்டாழ்வார் இத்தொடரைக் கவிதையில் அமைத் துள்ளார்.

தையலை நோக்கிய தலையன், கையினன்:

வந்த அனுமன், இருந்த இராமபிரானை நோக்கிய தலை யினனாகத்தான் இருப்பான் என்று எல்லாரும் எதிர்பார்ப் பார்கள். இராமபிரானும் அப்படித்தான் எதிர்பார்த்திருந் திருப்பான். ஆனால், அங்கு யாவரும் எதிர்பாராதவண்ணம், அனுமனது தலை, தையலை நோக்கிவிட்டது. தையலை 'பெருந் தெய்வமாக' உறுதிப்படுத்திக் கொண்டு விட்டதால் தான், அனுமன் தலை தென்திசை நோக்கியது. தலை சென்ற வழி கைகளும் சென்றன. தலையைத் தாழ்த்தி கைகளை நீட்டி மண்ணுறப் பணிந்து வணங்கி வாழ்த்தினான் அனுமன்.

**செய்ய வேண்டியதும் செய்யாததும் :**

இராமபிரானால் தூதுவனாக அனுப்பப்பட்ட அனுமன், இராமபிரானிடம் வந்ததும் என்ன செய்திருக்க வேண்டும்? என்ன செய்தான் ? என்பதை கவிதையின் முதல் பகுதி கூறுகிறது.

' எய்தினன் அனுமனும் : எய்தி, ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன் '

கவிதையின் இந்தத் தொடர், இந்தப்படலத்துக்குக் கொடுக்கப்பட்டுள்ள பெயருக்கு விளக்கம் தருவதாகவும் அமைந்துள்ளது.

**எய்தினன் அனுமனும் :**

எழுவாய், பயனிலையாக அமைய வேண்டிய தொடர், மாறி அமையுமானால் அதற்கு ஒரு சிறப்புப் பொருள் இருக்க வேண்டும். இங்கு பயனிலை முதல் இடம் பெற்றுள்ளது. எழுவாய், இரண்டாம் இடத்துக்குத் தள்ளப்பட்டுள்ளது. அனுமனது வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் இராமபிரானது ஆவல் உணர்வை வெளிப்படுத்துகின்றது முன் பின்னாக மாறியமைந்த இத்தொடர்.

இராமன் அன்புறு சிந்தையனாய் அமைய நோக்கிக் கொண்டிருக்கும் போது, அடைந்தான் (எய்தினன்) அனுமன்.

தனது வருகையை அவ்வளவு ஆவலோடு எதிர் பார்த்திருந்த இராமபிரானை அடைந்த அனுமன் என்ன செய்தான்? என்ன செய்திருக்க வேண்டும்? செய்ய வேண்டியதைச் செய்யவில்லை, யாரும் எதிர்பாராத செயலைச் செய்தான்.

**தொழுகிலன் :**

இராமபிரானை அடைந்த அனுமன் தொழவில்லை. அந்தப் பெருமானது திருவடியைத் தொழுதிருக்க வேண்டும். அதனைச் செய்யவில்லை அனுமன். தொழவேண்டிய திருவடி எப்படிப்பட்டது? அந்தத் திருவடிக்கு உரியவன் யார்? அந்தப் பெருமையைப் பார்க்கும்போது, அனுமன் செயல் மேலும் வியப்பில் ஆழ்த்தும்.

**மொய்கழல்:**

'மொய்' என்றால் 'பெருமை' என்று பொருள். 'நெருக்கம்' என்று ஒரு பொருள். பெருமை நிறைந்த திருவடி, பக்தர்கள் தொழுவதற்கு மொய்த்துக் கொண்டிருக்கும்படியான - கூட்டமாக நெருக்கிக் கொண்டிருக்கும்படியான திருவடி, திருவடி தாமரைமலர் போன்று இருப்பதால், அதனைத் தாமரை மலர் என்றே கருதி தேனுக்காக வண்டுகள் மொய்க்கின்ற திருவடி. பக்தர்கள் அருள் தேனுக்காக மொய்க்கும் திருவடி.

**ஏந்தல்:**

'பெருமைக்குரியவன்' என்று இந்தச் சொல்லுக்குப் பொருள். பெருமையை ஏந்திய இராமபிரான்.

திருவடியும் பெருமைக்கு உரியது: திருவடிக்குரியவனும் பெரியவன். அப்படியிருந்தும், வந்த அனுமன் திருவடியைத் தொழவில்லை. பிறகு செய்தது என்ன? திருவடியை நோக்கித் தனது காலை நீட்டினான்: தையலை நோக்கித் தலையைக் காட்டினான்.

'நின்னை என்தலையினால் தொழவேதகும்' என்று அனுமனைப் பார்த்துச் சொல்பவள் அல்லவா பிராட்டி! அதனால். சீதாப்பிராட்டி கண்ணெதிரில் இல்லாதிருந்தும். அவளிருக்கும் திசை நோக்கிய தலையன் ஆனான் அனுமன்.

ஏந்தல் மொய்கழல்-இராமபிரான் திருவடி, கண்ணெதிரில் இருக்கிறது.இருப்பதற்குத் தொழுகையில்லை இல்லாததற்குத் தொழுகை, தெய்வத்தைத்தானே தொழ வேண்டும்! 'சீதாப் பிராட்டி இருக்கும் திசை, இராமபிரான் திருவடியைவிட மேம் பட்டதாகிறது' அனுமன் உள்ளத்தில் அதனால் தென்திசை நோக்கித் தொழுதான்.

**திருவடி தொழுத படலம்:**

'மொய்கழல் தொழுகிலன்' என்ற கவிதைத் தொடர், 'வந்த அனுமன் இராமபிரானது திருவடியைத் தொழவில்லை' என்பதைத் தெளிவாக்கி விட்டது.

'திருவடியை, நாரணனை, கேசவனை,பரஞ்சுடரை'என்று நம்மாழ்வார் கூறியுள்ளதைப் பார்க்கும்போது, இராம பிரானையே 'திருவடி' என்ற சொல் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

அப்படிப் பொருள் கொண்டாலும், இராமபிரானையும் தொழுததாக இல்லையே? அதனால், இப்படலத்துக்கு இப் பெயர் வந்தது எப்படி?

அனுமனைச் சிறிய திருவடியாகச் சொல்வது வைணவ சம்பிரதாயம் திருவடியாகிய அனுமன், தனது பெருந்தெய்வமாகிய சீதாப் பிராட்டியைத் தொழுதது திருவடியைத்(இராமபிரானை)தொழுதது என்று கொண்டால் எழுவாய்(அனுமன்) தோன்றாது நிற்கும்; 'திருவடி' எழுவாய் இடத்தில் நின்றால், பெருந்தெய்வமாகிய செயப்படு பொருள், மறைந்து நின்று காட்சி கொடுக்கும்.

சுந்தர காண்டத்தின் நிறைவாக விளங்கும் இந்தப் படலத்தின் திருப்பெயரை, நிறைவாக்குவதாக அமைந்த இந்தக் கவிதை, சிறந்ததோர் இடத்தைப் பெற்றுக்கொண்டு விட்டது என்னலாம்.

இந்தக் கவிதையில் இடம்பெற்றுள்ள சொற்கள் ஒவ்வொன்றும், அனுமனது ஆழ்ந்த பக்தி உணர்வை எவ்வளவு அழகாக வெளிப்படுத்திக் கொண்டுள்ளன. இதனை, இந்தக் கவிதையைத் திரும்பத் திரும்ப வாய்விட்டுப் பாடிப்பார்த்தால் உணரலாம். கவிதைகள் செவிநுகர் கனிகள் அல்லவா!

எளிய சொற்களைக் கொண்டு உயர்ந்த உணர்வுகளைக் கவிதையில் வெளிப்படுத்திக் காட்டுவது கவிச்சக்கரவர்த்தி கம்பருக்குக் கைவந்த கலை அல்லவா ?

தன்னை வந்தடைந்த அனுமனது விபரீதமான செயலை கண்ட இராமபிரான் நிலை, யாதாக இருக்குமோ என்ற வாசகர்களது ஐயத்தைத் தெளிவிக்கும் முறையில் அடுத்த கவிதை வருகின்றது.

# 4. நோக்கினான்

4 திண்திற லவன்செயல் தெரிய நோக்கினான் ;
'வண்டியல் ஓதியும் வலியள் மற்று இவன்
கண்டதும் உண்டு அவள் கற்பும் நன்று' எனக்
கொண்டனன், குறிப்பினால் உணரும் கொள்கையான்
(கம் : 6029)

இராமபிரான் எத்தகைய இயல்பினன் என்பதையும், இதுபோது அவன் என்ன செய்கின்றான் என்பதையும் தெரிவிக்கின்றது இந்தக் கவிதை.

**குறிப்பினால் உணரும் கொள்கையான் :**

இதற்கு முந்தைய கவிதையில், எழுவாயாக வந்த சொல் 'அனுமன்' என்பதுதான் அவனது இயற்பெயர் மட்டுமே அந்த அனுமன் என்ன சொல்ல வேண்டுமோ அதனைத்தன் வாயினால் சொல்ல வில்லை. தன் உள்ளத்து உணர்வையும், சொல்ல வேண்டிய செய்தியையும், தனது செயலால் காட்டினான்.

அந்த செயலைக்கண்டவன் இராமபிரான். இந்தக்கவிதையில் எழுவாயாக வந்தது 'இராமன்' என்ற இயற்பெயர்ச் சொல் அல்ல. "இராமபிரான்" என்ற சொல், அப்பெருமானது இயல்பை உள்ளடக்கிக்கொண்ட பெயராக வந்துள்ளது.

**கொள்கையான் :**

'கொள்கையான் கொண்டனன்'என்பது எழுவாய் பயனிலையாக அமையும் தொடர் 'இராமன்' என்று இயற்பெயர் வர வேண்டிய இடத்தில், 'கொள்கையான்' என்ற இயல்புப்பெயர் வந்துள்ளது.

என்ன இயல்பு? வந்திருப்பவன் என்ன கூறவேண்டுமோ, அதனை அவன் கூறாமலேயே, அந்தக் கருத்தை, அவனது குறிப்பினால் உணர்ந்து கொள்ளக் கூடிய கொள்கையை இயல்பிலேயே பெற்றவன் இராமபிரான்.

இந்த இயல்புடையவரை, குறித்தது கூறாமைக் கொள்வார்' (704) என்று திருக்குறள் சுட்டிக் காட்டும். 'ஒருவன் மனத்துக் கருதிய அதனை, அவன் கூற வேண்டாமல், அறிய வல்லார், என்று இத்தொடருக்கு விளக்கம் கொடுத்துள்ளார் பரிமேலழகர்.

அனுமனது மனக்கருத்து குறிப்பினால் காட்டப்பட்டது முந்தைய கவிதையில். அதனைக் கண்டவனை 'இராமன்' என்று சொன்னால், சென்ற கவிதையோடு இந்தக் கவிதை தொடர்புடையதாகாதே! அதனால்தான், இயல்புப் பெயர் எழுவாயாக்கப்பட்டுள்ளது இங்கு.

பிறர் கூறித் தெரிவிக்க வேண்டிய கருத்தை, அவர் வாயினால் எதுவும் கூறாமல் இருக்கவும், அவருடைய முகக் குறிப்பின் மூலம், அவரது மனக்கருத்து முழுவதையும் உணர்ந்துகொள்ளும் இயல்பை உடையவன் இராமபிரான். அதனால்தான், அங்கு வந்த அனுமன், எதுவும் கூறாமல், குறிப்பாக உணர்த்தினான். 'குறிப்பினால் உணரும் கொள்கையான், அதனை நோக்கினான்: பிறகு கொண்டனன்' எனக் கவிதைப் பொருள் அமைகிறது.

**உணருங் கொள்கையான் :**

'உணர்தல்' மனத்தின் செயல்: 'சொல்லுதல்' வாயின் செயல், சொல்லவேண்டிய கருத்தை வெளிப்படுத்துவதற்கு அனுமனதுவாய் செயல்படவில்லை. அதனால், இராம பிரானது செவியும் இங்கு செயல்படவில்லை: அனுமனும் உணர்த்தினான்: இராமனும் உணர்ந்தான். உணர்ந்து கொள்ளும் எண்ணித்தனன் ஆவான் இராமன் (கொள்கை-எண்ணம்) .

எதனால் உணர்ந்தான்? என்ன உணர்ந்தான்? என்பதை கவிதையின் முதற்பகுதி வெளிப்படுத்துகிறது.

**நோக்கினான் :**

'கண்டான்' என்றோ? பார்த்தான் என்றோ? கவிதையில் சொல் அமையவில்லை காண்பதும் பார்ப்பதும் கண்ணோடு நின்று விடும் அது உணர்வுக்கு வாராது கருத்தோடு கவனிப்பதுதான் உணர்வுக்கு வரும் கொள்கையான் நோக்கினான் நோக்கம்-கருத்துடன் கவனித்துப் பார்த்தல் நோக்கியதால் தான் உணர்ந்தான் இராமபிரான் எப்படி நோக்கினான்? தெரிய நோக்கினான். தெரிய-நன்றாக அதாவது உள்ளம் உணர்ந்து கொள்ளும்படியாக நன்றாக, நோக்கினான் கொள்கையான் நோக்கியது எதனை ?

**திண்திறலவன் செயல் :**

திறலவன்-அனுமன் திண்-உறுதி : திறல்-வலிமை. உறுதியான வலிமை பெற்றவன் அனுமன் இலங்கைக்குச் சென்று இலங்கைக்கு எரியூட்டி,அரக்கர்களுக்கு அச்சம் ஊட்டி சீதாப்பிராட்டியைக் கண்டு மீண்டு வந்ததே அனுமனது திண் திறலைக் காட்டும் அத்தகைய வலியவன், இராமனுக்கு மெலியனாய் நின்று செய்த செயல் தன்னைத் தொழாததும் தையலைத் தொழுததும் அவளை வணங்கி வாழ்த்தியதும் ஆகிய செயல் இராமபிரான் நோக்கத்திற்கு உரியதாயிற்று.

**உணர்ந்து தெரிந்து கொண்டது :**

கொள்கையான் திறலவன் செயலை நோக்கியதால் உணர்ந்து தெரிந்துகொண்ட செய்திகள் மூன்று. சீதை நலமாக இருக்கிறாள்;அவளது கற்பும் நிலைகலங்காதிருக்கிறது அதை அனுமன் தன் கண்களால் கண்டிருக்கின்றான், இந்த மூன்று செய்திகளையும் அனுமன் கூறாதிருக்கவும், அவனது செயல் களைக்கொண்டு, குறிப்பினால் உணர்ந்து தெரிந்து கொண்டு விட்டான் இராமபிரான்.

**வண்டியல் ஓதியூர் வலியாள் :**

வண்டுகள் ஒலிக்கும் படியான தேன் நிறைந்தபுதுமலர்கள் சூட்டப்பட்டிருக்கும் கூந்தலை உடைய சீதாப்பிராட்டி, நிலை குலையாது நலமாக இருக்கின்றாள் (ஓதி-கூந்தல்) வண்டுகள் ஒலிக்கிறது என்றால்,அங்கு,தேன் வடியும் புத்தம் புதுமலர்கள் இருக்கும் மலர்கள் மங்கலப் பொருள் மலரணிந்த கூந்தலை உடையவள் என்று சொன்னால், அந்த மங்கை மங்கலமாக இருக்கிறாள் என்று பொருள். சீதாப்பிராட்டி இப்போது வண்டியல் ஓதியளாக சிறையில் காட்சியளிக்கவில்லை. அப் பிராட்டி, தன்னோடு சேர்ந்திருந்தபோது கண்ட காட்சியை நினைத்து இவ்வாறு உணர்ந்தான் இராமபிரான் இப்பொழுது அவள் சிறையில் வலியளாக இருப்பதே அவளுக்கு மங்கலம் பெண்ணுக்கு எது வலிமை? தங்கள் நாயகரின் தெய்வம் பிறிது இல்லை' என்று எண்ணும் கற்பு நிலையினின்றும்,எந்த விதமான சூழ்நிலை ஏற்பட்ட போதும், ஆசையாலோ, அச்சத் தாலோ நிலை குலையாமல் உறுதியோடு நிற்பதுதான் ஒரு பெண்ணுக்கு வலிமை என்பதும், நலம் என்பதும் ஆகும்.

**இவன் கண்டதும் உண்டு :**

இந்தச் செயல் வீரன் அனுமன் அவள் (சீதை) நலமாக இருப்பதைப் பார்த்திருப்பான். இது நிச்சயமாக நடந்திருக்கும்.

**அவள் கற்பும் நன்று :**

அங்கு, இலங்கையில் இருக்கும் சீதையின் கற்புத்திற மும் பாராட்டுக்குரியதாகத்தான் இருக்கும்.

இவன்; அண்மையில் இருக்கும் அனுமன், அவள்; சேய்மையில் இருக்கும் சீதை. அவளது கற்பு, ஏற்புடைதாகத் தான் இருக்கும் என்பதைக் குறிப்பால் உணர்த்தி விட்டான்.

இந்த மூன்று செய்திகளையும் நன்றாக உணர்ந்து தெரிந்துகொண்ட இராமபிரான், தன்பால் அனுமான் கால் நீட்டியதைக் குறையாக நினைக்கவில்லை என்பதைக் குறிப்பாக உணர்த்துகின்றது இந்தக் கவிதை.

## 5. துயரம் நீங்கியது

5. ஆங்கு,அவன் செய்கையே அளவே ஆம்எனா,
ஓங்கிய உணர்வினால், விளைந்தது உன்னினான்:
வீங்கின தோள்; மலர்க் கண்கள்: விம்மின:
நீங்கியது அருந்துயர்: காதல் நீண்டதே. (கம்-6030)

அனுமனது செயல் குறிப்புக்காட்டிய நற்செய்திகளைத் தெரிந்து கொண்ட இராமபிரான், இப்போது எத்தகைய தோற்றத்தினனாய் விளங்குகின்றான் என்பதை இக்கவிதை கூறுகிறது.

**அவன் செய்கையே அளவை :**

ஒரு பொருளின் உண்மையை அளவிட்டு அறிவதற்கு ஏதேனும் ஒரு கருவி வேண்டும் அனுமனது, செயலே, இங்கு இராமபிரானுக்கு, உண்மையை அறிவதற்கு அளவு கருவியாகி விட்டது. செயல், பிறருக்கு வெறும் செயலாகத்தான் தெரியும் அது, யாருக்கு, அளவையாக அமையும்?

**ஓங்கிய உணர்வினால் :**

குறிப்பு அறியவல்ல அறிவுடையவர்க்குத்தான், செயல் உண்மையை அளந்து காணும் கருவியாக விளங்கும். சிறந்த, குறிப்பு அறியவல்ல தனது அறிவுடைமையால், அனுமன் செயலே அளவு கருவியாம் என்று இராமபிரான் எண்ணினான் (ஓங்கிய-சிறந்த)

**விளைந்தது உன்னினான் :**

அங்கு நடந்தசெய்தியை அறிந்துகொண்டான் உன்னுதல்-நுட்பமாக ஊகித்து அறிதல் விளைந்ததை உன்னுதற்கு எது அளவு கருவி? அனுமன் தையலை நோக்கிய தலையினனாகவும் கையினனாகவும். வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்திய செயல்.

இந்தச் செயலைக் கருவியாகக்கொண்டு உண்மையை அளந்தறிந்து தன் மனைவி சீதை கற்புடையவளாக இருக்கின்றாள் என்று ஊகித்துத் தெரிந்து கொண்டான் இராமபிரான். சீதாப்பிராட்டி கற்புடையவளாய் அங்கு இருக்கின்றாள் என்ற மகிழ்ச்சிச் செய்தியை அறிந்து கொண்ட இராமபிரானது புறத் தோற்றத்தையும், அகத்தோற்றத்தையும் விவரிக்கின்றது கவிதையின் பிற்பகுதி.

**வீங்கின தோள் :**

வீங்குதல்-பெருத்தல்: பூரித்தல். மகிழ்ச்சிப் பெருக்கினால்' இராமபிரானது தோள்கள் பூரித்துவிட்டன.

**மலர்க் கண்கள் விம்மின :**

தாமரை மலர் போன்ற கண்கள் நீர் பெருகப் பெற்றன, மனம் பளிங்குக்கல் போன்றது. அதன்மேல் துன்ப ஒளியோ. இன்ப ஒளியோ பட்டால் உருகும். உருகியது நீராகக் கண்களில் வடியும். இராமபிரானது மனம் இப்போது இன்ப ஒளியால் தாக்குண்டது. அதனால் வரும் நீர் ஆனந்தக் கண்ணீராகப் பெருகுகின்றது. (விம்மின-பெருகின)

இராமபிரான் மனம், மகிழ்ச்சியால் நிறைந்துள்ளது என்பதைக் காண்டுவன புற அடையாளங்களாகிய இந்த இரண்டும். தோள்வீங்குதல், மலர்க் கண்கள் விம்முதல் ஆகிய இரண்டும் பெருமானது புறத்தோற்றத்தை அழகு செய்கின்றன.

அகத் தோற்றத்திற்கு உரியனவும் இரண்டு. நீங்கிய ஒன்று: நீண்டது ஒன்று.

**நீங்கியது அருந்துயர்: நீண்டது காதல்:**

மனத்தில் துயரம் குடி கொண்டிருந்தால், அங்கு காதல் உணர்வுக்கு வேலை இல்லை. (காதல்-அன்பு) மனத்தில் இருந்த துயரம் நீங்கியது. அதனால் சீதையினிடத்து அன்பு அதிகப்பட்டது.

'நம் செய்கை சீரியது அன்று; தீர்வு அரும் மூரிவெம்பழி யொடும் நாம் முடிந்தோம்' என்ற துயர்தான், இராமபிரான் மனத்தை வருத்திக்கொண்டிருந்தது அந்தத்துயரம் இப்போது நீங்கிவிட்டதால், இராமன், சீதைபால் கொண்ட அன்பு அதிகப்பட்டு விட்டது.

இராமபிரானது புறத்தோற்றத்தையும் அகத்தோற்றத் தையும் கண்டு உணர்ந்து கொண்ட அனுமன், அம்மகிழ்ச்சித் தோற்றம் இன்னும் மேம்பட்டு விளங்கும் வண்ணம் தான்கண்ட காட்சிகளைச் சொல்லத் தொடங்குகின்றான் அது அடுத்த கவியிலிருந்து தொடர்கின்றது.

# 6. கற்பினுக்கு அணி

6 'கண்டனென் கற்பினுக்கு அணியை, கண்களால்
தென்திரை அலைகடல் இலங்கைத் தென்னகர்
அண்டர்நா யக!இனி, துறத்தி ஐயமும்,
பண்டுஉள துயரும்' என்று அனுமன் பன்னுவான்
(கம் : 6031)

இது முதல் இருபத்திரண்டு கவிதைகள், கவிக்கு நாயகன் (அனுமன்) கூற்றாக வருகின்றன. ஒவ்வொரு கவிதையும் அனுமனின் சொல்லாற்றலைப் புலப்படுத்துவனவாக அமையும் 'யார் சொல் இச்சொல்லின் செல்வன்?' என்று இராமபிரான் பாராட்டிய பாராட்டுதலுக்குத் தகுதியுடையவன் தான் அனுமன் என்பதை, அவன் கூற்றாக வந்துள்ள இந்தக் கவிதைகள் விளக்கிக் காட்டிக் கொண்டிருக்கும்.

இராமபிரான் என்ன என்ன கேள்விகளைக்கேட்டு, செய்திகளைத் தெரிந்து கொள்ள விரும்பியிருப்பானோ, அந்தக்கேள்விகளை, அப்பெருமான் கேட்பதற்கு முன்னா லேயே, அவைகளுக்கு விடை கூறுவதுபோல, கவிதைகள் தொடர்வது மேலும், அனுமனின் சொல் வன்மையை விவரிக்கும்.

இராகவனது செவிக்குத்தேன் என இனிக்குமாறு, சீதை யின் புகழைத்திருத்தமாகச் சொல்லும் கவிக்கு நாயகன் இந்த அனுமன் தான். என்பதை உலகுக்குப் பறை சாற்றிக் கொண்டிருப்பன இந்த உயர்ந்தகவிதைகள் இருபத்திரண்டும்.

சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் சொல்திறன் இவன் ஒருவனுக்கே உண்டு என்பதற்கு எடுத்துக் காட்டாக இந்தக் கவிதைகளை, கவிச்சக்கரவர்த்தி இங்கு அமைத்தாரோ என்று எண்ணமிடச் செய்கின்றன இக்கவிதைகள். இந்த எண்ணத் துக்குக் காரணம் என்ன?

'ஆற்றலும், நிறைவும், கல்வி அமைதியும், அறிவும் என்னும் வேற்றுமை இவனோடு இல்லையாம்' என, முதன் முதலாக அறிமுகப்படுத்தப்பட்டவன் அனுமன். (இந்த மேன்மைக் குணங்கள் எல்லாம், இவனிடத்திலேயே ஒற்றுமைப்பட்டுக் கிடக்கின்றன இக்குணங்களை இவனிடம் அன்றி வேறு ஒருவரிடத்திலும் காண முடியாது) இதுதான், அந்த நல்லெண்ணத்துக் காரணமாகும்.

சொல்லவேண்டிய செய்திகளை, தொகுத்தும், வகுத்தும் விரித்தும் சொல்வது, சொல்வல்லான் சொல்லும் முறை. இதனைத்தான், 'நிரந்து இனிது சொல்லுதல்' (நிரந்து-வரிசைப்படுத்தி: இனிது - கேட்பவர் காதுக்கு இனிமை மிகும்படி) என்று வள்ளுவம் பேசும். இதற்கு இலக்கண மாகவும் அமைந்துள்ளன இந்தக் கவிதைகள்.

**முதல் கவிதை :**

இந்த முதல் கவிதையே அனுமனின் சொல் திறனுக்கும், செயல் திறனுக்கும் முத்தாய்ப்பு வைத்தாற் போன்று அமைந்திருக்கின்றது.

அனுமன், தான் இலங்கையில் கண்ட காட்சியைச் சொல்வதாகவும், இராமபிரானிடம், அப்பெருமானது, துன்பத் தையும் ஐயத்தையும் நீக்கிக் கொள்ளுமாறு வேண்டுவதாகவும் அமைந்துள்ளது இந்தக் கவிதை.

**கண்டனென் கற்பினுக்கு அணியை :**

அனுமனது வாயினின்றும் முதன் முதலாகத் தோன்றிய சொல் 'கண்டேன்' என்பது. பெருமானது செவி இந்தச் சொல்லைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் என்பது

சொல்லின் செல்வனுக்குத் தெரியும். இறுதியில் நிற்க வேண்டிய பயனிலைச் சொல் முதல் நிலை வகிக்கின்றது இங்கு. அதற்குக் காரணம் உண்டு. சொல்பவனது உணர்வையும், கேட்பவனது ஆர்வத்தையும் வெளிப்படுத்துவதற்குத் தான், பின்னால் நிற்கவேண்டிய 'கண்டேன்' என்பது முன்னால் வந்து அமர்ந்துள்ளது.

சொல் இடம்மாறி நிற்பது, சொல்பவனது உணர்வை' கேட்பவனது ஆவலோடு இணைப்பதற்குத்தான். சீதாப் பிராட்டியைக் கண்டுவந்த செய்தியைக் கேட்பதற்கு, இராமபிரான் எவ்வளவு ஆர்வத்தோடு இருந்தான் என்பதை, முன்பு சுக்கிரீவனிடம் பேசிக் கொண்டிருந்த பேச்சே புலப் படுத்தும். அதனால்தான் இங்கு 'கண்டேன்' என்ற சொல்லை முதலில் கூறினான் அனுமான்.

'த்ருஷ்டாஸீதா' என்றுதான் வால்மீகத்திலும் வருகின் றது. அந்த முதல் நூலின் அமைப்பே இங்கும் பின்பற்றப் பட்டிருப்பது மிகவும் பொருத்தமே.

கம்பநாட்டாழ்வார், வால்மீகி ராமாயணத்தை முதல் நூலாகக் கொண்டாலும், தனது இராமாவதாரக் காப்பியத் துள், ஆங்காங்கு தனது தனித் துவத்தைக் காட்டிவிடுவார்.

'வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி' என்றும், அவன், 'தேவரும் செவிகளாரப்பருகும் வண்ணம் தீங்கவிதரு பவன்' என்றும் கவிச்சக்கரவர்த்தி கூறியுள்ளதைப் பார்க்கும் போது, இவர், அந்த வால்மீகி பகவானை எவ்வளவு உயர்வாக மதித்துள்ளார் என்பது தெரியவரும். அப்படி யிருந்தாலும், வால்மீகியின் கவிதையில் சிற்சில இடங்களில் குறைகாண்கின்றார் தமிழ்க் கம்பர். தனக்குக் குறையாகப் பட்ட இடத்தை, தனது தமிழ்க் காப்பியத்துள் திருத்தம் செய்து விடுகின்றார் புலவர் பெருமான். திருத்தம் பெற்ற இடங்களுள் இது ஒன்று.

**கற்பினுக்கு அணி:**
'த்ருஷ்டா' என்றவடசொல்' கண்டேன்' என்று தமிழ்ச் சொல் உருவமாகி, கவிதையின் முன்னிடத்தில் உள்ளது. ஆனால், அதற்கு அடுத்துவந்துள்ள 'ஸீதா' என்ற சொல் தமிழ்க் காப்பியத்தில் மாற்றம் பெற்றுவிடுகின்றது.

இராமபிரான், தனது மனைவி சீதை உயிரோடு இருக்கின்றாளா என்று எண்ணிக் கொண்டிருக்கவில்லை இப்போது, தனது மனைவி, இலங்கையில் வேற்றான் ஒருவனது சிறைக்குள் இருந்தாலும், கற்புத்தன்மை நிலை குலையாதவளாக இருக்கின்றாளா என்பதுதான் இப்போதைய இராமனது எண்ணம்.

அதனால்தான், 'கண்டேன்சீதையை'என்று சொல்லாமல், 'கண்டேன்' கற்பினுக்கு அணியை. என்று அனுமன் சொல்வதாகக் கவிதைத்தொடரை அமைத்தார் கவிச் சக்கரவர்த்தி, 'கற்பினுக்கு அணி' என்பது இந்தக் கவிதைக்கே அணியாக விளங்கும் அருமையான ஒரு தொடராகும்.

**கற்பினுக்கு அணி :**

'அணி' என்றால் 'அழகு' என்று பொருள். அணியைக் (அழகை) கொடுப்பது எதுவோ அது அணிகலன் எனப் பட்டது. எல்லாப் பெண்களும் தமது உடலை அழகு படுத்திக் கொள்வதற்கு அணிகலன்களை அணிந்து கொள் வார்கள். ஒரு பெண்ணுக்கு நிலையான அழகைத் தருவது வெளியில் அணிந்து கொள்ளும் அணிகலன் அல்ல. 'கற்பு' என்ற குணம்தான். இல்லற மகளிர்க்கு நிலையான அழகைக் கொடுக்கும் அணிகலன். என்று சொல்வார்கள் அறிஞர்கள்' பொதுவாகக் கவிஞர்கள் தமது இலக்கியத்தில் கற்புடை மகளிரை இப்படித்தான் படைத்துக் காட்டுவார்கள்.

ஆனால். கவிச்சக்கரவர்த்தியின் படைப்பு, அதனை விஞ்சிவிட்டது. 'சீதை கற்பாகிய அணியோடு விளங்கு கின்றாள்' என்று சொல்லப்படவில்லை இங்கு. சீதைக்கு, கற்புஅணி அல்ல. 'கற்பு' என்ற குணத்துக்கு, சீதை

அணியாக விளங்குகின்றாள். 'கற்பு' என்ற பெருங்குணம். இதுவரை அழகு இல்லாமல்தான் இருந்தது. சீதாப்பிராட்டி சிறைவாசம் செய்யும் இந்த சமயத்தில்தான், கற்புக்கு அணிகலன் கிடைத்திருக்கிறது. கண்ணுக்குப் புலப்படாத 'கற்பு' என்ற குணம், இப்போது அணிபெற்று (அழகு) சீதாப்பிராட்டியின் மூலம் அனைவரும் கண்களால் கண்டு களிக்கும் படியாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றது.

சீதாப்பிராட்டி எதற்கு அணியாக விளங்குகின்றாள்? கற்புக்கு. என்ன அழகு! கவிதைக்கும் அணியாகுமாறு, கவிச்சக்கரவர்த்தி தனது தனித்துவ முத்திரையை இச்சொல் தொடர் மூலம் பதித்து விட்டாரோ என்றுஎண்ணத் தோன்று கின்றது.

'கண்டேன்' என்ற பயனிலைச் சொல்லை அடுத்து, வால்மீகி வைத்திருப்பதுபோல' சீதை' என்ற சொல்லை வைத்தால், பயன் இலை என்று கருதி, கம்பர் பெருமான் 'கற்பினுக்கு அணியை' என்ற சொல் தொடரை அமைத்துள்ளார். இது தான், அனுமன் சொல்லைக் கேட்டுக் கொண்டிருக்கும், இராமபிரானது எண்ணத்துக்குப் பயன் தருவதாக அமையும்.

**கண்களால் : (1)**

'சீதையின் உருவத்தைக் கண்டிருக்கலாம் ஆனால்,அவள் கற்புக்கு அணியாக விளங்குவதை எப்படிக் கண்டாய்' என்று இராமபிரானது திருவுள்ளம் ஒரு கேள்வி கேட்க விரும்பும் அல்லவா? அந்தத் திருவுள்ளம், கேள்வியாக வெளிவரும் முன்பே, அதற்கு விடையாக வந்தது'கண்களால்'என்ற சொல்.

'கண்களால் கண்டேன்; 'பிறர் சொல்லக்கேட்டது அல்ல!' 'என்னுடைய கண்ணாரக் கண்டேன்' 'நானே நேரில் பார்த்தேன்' என்று சொல்வது, கேட்பவர்க்கு நம்பிக்கை ஊட்டும் ஒரு முறை ஆனால் இது, கண்ணாலே பார்த்துத் தெரிந்து கொள்ளக் கூடிய பருப்பொருளைப் பற்றியதாகும். இங்கு கேள்வி, கண்ணால் காண முடியாத நுண்பொருளைப் (கற்பு)

பற்றியது. அதனால் 'எனது கண்களால் கண்டேன்' என்பது கேள்விக்குரிய முழு விடையாகாது.'நானே நேரில் கண்டேன்' என்பதும், கேட்பவனது உள்ளத்தை நிறைவு செய்யாது.

கேள்வி எழுந்த திருவுள்ளத்தை நிறைவு செய்யும் முறையில், இதற்குப் பொருள் காணவேண்டும். 'சீதாப்பிராட்டி கற்பினுக்கு அணியாக விளங்குவதை, அவனது கண்களின் மூலம் தெரிந்து கொண்டேன்' என்று பொருள் கொள்ள வேண்டும் 'உள்ளிருக்கும் கற்பை,வெளியில் இருக்கும் கண்கள் எப்படிக் காட்டும்? என்பது அடுத்து வரும் கேள்வி கண்களினின்றும் ஆறாகப்பெருகி வெளியில் ஓடிவரும் நீருக்கு உள்ளிருக்கும் கற்பைக் காட்டும் ஆற்றல் உண்டு. உள்ளிருப்பதை வெளியில் காட்டும் ஆற்றல் கண்ணீருக்கு உண்டு என்பதை,

'அன்பிற்கும் உண் டோ அடைக்கும்தாழ்? ஆர்வலர்'
புன்கணீர் பூசல் தரும்' (71)

என்ற திருக்குறள் தெளிவாக்குகிறது.

இதனை, விளக்கவந்த பரிமேலழகர் 'தம்மால் அன்பு செய்யப்பட்டாரது துன்பம் கண்டு. அன்புடையார் கண்பொழிகின்ற கண்ணீரே,உள்நின்ற அன்பினை எல்லாரும் அறியத்தூற்றும்' என்றும், 'காட்சி அளவைக்கு எய்தாதாயினும், அநுமான அளவையான் வெளிப்படும் என்பதாம்' என்றும், 'இதனால் அன்பினது உண்மை கூறப்பட்டது' என்றும் சொல்லியுள்ளார்.

உள்ளத்தில் அடங்கியுள்ள கற்பு என்ற குணமாகிய நுண்பொருளின் உண்மையை, கண்களினின்றும் வழிந்து கொண்டுள்ள பருப்பொருளாகிய நீர் எடுத்துக்காட்டி விடும் என்பது தெளிவாகத் தெரிகின்றது.

**' கடல் துணை நெடியதன் கண்ணின் நீர்ப்பெருந்**
**தடத்திடை இருந்தது ஓர் அனனத் தன்மையாள்'**

பிராட்டியின் கண்கள் கடல் போன்ற பெரிய கண்கள் அவைகளினின்றும் நீர் நிரந்தரமாகப் பெருகிக்கொண்டுள்ளது அந்தக் கண்ணீர் குளம் போன்று அங்கே தேங்கி விட்டது.

அதன் நடுவே சீதாப்பிராட்டியிருப்பது தடாகத்தின் நடுவில் ஒரு பெண் அன்னம் தங்கியிருப்பது போன்று இருந்தது. இதனைத் தன் கண்களால் கண்டான் அனுமன். சீதாப்பிராட்டியின் நீர் நிறைந்த கண்களின் மூலம் அவளது கற்பை, அனுமன் தனது கண்களால் கண்டான்.

ஆகவே, 'கண்களால்' என்ற சொல், பிராட்டியைச் சேர்ந்தாலும் பொருள் பொருத்தமாகும்; அனுமனைச் சேர்ந்தாலும் பொருள் பொருத்தமாகவே அமையும்.

**கண்களால் : (2)**

அன்புடையாரைப் பிரிந்ததனால், ஏற்பட்ட பிரிவுத் துன்பம் உள்ளத்தைத் தாக்குகின்றது. அதனால் உள்ளம் உடைந்து நீர்ப்பிண்டமாகக் கண்களின் வழியே வெளியேறுகின்றது 'அழுகை மனச்சுமையைக் குறைக்கும்' என்ற மனத் தத்துவப்படி பிராட்டியின் அழுகை மனச்சுமையைக் குறைந்துள்ளதா? இல்லை. ஆயினும் அழுகையும் நிற்கவில்லை. கண்ணீரும் நிற்கவில்லை.

பிராட்டியின் கற்பைக் காட்டுவதற்கு, கண், நீர் நிறைந்ததாக இருக்க வேண்டும் என்பதில்லை வெறும் கண்களே கூட அக்கற்பைக் காட்டி விடும். அப்படியும் கண்டான் அனுமன். எப்பொழுது?

இலங்கை நகர் முழுவதையும் சுற்றிப்பார்த்த அனுமன், இறுதியாக. பிராட்டியைக் காண்பதற்காக அசோகவனத்துள் நுழைந்தான். 'கண்ணின் நீர்க்கடலுள் இருந்ததைப் பார்த்து, இவள்தான் சீதையாக இருக்கலாம் என எண்ணினான். பிராட்டியைக்காணும் சந்தர்ப்பத்துக்காகக் காத்துக்கொண்டிருந்தான் ஒரு மரத்தின்மேல் அப்போது பிராட்டியின் கற்புக்கு ஒரு சோதனை வந்தது. அதனை நேரில் பார்த்தான் அனுமன்.

இலங்கை மன்னன் இராவணன், பிராட்டி இருக்கும் இடத்துக்கு வருகின்றான், தனது ஆசையின் நிறைவுக்காக. சீதையின் கற்பைச்சூறை ஆட வந்த அரக்கனையும், கற்பைக் காத்துக்கொள்ளத் துடிக்கும் பிராட்டியையும், மரத்தின் மீது அமர்ந்திருக்கும் அனுமன் பார்க்கின்றான். இந்த மூவரின் நிலையையும், கவிச்சக்கரவர்த்தி அழகாகக் கவிதையில் படம் பிடித்துக்காட்டுகின்றார்.

'கூசி ஆவி குலைவுறு வாளையும்
ஆசை யால் உயிர் ஆசுஅழி வானையும்,
காசுஇல் கண் இணை சான்று எனக் கண்டனன்
ஊசல் ஆடி உளையும் உளத்தினான்; (கம்: 5167)

அரக்கனைக் கண்டு அவன், தன் கற்புக்குக் கேடு விளைவித்து விடுவானா என்ற அச்சத்தால், உடல் நடுங்கி, உயிரும் நடுங்குமாறு நிற்கிறாள் பிராட்டி: இராவணனோ, காமமோகத்தால் உயிர், கட்டுக் குலைபவனாக உள்ளான். இந்த இருவர்களையும், கண்டான். யார்? 'பிராட்டியைக் கற்புக் கெடாத நிலையில் காண்போமா' என்று தத்தளித்து வருந்திக் கொண்டிருக்கும் மனத்தினனாய அனுமான். கண்டது எப்படி? தனது குற்றம் இல்லாத கண்கள் இரண்டும் சாட்சியாகக் (நேராக) கண்டான். (கூசி-நடுங்கி: ஆவி-உயிர்: குலைவுறுதல் - நிலை குலைதல்: ஆசு-பற்றுக்கோடு: காசு-குற்றம்: உளைதல் - வருந்துதல்.)

மூவரின் மனநிலையையும் காட்டுகின்றது இக்கவிதை. பிராட்டியின் உள்ளம், இக்கொடியவனிடமிருந்து கற்பைக் காத்துக்கொள்ள வேண்டுமே என்ற அச்சத்தால் பிணிக்கப்பட்டிருக்கின்றது. இராவணன் மனமோ, ஆசையில் அழுந்திக் கிடக்கின்றது. இருவரின் மனநிலையையும் கூர்ந்து கவனித்த அனுமன் உள்ளமோ, ஊசல் ஆடிக்கொண்டுள்ளது. (ஊசல்-இங்கும் அங்கும் செல்லுதல்) இராவணன் காமமோகத்தால், என்ன கேட்டினைச் செய்வானோ? பிராட்டி, அதனை எப்படித் தடுத்துக் கற்பைக் காப்பாளோ? என்ற எண்ணம், அனுமனின் ஊசல் ஆடும் மனமாக உள்ளது.

ஆசையால் உந்தப்பட்டு வந்த இராவணன், காமவெறியனனாய் கற்புடையாள் முன் பேசத்தகாத பேச்சினைப் பேசுகின்றான். அதற்குப்பதில் வருகிறது பிராட்டியிடமிருந்து எப்படி? தனது கற்புத்திறனை வெறுப்புப் பார்வையின் மூலமாகக் கண்களின் வழியாகவும், வெம்மையான சொல்லின் மூலமாக வாயின் வழியாகவும் பதில் வருகிறது.

துரும்பு :

'இல்லொடும் தொடர்ந்த மாதர்க்கு ஏய்வன அல்ல வெய்ய
சொல்: இது தெரியக் கேட்டி, துரும்பு! எனக் கனன்று
சொன்னாள்.'

இராவணன் கூறிய சொல் வெய்யது: அவனுக்கு விருப்ப மானது: இல்லற நெறி நிற்கும் மாதர்களுக்குக் கொடுமை யானது.

இதற்குப் பதில் கொடுக்கும் பிராட்டி, தனக்கும், இராவணனுக்கும் நடுவில் ஒரு துரும்பைப் போட்டு, அந்தப் புல்லைப் பார்த்துக் கொண்டு, இராவணனுக்கு அறிவுரை கூறுகின்றாள். இராவணனைத் துரும்பாகத்தான் மதிக்கிறாள் பிராட்டி என்பதைக் காட்டுவதற்கு, வால்மீகி ராமாயணச் சுலோகக் கருத்தை அப்படியே ஏற்றுக் கொண்டு விட்டார் கவிச்சக்கரவர்த்தி.

★ 'த்ருணமந்தரத: க்ருத்வா ப்ரத்யுவாச.........
...................................................,

(த்ருணம்-புல்லை: அந்தரத:—) தனக்கும் இராவணனுக்கும்) நடுவில்: க்ருத்வா - (இருக்கும்படி) செய்து: ப்ரத்யுவாச- (பிராட்டி) பதில் சொன்னாள்.

துரும்பை (புல்லை) ஏன் நடுவில் இட்டாள் பிராட்டி? என்பதற்கு, வியாக்கியானச் சக்கரவர்த்தி பெரிய வாச்சான் பிள்ளை அவர்கள் கூறியுள்ள காரணங்கள் இங்கு நம் சிந்தனைக்கு உரியதாகும்.

1. பெண்களுக்குப் பரமபுருஷனை உற்றுப் பார்ப்பது, பேசுவது ஆகியவை செய்யத்தகாதவை யாகையாலே, புல்லை முன்னே போட்டு, அதைவ்யாஜமாக (காரணமாக) வைத்து, அவனைக் கேட்பிப்பதற்காகப் புல்லைப்போட்டாள்.

2. 'இத்துரும்பு நான் சொல்வதைக் கேட்டாலன்றோ நீ கேட்கப் போகிறாய்' என்று நினைத்து இராவணனுக்கு உபமானமாக்கிப் புல்லைப் போட்டாள்.

---

★ ஸ்ரீராமாயண தனிச்சுலோகம் பக் 276, 290-293.

3. இராவணனைப்போலே தீங்கு செய்யாத புல்லை அறிவுடையதாக்கி, 'இவ்வார்த்தையைக் கேட்கச் செய்வோம்' என்கிற நினைவாலே புல்லையிட்டாள்.

4. புல்லைத்தன் சக்தியாலே அறிவுடையதாக்கி, இந்த சக்திப் பெருமையைக் கண்டு இராவணன் பயந்து மீள்வனோ என்கிற நினைவாலே புல்லையிட்டாள்.

5. 'அறிவற்றவனாக இருக்கின்ற உன்னைப் புல்லைப் போலே நினைத்திருக்கிறேன்' என்று புல்லையிட்டாள்.

6. 'அறிவற்ற நீ மிருகத்துக்குச் சமானம் மிருகமாக இருக்கும் நீ இந்தப் புல்லைத்தின்று இன்புற்று இருப்பாய்' என்று புல்லையிட்டாள்.

7. 'உன்குற்றத்தாலே இலங்கை அழியப்போகிறது அந்த சமயத்தில், இத்துரும்பைக் கொண்டு ஒரு குடிசை கட்டிக் கொண்டு வாழ்வாயாக' என்று பரிகாச புத்தியாலே புல்லை யிட்டாள்.

8. இத்துரும்பை நான் கிள்ளியது போன்று உன் தலையைக்கிள்ளி எடுத்து விடுவான் எம் இராகவன் என்று உணர்த்துவதற்காகப் புல்லையிட்டாள். (பொல்லா அரக்கனை கிள்ளிக் களைந்தான். திருப்பாவை-15)

9. துரும்பாலே சுக்கிரன் கண்ணைத்துலக்கினாற் போலே, என்னைப்பார்த்த உன் கண்களை இத்துரும்பாலே கலக்கிவிடுவேன்' என்ற எச்சரிக்கைக்காகக் புல்லையிட்டாள்.

10. நெருப்பை நெருங்கினால் இத்துரும்பு சாம்பலாவது போலே, என் கற்பு நெருப்பினிடம் நீ நெருங்கினால் நீயும் சாம்பலாவாய் என்பதை உணர்த்துவதற்குப் புல்லையிட்டாள்.

இவை போன்று இன்னும் பல காரணங்களைக் காண்கின்றார் பெரியவாச்சான்பிள்ளை அவர்கள். இந்தக் காரணங்கள் அனைத்தும் பிராட்டியின் கற்புத்திறத்தை

விளக்குவனவாகும். புல்லைப் பார்த்துப் பேசும்போது பிராட்டியின் கண்களில் நீர் இல்லை. கோபமும் வெறுப்பும் கலந்த பார்வை இருந்தது.

நீர் இல்லாத நிலையிலும், பிராட்டியின் கண்களால், அவளது கற்பினை, தன்கண் இணை சான்று எனக்கண்டதை நினைத்து, 'கண்களால்' என்று சொன்னான் அனுமன்.

இவ்வாறு இருவகையாகவும் பொருள் கொள்ளும் வண்ணம் அமைந்துள்ள 'கண்களால்' என்ற சொல் இந்தக் கவிதைக்குக் கண்ணாக நின்று சிறப்பளிக்கிறது.

அடுத்த கேள்வி: கண்டது எங்கே? என்பது, அதற்குப் பதில் வருகிறது கவிதையின் இரண்டாவது அடியில்

தெண்திரை அலைகடல் இலங்கைத் தென்னகர்; (தெளிவான அலைகள். எல்லாக் காலத்திலும் அலைந்து கொண்டிருக்கும் படியான கடலால் சூழப்பட்ட இலங்கை என்று சொல்லப்படுகின்ற தெற்குத் திசையில் உள்ள நகரம்)

கற்புக்கு அணியாகிய பிராட்டியை, அனுமன், தன் கண் களால் கண்ட இடம், பிறரால் எளிதில் செல்ல முடியாத எவ்வளவு கடுமையானது என்பதை இத்தொடர் காட்டு கிறது. நாற்புறமும் கடலால் சூழப்பட்டுள்ளது அந்த நகரம். யாரும் சென்று பிராட்டியைக் காண முடியாது. அப்படிப் பட்ட இடத்தில் இருந்தும், சீதாப்பிராட்டி, தன் கற்பைக் காத்துக் கொண்டாள்.

எவ்வளவு ஆற்றல் உடையவர்களாலும் செல்ல முடியாத இலங்கை நகருக்குச் சென்றது அனுமனது செயலாற்றைக் காட்டுகின்றது. தனது செயல் திறனைக் காட்டுவதற்காக இலங்கைக்குச்செல்லும் கடுமையைச் சொல்லவில்லை அனுமன் பிராட்டியின் கற்புத்திறனைக் காட்டுவதற்குத்தான் இதனைச் சொன்னான் அனுமன்.

இந்த நற்செய்தியைக் கேட்டபிறகு, இராமபிரான் எப்படி இருக்கவேண்டும் என்பதை வேண்டுகோளாக விடுக்கின்றான் அனுமன் அந்த வேண்டுகோளைத் தாங்கி வருவன, கவிதையின் பின்னிரண்டு அடிகளும்.

**அண்டர் நாயக :**

உலகத்துக்குத் தலைவனாக விளங்குபவனே! இது இராமபிரானை, அனுமான் விளிக்கின்ற (அழைக்கின்ற)விளத் தொடர் நீ எல்லா உலகத்துக்கும் தலைவன் எல்லாருடைய துயரங்களையும் போக்குபவன் இப்பொழுது நீ துயருடன் இருக்கின்றாய், இது சரியா?

**இனி, துறத்தி, ஐயமும், பண்டுள துயரும் :**

இந்த நற்செய்தியைக் கேட்ட பிறகு, இதற்கு முன்பு உன் உள்ளத்தில் இருந்த சந்தேகத்தையும் துன்பத்தையும் நீக்கி விடு. பிராட்டி இருக்கிறாளா? இல்லையா? கற்பைக் காத்துக் கொண்டாளா? கற்புக்குப் பங்கம் விளைவித்துக் கொண்டிருப் பாளா? என்ற ஐயம் இருந்தது பெருமான் திருவுள்ளத்தில் தீர்வு அரும் மூரிவெம் பழியொடும் முடிந்ததாம்' என்ற துயரம் இருந்தது, இரண்டையும் நீக்கிக்கொள்ள வேண்டும் என்று அனுமன் கேட்டுக்கொண்டான் இப்படித் தொகுத்துச் சொன்னதை விவரமாகச் சொல்லப் போகின்றான் அனுமன் என்பதை 'பன்னுவான்' என்று சொல் காட்டுகிறது, (பன்னுதல்-சொல்லுதல்)

# 7. பெருந் தெய்வம்

7. ‘உன்பெருந் தேவி என்னும்
உரிமைக்கும், உன்னைப் பெற்ற
மன்பெரு மருகி என்னும்
வாய்மைக்கும், மிதிலை மன்னன்
தன்பெருந் தனயை என்னும்
தகைமைக்கும், தலைமை சான்றாள்
என்பெருந் தெய்வம்: ஐயா!
இன்னமும் கேட்டி’ என்பான் (கம்-6032)

சீதாப்பிராட்டியைக் ‘கற்பினுக்கு அணி’ என்று சொல்லிய அனுமன், அதனை விவரிக்கின்றான் இந்தக் கவிதையில் முந்தைய கவிதையில் தொகுத்துச் சொல்லப்பட்ட செய்தி, இந்தக் கவிதையில் வகுத்துக்காட்டப்படுகின்றது.

**உறவு :**

மண்ணுலகில் தோன்றிய ஒவ்வொருவரும் உடல் உறவால் பிணிக்கப்பட்டுள்ளார்கள். கண்ணுக்குத் தெரியாத ஆன்மா, செயல்பட வேண்டுமானால், கண்ணுக்குத் தெரியக் கூடிய ஒரு உடலைப் பெற்றே ஆகவேண்டும். அந்த உடல் இருக்கும் வரை, உறவோடு ஒட்டி நின்றுதான், வாழ வேண்டும். மனித உறவை மதித்து வாழ்வுதான், முறை. நெருங்கிய அந்த உறவுக்குச் சோதனை வரும் போதும், அதனைச் சாதனையாக்கிக் கொண்டு, உறவுமுறை மேலும் உயர்வு பெறும் வகையில் வாழ்வதுதான் நல்வாழ்க்கையாகும்.

‘கண்ணகி, கோவலன்’ என்ன உறவு? ‘மனைவி கணவன்’ என்ற வீட்டு உறவு. இந்த உறவுக்கு உயர்வுதரும் வகையில் அவள் நடந்து கொண்டாள். தற்காத்து, தன் கொண்டான் பேணி, தகை சான்ற சொல்காத்து வாழ்ந்தாள்

கண்ணகி, அதனால், அவள், கோவலனின் மனைவி என்ற உறவின் பெருமையைப் புலப்படுத்தியபிறகு, பத்தினித் தெய்வமாக உயர்ந்தாள்.

பாண்டியநாட்டு மன்னனது செய்கையால், தனது குடும்பத்துக்கு, 'திருட்டு' என்ற பழி வந்ததை உணர்ந்தாள் கண்ணகி. பழியைத் துடைக்கவேண்டி, பாண்டியனது சபைக்குச் சென்ற கண்ணகி, ஏசாச் சிறப்பின் இசை விளங்கு பெருங்குடி மாசாத்து வாணிகன் என்று தனது மாமனாரது பெருமையைச்சொல்லி 'வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்ப வந்து, நின்பால் கொலைக்களப்பட்ட கோவலன்' என்று தனது கணவனது கள்ளமற்ற தூய வாழ்வை எடுத்துக் காட்டினாள்: அத்தகைய நல்வாழ்வினனுக்கு நான் மனைவி என்று சொல்லி உறவின் பெருமையை நிலை நாட்டி, தன்னை அறியாத அயல் நாட்டில், குடும்பப்புகழை உயர்த்திவைத்தாள் அதனால், பிறரால் வணங்கப்படும் தெய்வமாக ஏற்றம் பெற்றாள் கண்ணகி.

'கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது,
பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்'

என்பது, உலக உறவுக்கு அப்பாற்பட்டுப் பெருந்துறவியாக வாழ்ந்த கவுந்தி அடிகளின் பாராட்டு. 'குடும்பப்பெண், வீட்டு உறவுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் நடந்து கொண்டால். துறவியும் தொழுவதற்கு ஏற்ற தெய்வமாக உயர்வு பெற்று விடுவாள்' என்பதற்கு எடுத்துக் காட்டு, கண்ணகி, இது சீதா தேவிக்குப் பொருத்தமாவதை காணலாம்.

**பொருளை :**

'கற்பினுக்கணியினைக் கண்களால் கண்டேன்' என்று செய்தியைச் சொல்லத் தொடங்கிய சொல்லின் செல்வன், அதனை விவரிக்கின்றான் இந்தக் கவிதையில்.

'கற்பு' என்ற உயர்ந்த குணம், பிராட்டியைச் சேர்ந்து அணி (அழகு) பெற்றது எவ்வாறு என்பதை விளக்குகிறது இக்கவிதை.

பெருமையை உடையவர்களை யார் சென்று அடைந் தாலும். அவர்கள் பிறரால் பாராட்டிப் பேசப்படக் கூடிய மதிப்பைப் பெற்றுக்கொள்வார்கள். எதனைச் சேர்ந்தாலும் சேரப்பட்டதன் இயல்பு சேர்ந்த பொருளுக்கு வந்து சேரும். இது உலக நியதி.

பிராட்டி, எல்லாவகையாலும் பெருமை உடையவள்: சிறுமையைச் சீறியவள். தனது பிறப்புத் தொடர்பால், மனைவி, மருகி, மகள் என்ற மனித உறவைப் பெற்றவள் இந்த மாதரசி. இந்த உறவு முறைகளைப் பெருமைப் படுத்தியவள் பிராட்டி, அதனால், சிறையிருந்த இந்தச் செல்வி, பெருந்தேவி, (மனைவி) பெருமருகி, பெருந்தனயை, என்று பாராட்டிப் பேசப் படுவளாகின்றாள்.

இதற்கு முன்பு, ஒருவனுக்கு மனைவியாகவும், ஒரு வனுக்கு மருகியாகவும் ஒருவனுக்கு மகளாகவும் வாழ்ந்த பிராட்டி, சிறைவாழ்க்கையை மேற்கொண்ட பிறகு, பெருந் தேவியாகவும், பெருமருகியாகவும். பெருந்தனயை யாகவும் ஏற்றம் பெற்று விளங்குகின்றாள்.

பிறப்பால் வந்த இந்த உறவுகள் மூன்றும், சீதாப் பிராட்டியின் சிறைவாழ்க்கையால் சிறப்புப் (பெருமை) பெற்றுவிட்டன. இவைகள் உடல்தொடர்பு உடையவைகள். 'கண்ணுக்குத் தெரியும் உடல் தொடர்புடைய உறவுகளே, இவளால் பெருமை பெற்று விட்டது. அதனால். நாமும் இப்பிராட்டியைச் சேர்ந்து உயர்வுபெறலாம்' என எண்ணி, உள்ளத் தொடர்புடைய 'கற்பு' என்ற பண்பும், சீதையைச் சேர்ந்து அணி-(அழகு) பெற்றுக்கொண்டு விட்டது. 'கற்பி னுக்கு அணியின்' பெருமைகள் ஒவ்வொன்றாக வகுத்துச் சொல்லப்படுவதை இங்குக் காணலாம்.

**பெருந் தேவி:**

தேவி, தேவனுக்கு உரிமை உடையவள். அரவின் நீங்கிய தேவனே அவன்' என்று, அசோகவனத்தில்

பிராட்டியைக்கண்ட பொழுதே, அனுமன் இராமாவதாரத்தை ஐயமின்றித் துணிந்தவன். தேவன், மனிதனாக அவதாரம் செய்தது, அல்லோர்களை அழித்து, நல்லோர்களைக் காப்பதற்குத்தான். தேவன் மேற்கொண்ட அரும்பெருங் காரியத்தை நிறைவேற்றுவதற்காகவே, பிராட்டி, சிறை வாழ்க்கையை ஏற்றுக் கொண்டதால், அவனுக்கு 'மனைவி' என்ற உரிமைக்குத் தகுதி உடையவளாகின்றாள். இதனை, இராமபிரானிடம் தெளிவாகக் கூற விரும்பிய அனுமன் 'மனைவி' என்ற சொல்லைப் பயன்படுத்தாமல், 'தேவி' என்ற சொல்லைப் பயன்படுத்தி 'உன் பெருந்தேவி என்னும் உரிமைக்கும் தலைமை சான்றாள்' என்று சொல்கின்றான்.

'ஐயனே! இதற்கு முன்பு உனக்குத் தேவி என்ற அளவில் வாழ்ந்த பிராட்டி, இப்போது, தன்கற்புத்திறத்தால், பெருந் தேவியாக உயர்ந்துவிட்டாள்: அதுமட்டும் அல்ல! 'மனைவி' என்று சொல்லத்தக்க உறவுக்கு முதன்மை நிரம்பியவளாக விளங்குகின்றாள்' என்று அனுமன் சொல்லுகின்றான். 'பெருமானே! அவதாரமூர்த்தியாகிய உன்னால் கைத்தலம் பற்றப்பட்ட பிராட்டி, தனதுசிறை வாழ்க்கையால், உனது பெருமையை நிலைநாட்டி, அந்த உரிமைக்குச் சிறப்புத் தருபவளாக விளங்குகின்றாள்' என்பது அனுமன் கூற்றின் விளக்கமாகும்.

**பெருமருகி :**

'மருமகள்' என்ற உறவும் ஒரு பெண்ணுக்குச் சிறப்புத் தருவதாகும். ஒரு பெண்ணை அறிமுகப்படுத்தும்போது, இன்னாருடைய மருமகள் என்று சொல்வதுதான் பெருமைக்கு உரியதாகும்.

நப்பின்னைப் பிராட்டி, திருப்பாவையில் 'நந்தகோபாலன் மருமகளே; நப்பின்னாய்' என்று மாமனார் பெயரைச் சுட்டிக் காட்டித்தான் அழைக்கப்படுகிறாள்.

சீதாப்பிராட்டியின் மாமனார், தேவேந்திரனுக்கே, அவன் இழந்த அரசை சம்பரனைக்குலத்தோடும் தொலைத்து,மீட்டுக் கொடுத்த பெருமைக்குரிய தசரதசக்கரவர்த்தியாவார். அவர், வாய்மையையும் மரபையும் உலகில் நிலைநாட்டுவதற்காகத் தனது மன்னுயிரையே, துறந்த வள்ளல் அப்படிப்பட்ட சக்கர வர்த்தியின் பெரும் புகழை உலகுக்குப் பறைசாற்றும் அளவிற்குச் செயல்பட்டுக் கொண்டிருப்பவள் பிராட்டி.

உன்னைப்பெற்ற மன்பெரு மருகி என்னும் வாய்மைக்கும் தலைமை சான்றாள்.

'ஐயனே! உன்னை மைந்தனாகப் பெற்ற, உலக முழு தாண்ட தசரதச்சக்கரவர்த்திக்கு, பெருமை நிறைந்த மருமகள் என்று சொல்லப்படுகின்ற வார்த்தைக்கும் சிறப்புத்தருபவள் பிராட்டி, என்று அனுமன் கூறினான். 'உம்பரும் உலகும் பரவும் மெய்யினுக்கு (வாய்மைக்கு) உயிர் அளித்து உறுபுகழ் படைத்தவன்' தசரதன். அதனால் அந்தச் சக்கரவர்த்தியின் வாய்மைக்குச் சிறப்பு அளிக்கும்படியாக இருந்தது பிராட்டி யின் சிறை வாழ்க்கை' என்பது இந்தத் தொடரின் கருத்து.

**பெருந்தனயை :**

ஒரு பெண்ணினது சிறப்பு இரண்டு இடத்தை அடிப்படை யாகக் கொண்டது. பிறந்த இடம் ஒன்று:புகுந்த இடம் ஒன்று. புகுந்த இடத்தில் மனைவியாகவும் மருமகளாகவும் உறவு கொண்டவள், பிறந்த இடத்தில் 'மகள்' என்ற உறவை இயல் பாகப் பெற்றவளாவாள். இரண்டு இடத்து உறவுக்கும் பெருமை சேரும் வகையில் வாழும் வாழ்க்கைதான், ஒரு பெண்ணின் நல்வாழ்க்கையாகும்.

பிராட்டியின் சிறை வாழ்க்கைதான், பிறந்த இடத்திற்குப் பெருமை சேர்க்கும் நல்வாழ்க்கையாகின்றது.
பெருந்தனயை - பெருமை சேர்க்கும் மகள் (தனயை-மகள்)

மிதிலை மன்னன் தன் பெருந்தனயை என்னும் தகைமைக்கும் தலைமை சான்றாள்.

'ஐயனே! மிதிலை நகரத்துப் பேரரசனாகிய, சனகனது மகள் என்று சொல்லப்படுகின்ற தகுதிக்கும் சிறப்பைத் தருபவள் பிராட்டி' என்று அனுமன் இராமபிரானிடம் சொல்கின்றான்.

உலகிற் சிறந்த ஞானியாக விளங்குபவன் சனகப் பேரரசன். அந்தஞானியால் வளர்க்கப்பட்ட அவன் மகளாகிய சீதை சிறை வாழ்க்கையிலும், தன் கற்பைச் சிதையாமல் காத்துக்கொண்டு, காம வெறியனாகிய இராவணனுக்கு அறிவுரை கூறிய காட்சியைக் கண்டவன் அனுமன்.

**'இப்பெருஞ் செல்வம் நின்கண் ஈந்த பேர்ஈசன், யாண்டும்**
**அப்பெருஞ் செல்வம் பொருள் செல்வம் துய்ப்பான், நின்றுமா**
**தவத்தின் அன்றே?**
**ஒப்பரும் திருவும் நீங்கி, உறவொடும் உலக்க உன்னி,**
**தப்புதி அறத்தை: எழாய்! தருமத்தைக் காமியாயோ?**
**(கம்-5199)**

'அறிவில்லாதவனே! நீ இவ்வளவு பெரிய செல்வத்தை அனுபவிக்கும் படியாக சிவபெருமான் உனக்குக் கொடுத்தது நீ செய்த தவத்திற்காக அல்லவா' அந்தத் தவப்பெருமையால் பெற்ற பெருஞ்செல்வத்தை இழந்து உனது உறவினரோடு நீ அழியும் படியாக எண்ணி தருமத்தைத் தப்பி நடக்கின்றாயே! தரும வழியில் நடக்க விரும்ப மாட்டாயா? என்பது, பிராட்டி இராவணனுக்குச் சொன்ன ஞானங்கனிந்த நன்மொழி.

அதனால், 'மிதிலை மன்னன் தன்பெருந்தனயை என்னும் தகைமைக்கும் தலைமை சான்றாள்' என்று உறுதியாகச் சொன்னான் அனுமன்.

**பெருந் தெய்வம் :**

பிராட்டி பெருந்தெய்வமாகக் காட்சியளிக்கின்றாள். யாருக்கு? உடல் உறவுக்கு அப்பாற்பட்ட, இதுவரை கண்டிராத ஒரு பெருவீரனுக்கு. எப்பொழுது? மனைவி, மருகி, மகள் என்ற உடல் உறவு முறைக்குப் பெருமை சேர்த்த பிறகு.

'ஐயனே! நான் இலங்கைத் தென்னகரில் கண்ட பிராட்டி, உனக்குப் பெருந்தேவி; தசரதமாமன்னனுக்குப் பெருமருகி: மிதிலை மன்னனுக்குப் பெருந்தனயை: இந்த உறவு முறைகளுக்குத் தன் கற்புத் திறத்தால் சிறப்பினை ஏற்படுத்தி, தலைமை பெற்று விளங்குகின்றாள். அதனால், எனக்குப் பெருந்தெய்வமாகக் காட்சியளிக்கின்றாள்' என்று அனுமன் இராமபிரானிடம் கூறினான்.

உலகு உறவுக்கு அப்பாற்பட்ட, துறவியாகிய கவுந்தி அடிகள், குலப் பெருமையை அயல் நாட்டில் (பாண்டிய நாடு) நிலைநாட்டிய கண்ணகியைப் 'பொற்புடைத் தெய்வம்' என்று பாராட்டினார் இங்கு, உலக வாழ்வில் நுழையாத பிரமச்சாரி யாகிய அனுமன், இலங்கைத் தென்னகரில்,தனது கற்புத்திறத் தால் பிறந்த இல்லத்தின் பெருமையையும், புகுந்த இல்லத்தின் பெருமையையும் நிலை நாட்டிய சீதாப்பிராட்டியைப்' பெருந் தெய்வமாகக் கண்டு தொழுதான்.

தேவி, மருகி, தனயை, தெய்வம் என்ற நான்கு சொற் களுக்கும் பெருமை சேர்த்த இந்தப் பெருமை என்ற சொல் இந்தக்கவிதைக்கும் பெருமை சேர்க்கிறது.

கவிச்சக்கரவர்த்தியின் கவிதைக்கலை ஆற்றலால், இந்த கவிதைக்குள் நுழைந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றது பெருமை' என்ற சொல், அதனால் இந்தச் சொல்லே பெருமை பெற்றுக்கொண்டு விட்டது.

**இன்னமும் கேட்டி :**

சீதாப்பிராட்டியின் கற்புத்திறத்தை இப்படி நான்காக வகுத்துக்காட்டிய அனுமன் 'இதன் விரிவினை மேலும் கேட்பாயாக'என்று சொல்லி அடுத்த கவியிலிருந்து விரிவாகப் பேசத்தொடங்குகின்றான் அனுமான்.

அனுமான் சீதாப்பிராட்டியைத் தெய்வமாகக் கண்டு தரி சித்த உண்மையை, இராமசரிதத்தில் ஈடுபாடு கொண்ட பிற கவிஞர்களும் தெளிவுபடுத்தி உள்ளார்கள்.

திரு. K. R. ஸ்ரீநிவாச அய்யங்கார் அவர்கள், சீதாப் பிராட்டிக்குக் காப்பியத் தலைமை கொடுத்து 'சீதாயணம்' என்ற ஒரு கண்ட காவியமாக, அதனை ஆங்கில மொழியில் அருளியுள்ளார்கள். அதில், அனுமான் சீதாப்பிராட்டியிடம் கண்ட தெய்வக்காட்சி இராவணனிடம் தெரிவிப்பதாக அமைக் கப்பட்டுள்ளது. இந்த அமைப்பு, கதைப்போக்குக்கு நல்ல வளமளிப்பதாக இருக்கிறது.

Hanuman to Ravana
"Having had darshan of sita-I sense
The infinite behind her,
I wand you you're harbowing unaware
a fell five-hooded serpent"
(sitayana: Epic of the Earthborn 1987 Page; 355)

"இராவணா! நான் சீதாப்பிராட்டியைத் தரிசித்தேன்; அவள் பின்னால், பரம்பொருள் காட்சி அளிப்பதைக் கண்டேன். (நீ. அந்தப் பிராட்டியை வெறும் பெண்ணாகக் காண்கின்றாய். அப்படி அல்ல! உண்மையைச் சொல்கின்றேன் கேள்) அவள் ஐந்து தலை கொண்ட ஒரு நாகம். (அந்த நாகத்தால் வரும் ஆபத்தை உணராமல்) நீ பிராட்டியை இங்கு வைத்துக் கொண்டிருக்கின்றாய். நீ ஆபத்திலிருந்து தப்பித்துக்கொள் வதற்கு) உன்னை எச்சரிக்கின்றேன்"

என்பது, அனுமன் இராவணனுக்குக் கூறிய அறிவுரை யாகும்.

'என் பெருந்தெய்வம்' என்ற தமிழ்க் கவிதையின் தொடர், "darshan of sita--I sense The Infinite behind her" என்ற ஆங்கிலக் கவிதையில் இடம் பெற்றுள்ளதோ என்று எண்ணத்தோன்றுகிறது.

அனுமன் கண்ட தெய்வக்காட்சி, இராவணனைத் திருத்து வதற்குப்பயன் படுத்தப்பட்டால், அது மேலும் சிறப்புறும் என எண்ணினார் போலும் இந்நூலாசிரியர்.

# 8. பொறையின் நின்றாள்

பொன்அலது இல்லை பொன்னை
        ஒப்புஎனப் பொறையின் நின்றாள்
தன்அலது இல்லைத் தன்னை
        ஒப்புஎன; தனக்கு வந்த
நின்அலது இல்லை நின்னை
        ஒப்புஎன நினக்கு நேர்ந்தாள்;
என்அலது இல்லை என்னை
        ஒப்புஎன, எனக்கும் ஈந்தாள். (கம் 6033)

'பிராட்டி, உனக்குப் பெருந்தேவி, எனக்குப் பெருந்தெய்வம்' என்று அனுமன், முந்தைய கவிதையில் சொன்ன கருத்தை விரிவு படுத்துகிறது இந்தக்கவிதை.

**பொறை :**

'பொறுமை' என்ற குணம், யாரைச் சேர்கிறதோ, அவரை எவ்வளவு பெருமைக்கு உரியவர்களாக உயர்த்திவைக்கும் என்பதை அளவிட்டுக் கூற முடியாது. பொறுமையால் வரும் பெருமை அளவிடற்கு அரியது. பெருமையை வளர்க்கும் பொறுமை, முதலில் அளத்தற்கு அரிய துன்பத்தைத்தான் கொடுக்கும். 'துன்பத்தில் ஆழ்த்துவது எதுவோ, அதுதான், பிறகு நிலையான இன்பத்தைக் கொடுக்கும்' என்பது வாழ்க்கைத் தத்துவம்.

வாழ்க்கைத்தத்துவத்தை வெளிப்படுத்தி, மக்களுக்கு நல்வழி காட்டவந்த மகான், வள்ளுவப் பெருந்தகை அவர் பொறுமையின் பெருமையைக் கூறுவதற்கு ஒரு அதிகாரமே வகுத்துக் கொண்டார். அந்த அதிகாரத்துக்குப் பெயர் 'பொறை உடைமை' என்பதாகும்.

பொறுத்தலுக்கு எதிராக நிற்பது ஒறுத்தல். (ஒறுத்தல் -தண்டித்தல்) ஒறுத்தல் முதலில் இன்பம் கொடுக்கும்: பிறகு, தாங்கமுடியாத துன்பத்தைக் கொடுக்கும். பொறுத்தல் முதலில் தாங்கமுடியாத துன்பத்தைக் கொடுத்து, முடிவில் அளவிட்டுக் கூறமுடியாத இன்பத்தை, பெருமையோடு கலந்து கொடுத்து புகழேணியின் உச்சியில் ஏற்றிவைத்து விடும்.

**'ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம்: பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்'** **(திருக்குறள் 156)**

என்று, இரண்டுக்கும் இடையில் நிலவும் வேற்றுமையை விளக்கி உள்ளார் வாழ்க்கைநெறி கூறவந்த வள்ளுவர். (பொன்றும் துணையும்-உலகம் அழியும் அளவும்)

அழியும் உடலைக் கருவியாகக் கொண்டு, என்றும் அழியாப் புகழை ஈட்டிக் கொடுக்க வல்லது பொறுமை என்ற நற்பண்பு.

அந்தப் பொறுமை, இந்தச் சீதாப்பிராட்டியைச் சேர்ந்து, அவளைப் புகழுக்கு உரியவளாக உயர்த்தியது. அது மட்டும் அல்ல! அவளோடு தொடர்பு கொண்டவர்களுக்கும் பெரும் புகழைச் சேர்த்து வைத்துள்ளது. பிராட்டியின் பெறுமையால் யார் யார் எத்தகைய பெருமை பெற்றனர் என்பதை இக்கவிதையில் காணலாம்.

**உவமை**

சீதாப் பிராட்டியின் பொறுமையால் பெருமை பெற்றவர்களின் உயர்வை எப்படிப் புலப்படுத்துவது? காணாத ஒன்றைக் காட்டுவதற்கு, காணப்படும் ஒரு பொருளின் மூலம்

புலப்படுத்துவதைக் கவிஞர்கள் ஒரு கலையாகக் கொண்டுள்ளார்கள். தெரிந்த ஒன்றைக்கொண்டு தெரியாத ஒன்றை விளக்குவதற்கு உவமை என்று பெயர். கவிஞர்களுக்கு, வலதுகை போன்று நின்று உதவி செய்து கவிதையை அழகு படுத்துவதால், இதற்கு உவமை அணி என்றே பெயர்.

இந்த உவமை அணியின் மூலம், ஒவ்வொருவரது உயர்வையும் அனுமனைக் காட்டவைத்து விடுகின்றார் கவிச்சக்கரவர்த்தி.

**பொன் அலது இல்லை பொன்னை ஒப்பு:**

இந்தக் கவிதையில் உவமைக்காக முன் இடம் வகிப்பது பொன். பொன்னுக்கு உவமையாகச் சொல்லப்படுவதற்கு ஏற்ற பொருள் ஏதேனும் உலகத்தில் உண்டா? இதற்கு, பதில், இல்லை என்றுதான் வரும்.

பொன்னுக்குத் தங்கம் என்று பெயர் உண்டு அது, முதலில் மண்ணின் கீழ்த்தங்கியுள்ளது: மண்ணை விட்டு வெளியேறியதும், மக்கள் மனத்தைத் தங்குமிடமாக்கிக் கொண்டு, பிறகு அவர்களது பெட்டியில் தங்கிக்கொள்கின்றது. பெட்டியிலிருந்து வெளிவந்தால்,ஆபரணமாக அவதாரம் செய்து,மகளிரது உடலில் தங்கிக் கொள்கிறது அந்தப்பொன்.

பொன் ஒரு உலோகப் பொருள் அந்த உலோக இனத்தைச்சேர்ந்த, இரும்பு, செம்பு, பித்தளை, ஈயம் போன்ற எந்த உலோகப் பொருளும் பொன்னின் உயர்வுக்குப் பக்கத்தில் கூட நிற்க முடியாது. பொன், பெண்ணின் உடலை அழகு படுத்தும் ஆபரணமாக மாறுவதற்கு, எவ்வளவு துன்பத்தை ஏற்றுக் கொள்கின்றது! சுட்டுப்பொசுக்கவல்ல நெருப்புக்குள் புகுகிறது பிறகு, தானே நெருப்பின் தன்மையைப் பெற்று, சூடாக ஆகி விடுகிறது: சூட்டிலேயே தட்டுதலைப் பெறுகிறது. இவ்வளவு துன்பத்தையும் பொன் ஏற்றுக்கொள்வது எதற்காக? பிறரது நன்மைக்காக.

பிறர் அழகு பெறுவதற்காக, தனக்கு வரும் துன்பத்தைத் தாங்கிக் (பொறுத்துக்) கொள்கின்ற பொன்னின் உயர்வுக்கு ஒப்பான (சமமான) உயர்வு, வேறு எந்த உலோகத்துக்கும் இல்லை, அதனால், பொன்னுக்கு உவமை அந்தப் பொன்னே தான். அதைத்தவிர, உவமையாவதற்கு உரிய தகுதி, வேறு எந்த உலோகத்துக்கும் இல்லை.

தன்அலது இல்லை தன்னை ஒப்புஎன பொறையின் நின்றாள்

பொறுமைக் குணத்தில் நிலை நின்றவள் சீதாப்பிராட்டி. பிறர் அழகு பெறுவதற்காக, தங்கம் எப்படித் தனக்குவந்த துன்பத்தைத் தாங்குகின்றதோ. அதைப்போல, உலகினரின் நல்வாழ்வுக்காகத் தனக்கு வரும் துன்பத்தைப் பொறுமை யோடு தாங்கிக் கொள்கின்றாள் பிராட்டி.

'பொன்' உவமையாக வருவது 'பொறுமை' என்ற குண விளக்கத்துக்காக மட்டும் அல்ல! வேறு யாரும் பெறமுடியாத உயர்வைப் பெற்றுள்ள பிராட்டியின் உயர்வுக்கும் உவமை யாக்கப் பட்டுள்ளது பொன்.

பிராட்டி பெற்றுள்ள உயர்வைப் போன்று, பெண் இனத்தவரில் வேறுயாராவது பெற்றிருக்கின்றார்களா என்றால். ஒருவரும் இல்லை. 'தன்' என்ற சொல் பிராட்டி யைக் குறிப்பது. தனக்கு ஒப்புதானேதான். 'பொன்னுக்கு உவமை பொன்னேதான்' என்று சொல்வதுபோல, தனக்கு உவமை, தானேதான் என்று உலகத்தார் சொல்லும்படி பொறுமைக் குணத்தில் நிலையாக நின்றவள் பிராட்டி.

பெண் இனத்தவரில், சீதாப்பிராட்டி பெற்றுள்ள உயர்வைப் போன்று. உயர்வைப்பெற்றவர்கள் வேறுயாரும் இல்லை என்பது இதன் கருத்தாகும். இங்கு. நம் பாரத நாட்டு வேதாந்தச் சிங்கம் என்று யாவராலும் பாராட்டப் படுகின்ற விவேகாநந்தர் கூறியுள்ள ஒரு பொன்மொழி நம் சிந்தனைக்கு உரியதாகும்.

'இராமாயணக் காப்பியத் தலைவர்கள் இராமபிரானும் சீதாப் பிராட்டியும். காப்பியம் இராமன் பெயரால்தான் வழக்கப்படுகிறது. அவ்வளவு உயர்ந்தவன் இராமபிரான். ஆயினும், சீதாப் பிராட்டி அளவு, பெருமை உடையவன் அல்லன் இராமபிரான். இந்த இராமபிரானைப் போன்ற உயர்வுடைய ஒருவன், ஆண்கள் இனத்தில் ஒரு சமயத்தில் பிறந்தாலும் பிறக்கலாம். ஆனால், சீதாப்பிராட்டி போன்று ஒப்பு உயர்வற்ற ஒரு பெண் மணி, இம் மண்ணுலகத்தில். பிறக்க முடியாது. சீதைக்குச் சமமாக பெண்கள் இனத்தவரில் இதுவரை யாரும் தோன்றியதும் இல்லை: இனியும் யாரும் தோன்றவும் முடியாது' என்பது விவேகாநந்தர் கூறிய இராமாயணச் சிந்தனையில் எழுந்த பொன்மொழியாகும்.

தனக்கு வந்த நின்அலது இல்லை நின்னை ஒப்பு என நினக்கு நேர்ந்தாள்:

பிராட்டிக்குக் கணவனாக வந்த உனக்குச் சமமாகச் சொல்வதற்கு வேறு ஒருவரும் இல்லை என்று சொல்வதற் குரிய புகழை உனக்குத் தந்தாள். உனக்கு உவமை நீயேதான்.

இராமபிரானைப் போன்று, புகழ் பெற்றவர்கள் உலகத்தில் யாரும்இல்லை என்பது இதன்கருத்து.

இந்தப்புகழ் யாரால் வந்தது? பிராட்டியின் கற்புத் திறத்தால்தான் வந்தது. அனுமன் இதனை நேரில் கண்டவன்.

அசோகவனத்தில் பிராட்டி தன்னிடம் சொல்லியதை நினைத்துப் பார்க்கின்றான் அனுமன்.

'அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ?
எல்லை நீத்த உலகங்கள் யாவும், என
சொல்பினால் சுடுவேன்:' ஆனால் அதனை நான் ஏன் செய்யவில்லை? என்பதற்கு பிராட்டி கூறிய காரணம், பெருமான் புகழை உயர்த்துகிறது.

'அது, தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசு'

என்று வீசினேன்' என்பது, பிராட்டி தனது சொல்லால் இலங்கையைச் சுட்டெரிக்காததற்குக் கூறிய காரணம்.

'இலங்கையை அழிக்கும் வேலையை, தானே செய்து விட்டால், தனக்குக் கணவனாக வந்த தூயவனாகிய இராமபிரானது வில்லின் ஆற்றலுக்குக் குறைவு வந்துவிடுமே' என்பது பிராட்டியின் கருத்தாகும். இலங்கையை இல்லாத வண்ணம் சுட்டு எரித்துச் சாம்பலாக்கி விடக்கூடிய ஆற்றல் தனக்கு இருந்தும், அவ்வாற்றலை வீசி எறிந்துவிட்டாள் சீதாப் பிராட்டி. ஏன்? அவ்வாற்றலைப் பயன்படுத்தி விட்டால், தன் கணவனது புகழுக்கு இழுக்கு வந்துவிடுமே? என்ற கற்பொழுக்கத்தில் நின்ற தூய எண்ணத்தால்தான், வீசி எறிந்தாள்.

எது வீசி எறியப்படும்? பயன் படாத பொருள் எதுவோ அதுதான் வீசி எறியப்படும். 'கறங்கு கால் புகா: கதிரவன் ஒளி புகா.' என்று வியந்து பாராட்டக் கூடிய வலிமை வாய்ந்த இலங்கையை, இருக்கும் இடம் தெரியாத வண்ணம், அழித்து விடக் கூடிய பேராற்றலை, பயன் அற்றது என்று வீசி எறிந்து விட்டாள் பிராட்டி. தனக்குக் கணவனாக வாய்த்த இராம பிரானது வில்லாற்றலை உலகுக்குக் காண்பித்து, அவனது பெரும் புகழை நிலை நாட்டுவதற்குக் கொடுக்கக் கூடிய வாய்ப்புக்கு முன்னால், தனது ஆற்றலைப் பயனற்றதாகக் கண்டாள் பிராட்டி. அதனால் வீசி எறியப்பட்டது பிராட்டியின் ஆற்றல்.

'தாரம் மற்றுஒருவன் கொள தன்கையில்

பார வெஞ்சிலை வீரம் பழிப்பதே'

என்று தனது கணவனது வில்லாற்றல் பிறரால் பழிக்கப் படும் அளவிற்கு விட்டு விடுவாளா கற்புக்கு அணியாக விளங்குபவள்?

இதனை, பிராட்டியின் சொல்லால் உணர்ந்தவன் அனுமன். அதனால், 'உன்னை ஒப்பார் உலகத்தில் யாரும் இல்லை. என்ற பெரும் புகழை (என) உனக்குக் கொடுத்தாள் பிராட்டி' என்று துணிவாகக் கூறினான் அனுமன்.

'புகழ் புரிந்த இல் இல்லோர்க்கு இல்லை இகழ்வார் முன்
ஏறுபோல் பீடு நடை' என்ற திருக்குறளை நினைவூட்டு கின்றது கவிதையின் இந்தத் தொடர்.

'நினக்கு நேர்ந்தவள் எனக்கும் ஈந்தாள்' என்று பிராட்டி தனக்குக் கொடுத்த பேற்றினைப் பற்றி அனுமன் அடுத்தபடியாகச் சொல்கின்றான்.

என் அலது இல்லை ஒப்பு என எனக்கும் ஈந்தாள்: 'என்னை ஒப்பவன் என்னை அல்லது வேறு ஒருவனும் இல்லை என்ற பெருமையை எனக்கும் அருளினாள்' என்பது, அனுமன் இறுதியாக உறுதியாகக் கூறிய மொழியாகும்.

அனுமனுக்குப் பெருமை,தூதுபோய் வந்தசெயல்,அதனால் பெருமானும் பிராட்டியும் பயன்பெற்றனர்.

'ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டு எலாம் உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றுஎன இருத்தி!

என்று பிராட்டி ஆசீர்வாதம் செய்யும் பெருமையும் பெற்றவன் நான் ஒருவனே. 'நான் சிரஞ்சீவியாக இருக்கும் அளவிற்கு, என்னை வாழ்த்தினாள் பிராட்டி. இந்தப் பெருமை எனக்கு ஒருவனுக்கே கிடைத்தது? என்றான் அனுமன்.

'வாதமாமகன் மர்க்கடம் விலங்கு' என்று இகழாமல் உகந்து ஏற்றுக்கொள்ளும் பெருமையும், தன்வாலில் இட்ட அக்கினி சுடாமல் இருந்த பெருமையும், அதனால் இலங்கையை எரித்த பெருமையும், பிராட்டியினால்தான் தனக்குக் கிடைத்தது என்பது அனுமனது நம்பிக்கை.

தனக்குச் சமமாக இருப்பவர்கள் உலகத்தில் தன்னைத் தவிர வேறு யாவரும் இல்லை என்று சொல்லும்படியான பெருமையை, பிராட்டிதான், தனக்குக் கொடுத்தாள் என்பது அனுமனுடைய கருத்து.

'பொறையின் நின்றாள், நினக்கு நேர்ந்தாள், எனக்கும் ஈந்தாள்' என்று பிராட்டியின் கொடைத்தன்மையைக் கூறு கின்றான் அனுமன்.

'இல்லை' என்ற சொல்லும், 'ஒப்பு' என்ற சொல்லும் ஒவ்வொரு அடியிலும் இடம் பெற்றுள்ளன. 'ஒப்பு இல்லை' என்ற தொடர் மூலம், இந்தக் கவிதை ஒப்பு இல்லாததோர் உயர்வு பெற்று விளங்குகிறது என்று சொல்லலாம்.

# 9. குலப்பெருமை கொடுத்தாள்

9 உன்குலம் உன்னது ஆக்கி,
உயர்புகழ்க்கு ஒருத்தி ஆய
தன்குலம் தன்னது ஆக்கி,
தன்னைஇத் தனிமை செய்தான்
வன்குலம் கூற்றுக்கு ஈந்து,
வானவர் குலத்தை வாழ்வித்து,
என்குலம் எனக்குத் தந்தாள்:
என்இனிச் செய்வது எம்மோய்? (கம் : 6034)

'உனக்குப்புகழையும் எனக்குப் பெருமையையும் தந்த பிராட்டி, நமது குலப் பெருமையையும் உயர்த்தியுள்ளாள் என அனுமன் கூறுவதாக அமைந்தது இந்தக் கவிதை.

**குலம் :**

இந்தச் சொல், மரபு, குடி, வம்சம், கூட்டம் இனம் என்ற சொற்களுக்கு மாற்றுச் சொல்லாக வருவது. 'சொல்லறம் துறந்திலாத சூரியன் மரபும்' 'ஆதித்தன் குல முதல்வன்' என்றும், 'எளிவந்த இது முந்து என் குலம் செய்தவம்' (குடி) என்றும், 'குலம் அணித்தோள் சம்பரனைக் குலத்தோடும் தொலைத்து' '(இனம்) (வம்சம்) என்றும், குன்றாதவலி அரக்கர் கோனை மாளக் கொடுஞ்சிலை வாய்ச் சரந்துரந்து குலம் களைந்து வென்றாள்' (கூட்டம்) என்றும், மேற்கண்ட ஐந்து சொற்கள் வரவேண்டிய இடங்களை நிரப்ப வந்துள்ளது 'குலம்' என்ற சொல்.

ஒரு குலத்தின் புகழும் பெருமையும் அக்குலத்தில் பிறந்தவர்களைச் சேர்வது இயல்பு. ஒருவனுடைய சொல்லும் செயலும் அவன் பிறந்த குலத்தின் பெருமை யையும் புகழையும் மேலும் உயர்த்துவதாக அமைய வேண்டும். எவன் ஒருவன் தான்பிறந்த குடி (குலம்)யின் பெருமையை உயர்த்துவதற்காகச் செயல்படுகின்றானோ, அவனுக்கு உதவுவதற்குத் தெய்வமே முன்வந்து நிற்கும். இந்தக் கருத்தை,

'குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்' (1023) என்ற திறக்குளின்

மூலம் திருவள்ளுவர் தெளிவாக்கியுள்ளார்.

மனிதன், தான் பிறந்த ஒரு குலத்தை மட்டும் தன் செயலால் உயர்த்துவான். இங்கு, பெருந்தெய்வமாக விளங் கும் சீதாப்பிராட்டி, தான் மேற்கொண்ட செயலால், நான்கு குலங்களை உயர்வு பெறச்செய்துள்ளாள்.

**உன் குலம் உன்னது ஆக்கி :**

'பிராட்டி, தான் புகுந்த குலமாகிய உனது குலத்தை, உன்பெயரால் வழங்கும் குலமாக உயர்த்தி வைத்தாள். இராமன் பிறந்தகுலம், சூரியன்குலம் என்றும் ரகுகுலம் என்றும், மனுகுலம் என்றும், ககுஸ்தகுலம் என்றும் இதற்கு முன்பு வழங்கப்பட்டது. இனி அந்தக்குலம், இராமகுலம் என்றும் இராகவகுலம் என்றும் இராமன்பெயரால் வழங்கும் ஒரு குலத்தில் பிறந்தவர்களில் யார் மிகப் பெரிய புகழுக்கு உரியவர்களாக வாழ்கின்றார்களோ, அவர்களது பெயர் தான் அந்தக்குலத்திற்குப் பெயராக இடப்படும். இது உலக நியதி. சீதாப்பிராட்டியின் கற்புத்திறம், இராமபிரானை, யாவரினும்,புகழுடையவனாக உயர்த்தி விட்டதால்,அவனே பெரியோன் ஆகின்றான். அதனால் இராகவகுலம் என்று தான்,' ஆதித்தன்குலம், இனிமேல், வழங்கப்படும்.

உயர்புகழ்க்கு ஒருத்தியாய தன்குலம் தன்னது ஆக்கி :

தனக்கு ஒப்பார் ஒருவரும் இல்லாத அளவுக்கு, புகழ் நிரம்பிய பிராட்டி, தான் பிறந்த குலத்தை (குடியை)தனக்கு உரியதாக்கிக் கொண்டாள். 'கோளுடை விடை அனான் குலத்துள் தோன்றிய வாளுடை உழவன்' என்று பிராட்டி பிறந்த குலம், சனகன்பெயரால் கூறப்பட்டது. இனிமேல், அந்த ஜனகன்குலம் ஜானகிகுலம் என்று பேசப்படும்.

கற்புடைப் பெண்ணொருத்தி, தான் பிறந்த குலத்தை விட, புகுந்த குலத்தைதான் முதன்மையுடையதாகக் கருதுவாள். அதனால், 'உன்குலம் உன்னது ஆக்கி' என்று புகுந்த குலத்தை முதலில் கூறி, அடுத்தபடியாக, தன்குலம் (பிறந்தகுலம்) தன்னது ஆக்கியதைக் கூறினான் அனுமான்.

தன்னை இத் தனிமை செய்தான் வன்குலம் கூற்றுக்கு ஈந்து: தன்னை, இராமபிரானிடமிருந்து பிரித்து, இவ்வாறு தனிமைப் படுத்திய இராவணன் குலம். வன் குலமாயிற்று. அந்தக் கொடுமை நிறைந்த குலத்தை (வம்சம்) எமனுக்கு உரியதாக்கினாள் பிராட்டி. 'அயன் முதல் குலம்' என்று (அயன்-பிரம்மதேவன்) என்று சிறப்பித்துப் பேசப்பட்ட (வம்சம்) குலம், அக்குலத்தில் பிறந்த இராவணனது தீய செயலால், 'வன் குலம்' என்று சொல்லப்படும் அளவுக்கு இழிவு பெற்றுவிட்டது. 'அந்த அரக்கர் குலம் அழியப்போவது உறுதியாகையால், வன்குலத்தைக் கூற்றுக்கு (எமனுக்கு) ஈந்து' என்று அனுமான்கூறினான்.

**வானவர் குலத்தை வாழ்வித்து :**

இராவணனது கொடுமையால், தேவர்கள். தாங்கள் சுதந்திரமாக வாழ முடியாதவர்களாக இருந்தனர். இராவணனது வம்சத்தையே இல்லாதபடி செய்யப் போவதால், இனிமேல், தேவர்கள் உரிமை பெற்று வாழ் வார்கள். மண்ணுலகத்து இராவணனது வீழ்ச்சி, விண் ணுலகத்து வான்வர்களதுகுலத்தை(கூட்டம்)வாழவைக்கும் தேவர்களது குலத்தை வாழவைத்தாள் பிராட்டி என்பது இத் தொடரின் கருத்தாகும்.

**என்குலம் எனக்குத்தந்தாள் :**

'எனதுகுலம்' 'குரங்கு இனம்' என்று, தான் பேசப் பட்டுவந்தது.'அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல்,அதற்கு வேறு ஓர் குரக்கு இனத்து அரசைக் கொல்ல மனு நெறி கூறிற்று ஒன்றோ,' என்று அந்த இனத்து அரசனாகிய வாலியே கூறுவான். அப்படிப்பட்ட எனது குலத்தை (இனத்தை)'அனுமார்குலம்'என்று பேசத்தக்க பெருமையை எனக்குக்கொடுத்தாள் பிராட்டிஎன்று அனுமன் கூறினான்.

பிராட்டி இலங்கையில் சிறை வாழ்க்கையை மேற் கொண்ட அரியசெயலால்,அயோத்தியிலிருந்த சூரியன்குலம் (மரபு) இராமன்குலமாயிற்று: மிதிலையிலிருந்த ஜனகன் குலம் ஜானகி குலமாயிற்று: கிட்கிந்தையிலிருந்த குரங்கு குலம் அனுமார் குலமாக உயர்வு பெற்று விட்டது.

சீதையின் சிறை வாழ்க்கை, இராவணனது குலத்தை வீழவைக்கும்: வானவர் குலத்தை வாழவைக்கும்.

ஒருவர் தனது அரியசெயலால் தனது குலத்தைமட்டும் பெருமைப் படுத்த முடியும்? இந்தப் பிராட்டியோ. தனது பொறுமைக் குணத்தால், தன்னோடு தொடர்பு கொண்ட ஐந்து குலத்துக்கும் செய்ய வேண்டியதைச் செய்தாள்.

**என் இனிச் செய்வது எம்மோய்? :**

'எம்மோய்-எனது தாயாக விளங்கும் பிராட்டி, இதற்கு மேல் செய்யத்தக்கது என்ன இருக்கிறது?' என்ற வினா வோடு, பிராட்டி, ஒவ்வொருவரது குலத்துக்கும் தந்த பெருமையைச் சொல்லி முடித்தான் அனுமான்.

குலப்பெருமை தந்த அந்தப் பிராட்டியின் திருவுருவம் அனுமனுக்கு எவ்வாறு காட்சி தந்தது என்பதை அடுத்த கவிதையில் அவன் கூறுகின்றான்.

# 10. நற்பெருந்தவத்தள்

10 விற் பெருந் தடந்தோள் வீர!
 வீங்கு நீர் இலங்கை வெற்பில்,
நற்பெருந் தவத்தள் ஆய
 நங்கையைக் கண்டேன் அல்லேன்;
இற்பிறப்பு என்பது ஒன்றும்
 இரும் பொறை என்பது ஒன்றும்,
கற்புஎனும் பெயரது ஒன்றும்,
 களிநடம் புரியக் கண்டேன். (கம்-6038)

அனுமன், அசோகவனச் சிறையில் கண்டதையும் காணததையும் கூறுவதாக அமைந்தது இந்தக் கவிதை.

**உருவமும் அருவமும்:**

கண்ணுக்குத் தெரிவது உருவம்: கண்ணுக்குத் தெரியாதது அருவம். தெரிகின்ற உருவத்தின் மூலம், தெரியாத அருவத்தையும் காண்பவன், பேராற்றல் படைத்தவனாகின்றான். எல்லோருக்கும் எது ஒன்று வெளிப்படையாகத் தெரியுமோ, அதை, தான் காணவில்லை என்றும்; யாவராலும் காணமுடியாத ஒன்றைத் தான் கண்டதாகவும் பேசுகின்றான் அனுமன்.

கவிதையின் முதற்பகுதி, அனுமன் காணாததைப்பற்றியும், பிற்பகுதி, அவன் கண்டதைப் (பார்த்ததை) பற்றியும் கூறுகின்றது.

**விற்பெருந்தடந்தோள் வீர!;**

வில்லை ஏந்திய பெரிய அகன்றதோள்களை உடைய வீரனே! வீரனுக்கு அழகு, வீரத்தை வெளிப்படுத்துவதற்கு ஏற்ற கருவியை எப்போதும் தோளில் தாங்கி நிற்பது. 'கோதண்ட ராமனே' என்று இராமபிரானை அனுமன் அழைத்துப்பேசத்தொடங்குகின்றான். இராமனது வில்லாற்றலை உலகுக்கு,வெளிப் படுத்துவதற்காகவே,பிராட்டி சிறை வாழ்க்கையை மேற்கொண்டிருக்கின்றாள் என்பது குறிப்பு.

**வீங்குநீர் இலங்கை வெற்பில் :**

நீர் நிறைந்த கடலால் சூழப்பட்ட இலங்கை என்ற பெயர் கொண்ட மலையில் (வீங்கு-மிகுதி) (வெற்பு-மலை) 'கடிநகர் இலங்கை' என்று நகராகக் கூறப்பட்டிருப்பது, வெற்பு (மலை) என்று சொல்லப் பட்டுள்ளது. கடலுக்கு நடுவில் உள்ள மலை. சுற்றிலும் உள்ள தண்ணீர், மலை வாழ் மக்களுக்குப் பாதுகாப்பு. இலங்கை. வெற்பாகச் சொல்லப் பட்டதன் காரணத்தை, அதனைத் தொடர்ந்து வந்துள்ள அடுத்த சொல் தொடரைக் கொண்டு உணரலாம்.

**நற்பெருந் தவத்தள் ஆய நங்கை :**

தவம் செய்வதற்கு எற்ற இடம் எது? மலைதானே? இலங்கை வெற்பில், இப்போது தங்கியிருப்பவள் தவம் செய்பவள். எப்படிப்பட்ட தவம்? நற்பெருந்தவம். சீதாப் பிராட்டி தவத்தவளாகவும் பெருந்தவத்தளாகவும் நற்பெருந்தவத்தவளாகவும் செயல்படுபவள்.

பெண்ணின் தவம்: என்பது ஒருமை மகளிராக, கணவனோடு இல்லில் தங்கி, இல்லற நெறியில் சிறிதும் பிறழாது, அறவோர்க்கு அளித்தல், அந்தணர் ஓம்பல்,துறவிகளை வரவேற்றல், சிறப்பிற்குரிய விருந்தினர்களை உபசரித்தல் முதலிய நற்காரியங்களாகிய இல்லறக் கடமைகளை நிறைவேற்றி மகிழ்தலாகும்.

பெண்ணின் பெருந்தவம் என்பது, தனது கைத்தலம் பற்றிய கணவனது வாழ்விலும் தாழ்விலும் கணவனைப் பிரியாது உடன் இருந்து, அவன் செய்யும் பெருங்காரியங் களுக்கு உதவியாக நின்று கற்பை, நோன்பாகக் கருதி நோற்பதாகும்.

பெண்ணின் நற்பெருந்தவம் என்பது, தனது தலைவ னாகிய கணவனிடமிருந்து பிறர் தன்னைப் பிரித்தாலும், துன்புறுத்தினாலும், கணவனது புகழுக்கு குறைவு வாராத படி, கற்பு நெறியைக் காத்து நிற்பதாகும்.

சீதாப் பிராட்டி, தவத்தவளாக வாழ்ந்ததை, அயோத்தியில் யாவரும் கண்டிருப்பர். பெருந்தவத்தவ ளாக உயர்ந்ததை, ஆரணியவாழ்வில் இராமபிரான் கண்டான். அவள் நற்பெருந்தவத்தவளாக மேலோங்கி நிற்பதை அனுமன் ஒருவனே கண்டான்.

நற்பெருந்தவத்தினளாக பிராட்டி உயர்ந்திருப்பதால், 'நங்கை' என்று சொல்லப்படுகின்றாள். பெண்களுக்கு உரிய எல்லா நற்குணங்களையும் உடையவள் யாரோ? அவள் தான், நங்கை என்று சொல்லத் தக்கவளாவாள். சீதாப் பிராட்டி, நற்குணங்களால் நிரப்பபப்ட்ட முழுமை பெற்றவள்.

அயோத்தியில் தவத்தவளாக வாழ்ந்தபோதும், ஆரணியத்தில் பெருந்தவத்தவளாக, கணவனைப் பிரியாது நின்று அவனுக்கு உதவிகரமாகச் செயல்பட்டுக் கொண் டிருந்த போதும் பெறமுடியாத முழுமையை, பிராட்டி இலங்கை வெற்பில் நற்பெருந்தவத்தவளாக நின்று பெற்றுவிட்டாள்.

'நற்றவஞ் செய்வார்க்கு இடம்: தவஞ்செய்வார்க்கும் அஃகு இடம்' என்ற சிந்தாமணித்தொடரில் தவமும் நல் தவமும் கூறப்பட்டுள்ளது. 'தவம்' என்பது இல்லறம். நல்தவம் என்பது துறவறம் என்று அங்கு விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

திருமங்கை ஆழ்வார்கூட, தனது திருநெடுந் தாண்டகத்தில்,

'பேராளன் பேரோதும் பெண்ணை மண்மேல்
பெருந் தவத்தள் என்றல்லால் பேசலாமே' (20)

என்று, தவத்திற்குப் பெருமை மட்டுமே தந்தார்.

இங்கு, அதற்கும் மேலாக, தவத்தோடு நன்மையும் பெருமையும் சேர்ந்து. 'நற்பெருந்தவமாக' உயர்வு பெற்றுள்ளது.

சீதாப்பிராட்டியை. நற்பெருந்தவத்தளாய நங்கையாக, வீங்கு நீர் இலங்கை வெற்பில் காணும் நற்பேறு, செயல் வீரனாகிய அனுமன் ஒருவனுக்கே கிட்டியுள்ளது.

**கண்டேன் அல்லேன் :**

'நங்கையைக் கண்டேன்' என்றுதான் வாக்கியத்தைச் சொல்லிமுடிக்கப் போகின்றான்' என்று இராமபிரான் முதலிய அனைவரும் எண்ணிக் கொண்டிருந்திருப்பார். ஆனால், வாக்கியம். கேட்பவர்களது எண்ணத்துக்கு மாறாக அமைந்து விட்டது.

எதிர் பார்ப்பதை விட எதிர்பாராததன் வரவுதான், இறுதியில் இன்பம் அளிக்கும். கேட்பவர்களது செவிக்குத் தேன் என இனிக்கும் கருத்துக்களைத் தாங்கிவரும் சொற்களை வழங்குவதற்கு முன்னால், எதிர் மறைச் சொல்லை அமைப்பது எதற்கு என்பது சொல்வல்லானுக்குத்தான் புரியும்!

'அல்லேன்' என்ற எதிர் மறைச்சொல், கேட்பவர்களது செவிக்கு வெறுப்பைக் கொடுப்பதுதான். ஆனால், அதுதான் கேட்பவர்கள் உள்ளத்தில் ஒரு வியப்பை ஏற்படுத்தி, பிறகு அளவிலாத ஆனந்தத்தை அளிக்க வல்லதாக அமைகின்றது

'நங்கையைக்காணவில்லை'ஏன்? இராமபிரான் சொன்ன அங்க அடையாளங்கள் யாவும், நிரம்பிய பிராட்டி முன்பு,' 'தேவு தெண்கடல் அமிழ்து கொண்டு அனங்கவேள் செய்த ஓவியமாக' விளங்கியிருந்திருப்பாள். இப்போது, இலங்கை வெற்பில், அந்த ஓவியம், புகை உண்டதே ஒக்கின்ற உருவத்தினளாக உள்ளாள். 'மென்மருங்குல் போல் வேறு உள அங்கமும் மெலிந்து விட்டதல்லவா! அதனால், இராமபிரான் சொன்ன புற உறுப்பு அடையாளங்கள் எதுவும் இல்லை. 'அதை நான் காணவில்லை' என்று அனுமன் சொல்லுகின்றான். அப்படியானால் கண்டது என்ன?

இராமபிரான் சொன்ன அங்க அடையாளங்கள் கொண்ட பிராட்டி, நற்பெருந்தவத்தளாய நங்கையாக விளங்குவதற்குக் காரணமாக இருக்கும் குணங்கள் எவையோ, அவைகளைக் கண்டதாகக் கூறுகின்றான் அனுமன்.

இற்பிறப்பு என்பது ஒன்றும் இரும் பொறை என்பது ஒன்றும் கற்புஎனும் பெயரது ஒன்றும் களிநடம் புரியக் கண்டேன்:

'உயர் குடியில் பிறத்தல் என்ற குணமும், சிறந்த பொறுமை என்ற குணமும், பதிவிரதாதருமம் என்ற குணமும் ஒன்றாகச் சேர்ந்து களிப்போடு கூத்தாடிக் கொண்டிருப்பதைக் கண்டேன்.' என்று அனுமன் கூறினான்.

**இற்பிறப்பு :**

இல்லுக்குரிய பிறப்பு. பெண்ணுக்கு, இல் என்பது பிறந்த இல் ஒன்று: புகுந்த இல் என்பது ஒன்று, அரசர்களுள் சிறந்த அரசனாகவும், ஞானியர்களுள் மேலான ஞானியாகவும் விளங்கும் சனகனது இல்லில் (அரண்மனையில்) பிறப்பு என்றால் அதற்கேற்ற உயர் குணமும், நல்லற மூர்த்தியாய தசரதப் பேரரசனது இல் (அரண்மனை) புகுந்த இடம் என்றால், அதற்கேற்ற நற்குணமும்

நிரம்பியிருப்பதுதான், 'இல் பிறப்பு' எனப்படும், இந்த இரண்டு இல்லங்களுக்குரிய உயர் குணங்கள் பிராட்டியின் பிறப்பிலேயே அமைந்திருந்தன. அந்த இற்பிறப்பு, வெளிப் படையாகத் தோற்றம் அளிப்பதற்கு, இப்போது வாய்ப்பு கிடைத்துள்ளது.

**இரும் பொறை :**

சிறந்த பொறுமைக் குணம். பொறுமை என்ற குணம், சிறப்புப் பெற்றது, சீதைப் பிராட்டியைச் சேர்ந்த பிறகுதான். இந்தப் பொறுமை, சீதையின் இயல்பிலேயே அமைந்த ஒரு குணம்தான். ஆயினும், அது, 'இந்தப் பிராட்டியினிடம் நான் இருக்கின்றேன்' என்பதை வெளிப் படையாகத் தெரிவிப்பதற்குக் கிடைத்த வாய்ப்பு, அவளது சிறை வாழ்க்கையாகும்.

பொறுமை, சிறை வாழ்க்கையில் எந்த வகையில் வெளிப்பட்டது? இராவணன் கூறிய கேட்கத்தகாத வார்த்தைகளையும், அரக்கியர்கள் இழைத்த கொடுஞ் செயல்களையும் பொறுத்துக் கொண்ட வகையில் வெளிப் பட்டது என்று கொள்ளலாம். அதைவிட, பொறுமையின் வெளிப்பாட்டை வேறு ஒரு வகையில் காண்பதுதான் சிறப்புக்குரியதாக அமையும்.

இலங்கையை அழிக்கும் ஆற்றல் சீதாப் பிராட்டியிடம் இருக்கிறது. 'சொல்லினால் சுடுவேன்' என்று தன் ஆற்றலை, தானே கூறியுள்ளாள் பிராட்டி. அதனை வெளிப்படுத்தினால், இராமபிரானது வில்லாற்றலுக்குக் குறைவுவரும். கணவனது ஆற்றலின் வெளிப்பாட்டுக்குக் குறையேற்படும்படியாக, மனைவி தனது ஆற்றலைப்பயன் படுத்துவது கற்புடைமைக்கு அழகு அல்ல! அதனால், சீதாப்பிராட்டி, தனது ஆற்றல் வெளிப்படுவதைப் பொறுத்து கொண்டாள். இந்த வகையில் பொறுமையின் சிறப்பைக்காணச் செய்வது அடுத்த சொல்லின் தொடர்பு.

**கற்பு :**

கற்பு என்பது, தன் கைத்தலம் பற்றிய கணவனை என்றும் பிரியாது நின்று, அவன் 'செய'லுக்குத் துணையாக நிற்பதுஆகும். 'கற்பெனப்படுவது சொல் திறம்பாமை' சொன்னசொல் திறம்பாது இருத்தல். யார்சொன்ன சொல்? கணவனது குறிக்கோள் வாழ்க்கையின் நிறைவுக்காக, மனைவி சொன்ன சொல்லை, என்றும் காப்பாற்றுவது. எந்தச் சூழ்நிலையிலும் காப்பாற்றப் படவேண்டும். இந்த நற்குணமும் பிராட்டியின் இயல்பில் அமைந்த ஒன்று.

இந்த நற்குணங்கள் மூன்றும் பிராட்டியோடு ஒட்டிப் பிறந்தவைகள்தான். இந்த உண்மையை உள்ளபடி அறிந்தவர், சீதையை இளமைப் பருவத்திலிருந்தே, கண்டு வந்த சதானந்தர் என்ற முனிவர்.

**'குணங்களை என் கூறுவது? கொம்பினைச் சேர்ந்து அவை உய்யப்**
**பிணங்குவன; அழகு இவளைத் தவம்செய்து பெற்றது காண்.'**

என்பது சதானந்தரின் சீதையைப் பற்றிய அறிமுகம்.

இற்பிறப்பு, இரும் பொறை, கற்பு போன்ற பெண் மைக்கு உரிய நற்குணங்கள், 'நாம் உலகில் வாழ வேண்டுமே! யாரைச் சேர்ந்தால் நமது வாழ்க்கை சிறப்புறும்,' என்று இந்தக் குணங்கள் ஒருங்கு கூடியோசித் தனவாம். முடிவில் 'சீதையை அடைந்தால்தான், நமது சிறப்பு, வெளிப்படும்' எனத் தீர்மானம் செய்துகொண்டன வாம். அதனால், அக்குணங்கள் போட்டிபோட்டுக் கொண்டு, ஒன்றற்கு ஒன்று முந்திக் கொண்டுவந்து, சீதையைச் சேர்ந்து கொண்டனவாம். (கொம்பு - சீதை: உய்ய - வாழ்வு பெறுவதற்காக: பிணங்குவனபோட்டி போட்டுக்கொண்டு வருவன)

மங்கையர்கள் எல்லாம் அழகைப் பெறவேண்டுமே என்று தவம் கிடப்பார்கள். இங்கு, 'அழகு' என்ற ஒன்று தவம்செய்து, அதன் பயனாக இந்தச் சீதையைப் பெற்றுக் கொண்டுவிட்டது. என்பது இக்கவிதைத் தொடரின் விளக்கம்.' 'அழகு, இவளைத் தவம் செய்து பெற்றது காண்' சதானந்தர், சீதையின் அழகை எவ்வளவு அழகாகக் கூறுகின்றார். 'உருவம் அழகிதோர் உடம்பது பெறுதலும் அரிதே' - இங்கு அது எவ்வளவு எளிமையாகியுள்ளது!

**'பெண்மை, நாண். வனப்பு, சாயல், பெருமட, மாதுபேசின்,**
**ஒண்மையின் ஒருங்கு கூடி உருவுகொண் டனைய நங்கை'**

என்ற சீவக சிந்தாமணிக் கவிதைத் தொடர் இங்கு நம் சிந்தனைக்கு உரியதொன்றாகும்.

விசயமாதேவியின் சிறப்பு, பேசப்படுகின்றது. அமைதித் தன்மை, (பெண்மை) நாண், அழகு, மென்மை, மடம், காதல் ஆகிய பெண்களுக்குரிய இந்தக் குணங்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து (ஒருங்கு கூடி) உலகில் விளக்கம் பெறுவதற்காக, ஒருவடிவு கொண்டாற் போன்ற நங்கை. இந்த விசனையயைச் சேர்ந்தால்தான் நாம் விளக்கம் (ஒண்மை) பெறமுடியும் என்று இந்தக் குணங்கள் எல்லாம் எண்ணிவிட்டனவாம்.

சிந்தாமணியில், குணங்கள் ஒருங்குகூடி, விசனையயின் உருவத்தைப் பெற்றுக் கொண்டுவிட்டன. இங்கு, அக் குணங்கள் ஒன்றுக்கு ஒன்று முந்திக் கொண்டு வந்து கொம்பிளனச் (சீதை) சுற்றிக்கொண்டுவிட்டன.

**களிநடம் ;**

இற்பிறப்பும், இரும்பொறையும், கற்பும். பிராட்டியைப் பற்றிக் கொண்டாலும், அவைகள் வெளிப்படுவதற்கு வாய்ப்பு இல்லாமல் இருந்தது. சீதாப் பிராட்டி சிறை வாழ்க்கையை, மேற்கொண்டதால், அவைகளின் வெளிப் பாட்டுக்கு வாய்ப்புக்கிடைத்து விட்டது, அவைகள்

உய்வதற்குத்தானே சீதையை வந்து சேர்ந்திருந்தன? இந்த வாய்ப்புக் கிட்டியதும் மகிழ்ச்சியினால், களிக் கூத்தாட்டம் செய்யத் தொடங்கிவிட்டன.

நற்பெருந்தவத்தளாய நங்கையின் தோற்றத்தில் இந்த நற்குணங்கள் களிநடம் புரியும் காட்சியைக்காணும் வாய்ப்பு அனுமன் ஒருவனுக்கே கிடைத்தது. இந்தக் கவிதையில் கருத்துச் செறிவும், கற்பனைவளமும் காவியச் சுவையோட்டமும் ஒன்று சேர்ந்து களிநடம் புரிதலையாவரும் கண்டு இன்புறலாம்.

நங்கையின் தோற்றத்தில் குணங்களின் களிநடனத்தைக் காணும் அகக்கண்-ஞானக்கண்-உணர்வுக்கண் அனுமனுக்கு இருந்தது. அதனால்,காட்டலாகாப் பொருளாகிய கருத்துப் பொருளைக் கண்டான். கண்ட களிப்பினால், அனுமனும் 'ஆடினன்; பாடினன்; ஆண்டும் ஈண்டும் பாய்ந்து ஓடினன்; உலாவினன்:-உவகைத்தேன் உண்டாள். உண்டவாறு உரைப்பார்போல, கண்டதைக் கண்டபடியே களிப்போடு இராமபிரானிடம் கூறினான் அனுமான்.

இந்தக்கவிதையில், எவைகளைக்களிநடம் புரிய வைத் துள்ளார் கவிச்சக்கரவர்த்தி? என்பதைக் காண்பதற்கும், அவைகளைக் கண்டுகளிப்பதற்கும் கவிதா ரசனைக்கண் வேண்டும். அந்தக்கண் கொண்டு ரசித்தவர்கள்,தாம் கண்ட கவிதா அனுபவ ஆனந்தத்தைப் பிறர்க்குச் சொல்லாமல் இருக்க முடியாது. அனுமான், தான் கண்டதைச் சொல்லி மகிழ்ந்தது போன்று, கவிதாரசிகர்களும் சொல்லிச் சொல்லி மகிழ்வார்கள்.

# 11. பிரிந்திலன்

11. ‘கண்ணினும் உளை நீ: தையல்
கருத்தினும் உளை நீ: வாயின்
எண்ணினும் உளை நீ; கொங்கை
இணைக்குவை தன்னின், ஓவாது
அண்ணல்வெங் காமன் எய்த
அலர் அம்பு தொளைத்த ஆறாப்
புண்ணினும் உளை நீ: நின்னைப்
பிரிந்தமை பொருந்திற்று ஆமோ?
(கம்-6036)

கணவனைப் பிரியாமல் இருப்பதுதான், கற்பு நெறியில் நிற்கும் மனைவிக்கு அழகு, சீதாப் பிராட்டி இராமபிரானை விட்டுப் பிரியாமல்தான் இருக்கிறாள் என்பதை, பெருமான் உணரும் வண்ணம். அனுமான் கூறுவதாக அமைந்தது இந்தக் கவிதை.

சென்ற கவிதை, இற்பிறப்பு, இரும் பொறை, கற்பு ஆகிய அருவமாகிய குணங்களை, சீதாப் பிராட்டியின் உருவத்தில் அனுமன் கண்டதாகக் கூறியது. இந்தக் கவிதை, இராமபிரானது உருவத்தை, அருவத்தில் அனுமன் கண்டதாகக் கூறுகின்றது.

**கண்ணினும் உளை நீ :**

‘பெருமானே, இங்கு இருக்கின்ற நீ, உன்னை விட்டுப் பிரிந்து விட்டாள் சீதை என்று எண்ணிக் கொண்டிருக்கின்றாய். ஆனால், அங்கு உள்ள பிராட்டியின் கண்களிலும்

நீ இருக்கின்றாய்: அதை நான் கண்டேன்' என்று கூறுகின்றான் அனுமன். காடு சூழ்ந்த கிட்கிந்தை மலையில் இருக்கும் இராமபிரான், கடல் சூழ்ந்த இலங்கை வெற்பில் (மலையில்) இருக்கும் சீதாப் பிராட்டியின் கண்ணில் இருப்பது என்பது எவ்வாறு?

அந்தப்பிராட்டி இலங்கை வெற்பில் இருந்தாலும், 'சுருதி நாயகன் வரும் வரும்' என்பது ஓர் துணிவால் கருதி, மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள், (சுருதி-வேதம்: மாதிரம்-திசை) ஆக இருக்கின்றாள். பிராட்டியின் கண்கள். எல்லாத்திசைகளையும் சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டேயிருக்கின்றன. எதற்கு! 'வேத நாயகனான தனது கணவன் இராமபிரான் வருவான் வருவான்' என்ற நம்பிக்கையினால் திசை நோக்கி நிற்கின்றாள். இது, சீதாபிராட்டியின் கண்களில் இராமபிரான் தங்கியிருப்பதைக் காட்டுகின்றது.

அன்றியும், 'கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே' என்ற பக்தி நிலைக்குப் பிராட்டி உயர்ந்து விட்டதால், கண்கள் இராமபிரானையே கண்டு கொண்டிருக்கும்.

மிதிலா நகரத்தில், இராமபிரான் தேரில் உலாவரும் போது. அப்பெருமானைக் கண்ட காரிகைகளில் ஒருத்தி பெரியள் என்று பேசப்படுகின்றாள், காரணம், இராமனை கண்ட கண்கள் வேறொன்றினைக் காணாதவாறு, அவனையே தனது கண்களில் அடைத்து வைத்துக் கொண்டாள்.

**'மண்கடந்து அமரர் வைகும் வான்கடந்தானை, தான்தன் கண்கடவாது காத்தகாரிகை பெரியளேகாண்'** (கம்: 1069)

---

மண்கடந்து (திருவிக்கிரமாவதாரத்தில்) பூமியை விட்டு: அமரர்-தேவர்: வான்கடந்தான்-விண்ணுலகத்தையும் அளந்தவனான இராமன்: கண்கடவாது கண்ணைவிட்டு நீங்காதபடி.

'கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக்கு அறிந்து.' (திருக்குறள் - 1127)

என்ற குறளிலும், அன்புடைக் கணவன்' தனது மனைவியின் கண்களைத் தங்கும் இடமாக்கிக் கொண்டிருப்பதைக் காணலாம்.

(காதலர் எப்பொழுதும் எம் கண்ணின் உள்ளார் ஆகலான், கண்ணினை அஞ்சனத்தால் எழுதுவதும் செய்யேம்: (காரணம்) அத்துணைக் காலமும் அவர் மறைதலை அறிந்து. 'யான் இடை ஈடின்றிக் காண்கின்றவரைப் பிரிந்தார் என்று கருதுமாறு என்னை?)' கண்ணில் உள்ளவர் பிரியாதவராகின்றார், என்பது கருத்து.

சீதாப்பிராட்டி இராமபிரானை விட்டுப் பிரியாதவள் என்பதற்கு, முதற்கண் காட்டவந்த அடையாளம் பிராட்டியின் முகக்கண்.

**தையல் கருத்தினும் உளை நீ :**

சீதாப் பிராட்டியின் எண்ணத்திலும் நீ தங்கியிருக்கின்றாய். கருத்தில் இருப்பது எதுவோ அதுதான் கண்ணிலும் இருக்கும். பிராட்டியின் மனம், எல்லா நேரமும் இராமபிரானையே எண்ணிக் கொண்டிருக்கின்றது.

இராமபிரான் சீதாப் பிராட்டியின் உள்ளத்தில் நீங்காது இருத்தலால்தான், உடல்பிரிவு ஏற்பட்டிருந்த நிலையிலும், சீதை, இராமபிரான் செய்த அரியசெயல்கள் ஒவ்வொன்றையும் நினைத்துப் பார்க்கின்றாள்.

'மெய்த்திருப் பதம்மேவு என்ற போதினும்.
இத்திருத் துறந்து ஏகு என்ற போதினும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள்' (கம்-5088)

---

மெய்-உண்மை: திரு-அரசு: பதம்-பதவி: மேவு-அடைவாய் ஏகு-செல்வாய்: உன்னுவாள்-நினைப்பாள்.

இவைபோன்ற எண்ணங்கள் தொடர்வதற்குக்காரணம் இராமபிரான், இமைப் பொழுதும் நீங்காது தன் நெஞ்சில் இருப்பதாக சீதாப்பிராட்டி உறுதியாக்கிக் கொண்டிருப் பதேயாகும்.

**வாயின் எண்ணினும் உளை நீ :**

'பிராட்டியின் திருவாயின் எல்லையிலும் நீ தான் இருக் கிறாய்' பிராட்டி எல்லா நேரமும் இராமனது திருப்பெயரை யே உச்சரித்துக் கொண்டிருக்கிறாள் இராம நாமோச்சரண த்தை பிராட்டி, செய்து கொண்டிருந்ததை அனுமன் கண்ட வன். அதனால் வாயின் எண்ணினும் உளை நீ' என்று துணிந்து சொன்னான் அனுமான்.

சீதாப் பிராட்டியின் கண்ணிலும் கருத்திலும், (நெஞ்சத்திலும்) வாயிலும் (சொல்லிலும்) இராமபிரான் நீங்காது நிலையாக இருந்தமையை அனுமன் உறுதிப்படுத் துகின்றான்.

**'பண்ணுளாய்! கவிதன்னுளாய் ! பத்தியின்**
**உள்ளாய்! பரம் ஈசனே! வந்துஎன்**
**கண்ணுளாய்! நெஞ்சுளாய்! சொல்லுளாய்!**
**ஒன்று சொல்லாயே! (7-1-6)**

என்ற நம்மாழ்வாரின் திருவாய் மொழிப்பாசுரமே, கம்ப நாட்டாழ்வார் வாயிலாக, இங்கு, 'கண்ணினும் உளை நீ: தையல் கருத்தினும் உளை நீ: வாயின் எண்ணினும் உளை நீ.' என்று திரு அவதாரம் செய்ததோ என்று எண்ணலாம் படித்தோன்றுகின்றது.

**புண்ணினும் உளை நீ :**

கண்ணினும் கருத்தினும், வாயின் எண்ணினும் இருக் கும் பெருமான், பிராட்டியின் புண்ணிலும் இருக்கின்றான். சீதாப்பிராட்டியின் மெய்யில் புண் எப்படி வந்தது?

காமன் எய்த அலர் அம்பு தொளைத்த ஆறாப்புண் :

மன்மதன் செலுத்திய மலராகிய அம்பு தைத்து ஊடுருவியதனால் உண்டான ஆறாத புண். பிரிந்தாரைச் சேர்த்துவிப்பது மன்மதன்வேலை (காமன்-மன்மதன்: அலர்-மலர்) உள்ளம் இராமனிடமிருந்து பிரியாது இருந்தாலும் உடல், பிரிவுக்கு உட்பட்டிருத்தலால், 'கொங்கை இணைக்குவை தன்னில் ஓவாது(இடைவிடாது)காமன் மலரம்பு கோத்தான் என்று சொல்லப்படுகின்றது.

நின்னைப் பிரிந்தமை பொருந்திற்று ஆமோ?

'இவ்வாறு மனம்,மொழி,மெய் ஆகியவைகளில்,பிராட்டி உன்னோடு கலந்திருப்பதாகவே இருப்பதால், உன்னைப் பிரிந்தாள் என்பது பொருந்திய வார்த்தை ஆகுமா?ஆகாது

'புண்ணினும் உளைநீ'என்ற தொடர்,இராமபிரானைத் தன் உடலால் தழுவிக்கொள்ளும் பிராட்டியின் பாவனையால், மெய்யிலும் இருக்கிறான் இராமபிரான் என்பதை உணர்த்துவதாகும்.

பிராட்டி இராவணனது இலங்கையிலிருந்தாலும், அவனை வெறுத்தும், இராமபிரானைப் பிரியாதும் இருக்கிறாள் என்பதை அனுமன் இராமபிரானிடம் தெளிவுபடுத்தினான். பிரியாத நிலையை மேலும் உறுதிப்படுத்துகின்றான் அடுத்த கவிதையில்.

# 12. தவம் செய்த தவமாம் தையல்

12 ‘வேலையுள் இலங்கை என்னும்
விரி நகர் ஒருசார், விண்தோய்,
காலையும் மாலைதானும்
இல்லது ஓர் கனகக் கற்பச்
சோலை அங்குஅதனில், உம்பி,
புல்லினால் தொடுத்த தூய
சாலையில் இருந்தாள்—ஐய!
தவம்செய்த தவமாம் தையல்’ (கம்-6037)

சீதாப்பிராட்டி, இப்போது தங்கியிருக்கும் இடத்தாலும் இராமபிரானோடு தொடர்பு கொண்டவளாகத்தான் இருக்கிறாள் என்பதை விளக்குகிறது இந்தக்கவிதை.

**தவம் :**

தவம் என்பது, உலக இன்பத்தில் சிறிதும் நாட்டம் இல்லாமல். ஐந்து புலன்களையும் அடக்கிக்கொண்டு, உண்டி சுருக்குதல் முதலிய விரதங்களை மேற்கொள்வதாகும். இத்தகைய தவத்தைச்செய்வது, பெறுதற்கரிய பெரும் பொருளைப் பெறுவதற்காகும்.

பிறரால் பெறுவதற்கு அரிய பொருளைப் பெற்றவர்கள் தவம் செய்தவர்கள் என்றும், சிறந்த பொருளைப்பெற வேண்டுமானால் தவம் செய்துதான் ஆகவேண்டும் என்றும் பெரியோர்கள் சொல்வார்கள்.

பெரியாழ்வார். கண்ணனது அழகிலும் பெருமையிலும் ஈடுபட்டு, 'உன்னைக் கண்டார்,

**என்ன நோன்பு நோற்றாள் கொலோ**
**இவனைப் பெற்ற வயிறுடையாள்**
**என்னும் வார்த்தை எய்துவித்த**
**இருடிகேசா!'** (2-2-6)

என்று,கண்ணனை மகனாகப்பெற்றதேவகி செய்ததவத்தை எண்ணி மகிழ்கின்றார்.

சீவக சிந்தாமணிக் காப்பியத்துள், கதாநாயகன் சீவ கனைக் கண்டவர்கள் தங்களுக்குள் சொல்லிக்கொள்வதை திருத்தக்க தேவரும் இவ்வாறுதான் குறிப்பிட்டுள்ளார்.

**'செம்மலைப் பயந்த நற்றாய்**
**செய்தவம் உடையள் என்பார் :**
**எம்மலைத் தவம் செய் தாள்கொல்**
**எய்வதும் யாமும் என்பார்'** (சிந்-465)

(சிறப்புமிக்கவனான இந்தச்சீவகனை மகனாகப்பெற்றவள், பெருந்தவம் செய்தவளாவாள்: செய்த தவம்உடையவளாக விசயை இருந்ததால் தான் இவன் மகனாகக் கிடைத்துள் ளான் என்று சொல்கின்றார்கள். இவனைக் கணவனாகப் பெற இருப்பவள், எந்த மலையிலிருந்து தவம் செய்து கொண்டிருக்கின்றாளோ, அந்த மலைக்குச் சென்று நாமும் தவம் செய்வோம் என்றும் சொல்கின்றனர் சீவகனைக் கண்டவர்கள்)

தவம்தான். பெறுவதற்கு அரிய பொருளைக்கொடுக் கிறது, என்பதை இதன்மூலம் உணரலாம்.

**தவம் செய்த தவமாம் தையால் :**

சாதாரணமாகப் பெறுவதற்கு இயலாத பொருளைப் பெற்றுக் கொடுக்கும் அந்தத் தவமே, தவம் செய்யத் தொடங்கியதாம். எதற்கு? பெருமை நிறைந்த ஒரு

பொருளைப் பெறுவதற்காக. சீதாப் பிராட்டியை தனக்கு உரியவளாக்கிக் கொள்ளவேண்டும் என்ற நோக்கத்தோடு, தவம் செய்தது. தவத்தின் குறிக்கோள் நிறைவேறி விட்டது. அதனால் 'தவம்' என்ற ஒன்று போற்றுதலுக்கு உரியதாகி விட்டது.

'தவம்' என்ற ஒன்று தவம் செய்ததன் பயனாக, அதற்குக் கிடைத்தது என்ன? தவமாகிய தையலைப் பெற்றுக்கொண்டது அந்தத் தவம். சீதாப் பிராட்டியைத் தவம் தனக்கு உரித்தாகப் பெற்றுக் கொண்டதால், தவம் பேறும் புகழும் பெற்றுக்கொண்டு விட்டது.

தேவகி செய்த நோன்பின்பயன், கண்ணன் மைந்தனாக வந்தது. அதனால் 'தேவகி பரமானந்தம்' என்று போற்றப்படுகின்றாள். அதுபோன்று, தவம், சீதாப் பிராட்டியை உரித்தாக்கிக் கொண்டதால் அது சிறப்புப் பெறுகிறது.

இந்தச் சீதை, மிதிலையில் கன்னிப் பெண்ணாக இருந்தபோது, இவளைப் பெறுவதற்கு, 'அழகு' என்ற ஒன்று தவம் செய்தது. அதன் குறிக்கோள் நிறைவேறி விட்டது.

இப்போது, இவளைப் பெறுவதற்கு, தவம் என்ற ஒன்று தவம் செய்தது; பெற்றுக்கொண்டு விட்டது.

வனவாசத்தில் தவக்கோலத்தோடு இருக்கும் இராமபிரானைக் காண்கின்றாள் சூர்ப்பணகை. அப்பெருமானது அழகிலும். தவக்கோலத்திலும் ஈடுபட்டுப் பேசுகின்றாள்.

'நவம் செயத் தகைய இந் நளின நாட்டத்தான்,
தவம் செய, தவம் செய்த தவம் என்'? என்பது,

சூர்ப்பணகையின் வியப்பு உள்ளம் உதிர்த்த சொற்கள்.

(புதுமை நிறைந்த (நவம்-புதுமை) இந்த அழகிய கண்களை உடையவன், தவம் செய்வதற்கு, அந்தத்தவம் என்ற ஒன்று எவ்வளவு தவம் செய்திருக்க வேண்டும்? தவம்,தவம் செய்திருந்ததால்தான், இந்த அழகன் தவவாழ்க்கையை மேற்கொண்டிருந்திருக்கிறான்.) இது சூர்ப்பணகையின் கருத்து.

இராமபிரான் தவவாழ்க்கையை, மேற்கொண்டதால், 'தவம்'பெருமை பெற்றது அங்கு. சீதை சிறை வாழ்க்கையை மேற்கொண்டதால்,தவம்பெருமை பெறுகிறது இலங்கையல்.

**தூய சாலையில் இருந்தாள் :**

தவம் செய்யும் இடம் எது? அரண்மனையா? பர்ணகசாலையில் தானே தவம் செய்யவேண்டும்! தவத்தின் தூய்மை அதன் இடத்தால் வருவது. பிராட்டியின் கற்புத் தவம் தூய்மையே உருக்கொண்ட பர்ணகசாலையில் இருப்பதால், தவம் தூய்மை பெறுகிறது. சாலைக்குத் தூய்மை, அது கட்டப்பட்டவனால் வந்தது.

**உம்பி புல்லினால் தொடுத்த தூயசாலை ;**

(உம்பி - உன் தம்பி) இலக்குவன், புல்லைக்கொண்டு அமைத்த தூய்மை நிறைந்த பர்ணக சாலை. 'மகனே! இவன் பின்செல்: தம்பி என்னும்படி அன்று: அடியாரினின் ஏவல் செய்தி' என்ற தன் தாயின் வார்த்தையைத் தலைமேற் கொண்டுவந்தவன் இலக்குவன். எந்தவிதமான பயனையும் எதிர்பார்க்காமல், பிறரது நல்வாழ்வுக்காகவே எவன் ஒருவன் சேவை செய்கின்றானோ அவன் தான் தூயவன் ஆவான். அந்தத் தூய்மை இலக்கணத்திற்கு, எடுத்துக்காட்டாகத் திகழ்பவன் இலக்குவன் ஒருவனே என்று சொல்லலாம். அந்தத் தூயவனால், அமைக்கப் பட்டதால், சாலை தூய்மை பெற்றது. சாலையின் தூய்மை தவத்தைத் தூய்மையாக்கியது. தவத்தின் தூய்மை, சீதையைத் தனக்கு உரித்தாக்கிக் கொண்டு விட்டது.

**சோலை அங்கு அதனில் :**

சாலை, இப்போது, சோலையில் இருக்கிறது. தூயவன் அமைத்தபர்ணக சாலை, இடம் பெயர்ந்து விட்டது. முன்பு, இந்தச் சாலையை அமைத்த தூயவன், உள்ளிருந்த கற்பினுக்கு அணியினைக் காவல் காத்துக் கொண்டிருந்தான். 'அணி' (ஆபரணம்) காவலுக்குரியது தானே! அணிக்கு ஆபத்துவரும் என்பதால்தான், தூயவன் வில்லை யூன்றிய கையோடு காவல் காத்து நின்றான். இந்தத் தூயவன், சாலைக்காவல் சேவையினின்றும் அப்புறப்படுத்தப் பட்டான். சாலையும் அப்புறப்படுத்தப் பட்டு விட்டது.

காடு சூழ்ந்த இடத்தில் அமைந்த சாலை, கடல் சூழ்ந்த இலங்கையில் இருக்கும் சோலைக்கு வரக்காரணம் என்ன?

**கற்பும் காவலும் :**

பர்ணக சாலையின் உள் இருந்தது கற்பு: வெளியில் நின்றது காவல். காவலுக்கு நின்ற இலக்குவன், தன் கடமை மறவாத தூயவன். உள்ளிருந்த சீதாப் பிராட்டி. கணவனுக்குப் புகழ் சேர்க்கும், நெறிபிறழாத கற்பரசி. அண்ணன் சொல்லைச் சிறிதும் தட்டாது தலைமேற் கொண்டு, காவல் பணிபுரிந்துவரும் இலக்குவனும் உள்ளத் தால் தூயவன். கணவனையே தெய்வமாகக் கொண்டு போற்றிவரும் சீதாப் பிராட்டியும் உள்ளத்தால் தூயவள்.

தூய்மையைத் தழுவிய இருவரும் சாலையின் உள்ளும் புறமுமாய் இருந்த சமயம், இராமபிரான் அங்கிருந்து வெளியேறிய சூழ்நிலைக்கு உரியதாக அமைவதாயிற்று. காவலில் நின்ற தூயவனுக்கும், கற்பு நெறியில் நின்ற தூய வளுக்கும் தலைவனாக இருப்பவன் இராமபிரான்தான். தலைவன் இல்லாத சூழ்நிலையில், தூய உள்ளத்தினராய இருவரது நெறிக்கும் எதிர்பாராத ஒரு சோதனை வந்தது.

இந்தச் சோதனை வருவதற்கு முன்பே, எதிரதாக் காக்கும் தெளிவுடை அறிவினனாக இருந்தவன் இலக்குவன். உள்ளத் தூயவனாகிய இலக்குவன், இந்தச் சமயத்தில் கூறிய வார்த்தை தெளிவான அறிவினின்றும் வந்தவையாக இருந்தும், அதை, சாலையினின்றும் வெளியேறும் இராமபிரான் தன் சிந்தனைக்குரியதாக எடுத்துக் கொள்ளவில்லை, தூயவனை வெளியேற்றிய சீதாப் பிராட்டியும் அந்தத்தெளிவுரையை ஏற்றுக் கொள்ளவில்லை.

'நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்று சொல்லிக் கொண்டு, உடன் வந்த சீதாப்பிராட்டி, தானே முன்நின்று இராமபிரானைப்பிரித்து வெளியேற்றினாள். தனக்கு எந்த ஆபத்தும் வாராமல் தன்னைக் காத்து நின்ற தூயவனான இலக்குவனை, செவிசுடும் வசவான வார்த்தைகளைக் கூறி அவனைச் சாலையினின்றும் விரட்டி வெளியேற்றியதும் இந்தப்பிராட்டிதான். வஞ்சகனான இராவணனது வருகைக்கு வழிவகுத்து வைத்ததும் இந்தப்பிராட்டிதான்.அரக்கன் வரவு அனைவரையும் அல்லலுக்கு உள்ளாக்கி விட்டது. இப்படி சீதாப்பிராட்டி செய்தது சரிதானா?

'நீ, என்னுடன் வந்தால், எல்லையற்ற இடர் தருவாய்' என்று, காட்டுக்குப் புறப்படும் பொழுது சீதாப்பிராட்டியிடம் இராமபிரான் சொன்னவார்த்தையை மெய்ப்பித்து விட்டாள் பிராட்டி.

இந்த எல்லையற்ற இடரை, (துன்பத்தை) வாராமல் தடுத்திருக்கலாம், இலக்குவன் கூறிய தெளிவான அறிவு பூர்வமான வார்த்தைகளைக் கேட்டிருந்தால். 'சீரியது அன்று' எனச்செப்பிய தம்பியை,

'ஐயன் வல்லன்: என் ஆருயிர் வல்லன்: நான்
உய்ய வந்தவன் வல்லன்' என்று, பிறகு இலக்குவன்

கூறியதை நினைத்து, 'நாம் அப்படிச் செயல்படாமல்' போனோமே' என வருந்துகின்றான் இராமபிரான். அதே போன்று. சீதாப்பிராட்டியும் சிறையில் இருந்த போது,

'என்னை, நாயகன், இளவலை, எண்ணலா வினையேன் சொன்னவார்த்தை கேட்டு அறிவு இலள் எனத்துறந்தானோ எனத்தன் செயலை நினைத்து வருந்துகின்றாள்.

'எற்று என்று இரங்குவ செய்யாதிருத்தல்' தானே, வினைத் தூய்மையாகும்! ('யான் செய்தது எத்தன்மைத்து' என்று பின், தானே இரங்கும் வினைகளைச் செய்யா திருத்தல்)

பின் இரங்குதலுக்கு உரிய செயலை, இராமபிரானைச் செய்ய வைத்ததும், அதனைத்தான் செய்ததும், சீதாப் பிராட்டிதானே! தூயவன் கூறிய தெளிவான அறிவில் உதித்துவந்த வார்த்தையைக் கேட்காதவாறு, தன் கணவனைத் தடுத்ததும். தானும் அதனைக் கேட்காதிருந்ததும், சீதாப் பிராட்டியின் பெருமைக்கு அழகா? இச்செயல் சீதாப் பிராட்டியின் புகழுக்கு இழுக்கல்லவா? என்று எண்ணத் தோன்றுகின்றது.

ஆனால், அந்தச் சீதாப்பிராட்டியோ, 'கனிந்து உயர் கற்பு எனும் கடவுள்' என்றும். 'கற்பினுக்கு அரசு' என்றும், 'பெண்மைக்காப்பு'என்றும், 'பொறற்பினுக்கு அழகு' என்றும், 'புகழின் வாழ்க்கை' என்றும், 'தற்பிரிந்து அருள்புரிதருமம்' என்றும், கம்ப நாட்டாழ்வாரால், பெரிதும் போற்றிப் பேசப் படுகின்றாள். அதனால், கவிச்சக்கரவர்த்தியின், ஆழ்ந்த கருத்தை அடிப்படையாக்கிக் கொண்டுதான்,சீதாப் பிராட்டியின் செயலைக்காணவேண்டும்.

**இராமபிரானும் சீதாப்பிராட்டியும்:**

'இப்பணிதலை மேற்கொண்டேன், இன்றே விடையும் கொண்டேன்' என்று சொல்லிவிட்டு, தந்தையின் ஆணையின்படி, வனவாசத்தை மேற்கொண்ட இராமபிரானும், 'ஊழி அருக்கனும் (சூரியன்) எரியும் என்பது யாண்டையது? ஈண்டு, நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்று சொல்லி, தன் கணவனைப் பின்தொடர்ந்த சீதாப் பிராட்டியும், ஆரணிய வாழ்வில் முனிவர்களது ஆசிரமத்துக்குச் சென்றனர்.

**முனிவர்கள் அபயம் :**

தமது ஆசிரமத்துக்கு வந்த இராமபிரானையும் சீதாப் பிராட்டியையும் முனிவர்கள் வரவேற்று உபசரித்தனர் பிறகு, தமக்கு ஏற்பட்டுள்ள குறைகளைச்சொல்லி, முறை யிட்டுக் கொண்டனர் அந்தத்துறவிகள்.

'இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்,
அரக்கர் என்று உளர்சிலர், அறத்தின் நீங்கினார்
நெருக்கவும், யாம்படர் நெறிஅலா நெறி
துரக்கவும், அருந்தவத் துறையுள் நீங்கினேம்' (3643)

'மாதவத்து ஒழுகலெம்: மறைகள் யாவையும்
ஓதலெம்; ஓதுவார்க்கு உதவல் ஆற்றலெம்:
மூதுஎரி வளர்க்கிலெப்: முறையின் நீங்கினோம்:
ஆதலின், அந்தண ரேயும் ஆகிலேம்' (3644)

........................................................................................

........................................................................................

எந்தை! மற்றுயார் உளர் இடுக்கண் நீக்குவார்?
வந்தனை, யாம் செய்த தவத்தின் மாட்சியால் (3645)

என்று தங்களுக்கு நேர்ந்துள்ள குறைகளை எடுத்துச் சொல்லி, இறுதியாக,

'அருளுடை வீர! நின் அபயம் யாம்' என்று இராமபிரானை அடைக்கலம் வேண்டினர் துறவிகள்.

இதனைக் கேட்ட இராமபிரான், துறவிகளது குறை களைப் போக்குவதாக உறுதி கூறி அவர்களுக்கு அடைக் கலம் தரும் முறையில்,

'ஆர்அறத்தினொடு அன்றி நின்றார், அவர்
வேர்ஆறுப்பெண்: வெருவன்மின் நீர்'என்று சொன்னான்

நெறி அலாநெறி - தீயொழுக்கம்: துரக்கவும் - செலுத்தவும்: மறை-வேதம்: மூதுஎரி-யாகத்தீ: அபயம்-அடைக்கலம்: வேர் அறுத்தல்-அடியோடு அழித்தல்: வெருவன்மின்-அஞ்சாதீர்.

துறவிகளைத் துன்புறுத்திக் கொண்டிருக்கும், அரக்கர்களை அடியோடு அழிப்பேன்' என்று தன் கணவன் சொன்ன சொல்லைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்கினாள், பக்கத்தில் நின்று கொண்டிருந்த சீதாப்பிராட்டி. அரக்கர்கள் இப்போது இராமபிரானுக்கு நேரடியான பகைவர்கள் அல்லர். பகைமை அல்லாதவர் மேல், தன்கைப் படையைச் செலுத்துவது நேர்மையா? உலகுக்கு நேர்மை புகட்டவந்த, இராமபிரான், அரக்கர்களை அழிப்பதாகச் சொன்ன உறுதி மொழியை தனக்கு உகந்ததாகக் கொள்ளவில்லை பிராட்டி. அதனால், தன் கணவனிடம் தனித்துப்பேசி இந்த உண்மையைச் சொல்லுகின்றாள் பிராட்டி.

'சுவாமி! காமத்தால் (ஆசையால்) உண்டாவது மூவகைக் குற்றம்: பொய்மை, பிறன் மனையாளை நாடுதல், பகையில்லாதவர் மீது கோபம், இம் மூன்றையும் தவிர்ப்பவனே தர்மத்தை உணரமுடியும். முதலிரண்டும் ஒருபொழுதும் உங்களுக்கு நேராது என்று நான் அறிவேன். ஆனால், பாமர மனிதனைப்போல் காரணமின்றிப் பிறரைக் கொல்ல முற்பட்டிருக்கிறீர்களே, இது எனக்குக் கவலை யாயிருக்கிறது. எனக்கு இச்செயல் சரியெனத் தோன்ற வில்லை.' ராமனுக்கு நீதிசொல்ல சீதையால்தானே முடியும்!'

'தவ வேடத்தில் காட்டுக்கு வந்ததும், இங்கு ஆயுதம் தாங்கிப் போர் தொடுப்பதும் ஒன்றுக்கு ஒன்று முரண் பாடானது' என்று உணர்ந்து பேசுகிறாள் சீதை. வந்த இடத்தில் முனிவர்களைப் போலவே காலத்தைக் கழித்து விட்டுப் போகலாம் என்கிறாள்.'

'சீதையின்பேச்சில் பெண்களுக்கே உரித்தான ஆறாவது அறிவு ஒலிக்கிறது. அதை நிராகரிக்கும் ராமன் ஆண்களுக் குரித்தான நுண்ணறிவைக் காட்டுகின்றான்.'

'பாவம்! இந்த முனிவர்கள் கஷ்டப்படுகிறார்கள். என்னைச்சரணம் அடைந்து விட்டார்கள். நான் அவர்களை கைவிடலாமா? வாக்களித்து விட்டேன். இனி மீளமுடியாது ஆனால் நீ அன்பும் ஆதரவும் கொண்டு கூறியதை மெச்சுகின்றேன்; என்று சொல்லி அவளைச் சமாதானம் செய்கிறான் ராமன் அவளை 'தர்மசாரிணி' என்று புகழ்கிறான்' 'அன்புடையவர்தானே அறிவு கூறுவர்?' என்கிறான். (நஹ்யனிஷ்டோ அனுசிஷ்யதி). எனினும், அவள் பேச்சை மெச்சுகிறானே ஒழிய அதன் கருத்தை உணரவில்லை.' ஏன்?

'முனிவர்கள், சூழ்ந்துகொண்டு 'நீதான் கதி. நாட்டிலும் காட்டிலும் நீயே அரசன்.' என்று சொன்னார்கள். இவையே, க்ஷத்ரிய வீரனான ராமன் மனத்தில் பதிந்து நிற்கின்றன. சாந்தமும் உண்மையும் அடங்கிய சீதையின் பேச்சு ஏறுமா? இயற்கை எப்படியும் வலுத்துவிடும் என்பதைக் குறிக்கிறார் கவி.' ★ என்பது வான்மீகி இராமாயணத்தை ஒட்டி ஆராய்ந்த, திரு. கே. எஸ். ஸ்ரீநிவாசன் அவர்களது ஆய்வுரை.

'அரக்கர்களை அடியோடு அழிப்பேன்' என்று கணவன் வாக்களித்தபிறகு, அதனை நிறைவேற்றுவதற்கு உதவுவதே கற்பிற் சிறந்த ஒரு மனைவியின் கடமையாகும். அந்த அரக்கர்கள் நேரான பகைவர்களாக இல்லாதபோது, அவர்களை அழிப்பது நேர்மையல்ல என்று உணர்ந்தவள் பிராட்டி. பெருமானுக்கு இதனை உணர்த்துபவளும் ஆவாள்.

**சீதாப் பிராட்டியின் துணிவு :**

தன்கணவன் துறவிகளுக்குக் கொடுத்த உறுதி மொழியைக் காப்பதற்கு உதவவேண்டும் என்று துணிவு பூண்டாள் பிராட்டி. இதற்கு உதவுவது என்றால்,

---

★ காவ்யராமாயணம் பக் - 98, 99.

---

அரக்கர்களை நேருக்கு நேரான பகைவர்களாக ஆக்குதல், வேண்டும். அரக்கர்கள், தன் கணவனுக்கு நேரானபகைவர்களாக வந்தால்தான், முனிவர்களுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற முடியும்.

அரக்கர்களைத் தம் குடும்பத்துக்கு நேரிடையான பகைவர்களாக ஆக்கிவைத்து விடுவது என்று திட்டமிட்டுக் கொண்டு விட்டாள் பிராட்டி. கணவனது சொல்லையும் காப்பாற்றவேண்டும், நேர்மையையும் நிலை நாட்ட வேண்டும், அதற்காக, தான் எவ்வளவு துன்பங்களையும் சகித்துக் கொள்வதென்றும், தன்னைச் சேர்ந்த இராம பிரானையும், தூயவனான இலக்குவனையும் தனது சொல்லுக்குக் கட்டுப்படச் செய்வதென்றும், இதனால் எவ்வளவு பழிவந்தாலும் அதனைத் தாங்கிக் கொள்வதென்றும் தீர்மானம் செய்து கொண்டுவிட்டாள் பிராட்டி.

இந்தத் தீர்மானத்தைச் செயல் படுத்துவதற்குரிய சந்தர்ப்பம், தூயவன் தொடுத்த சாலையில் கிட்டியது. அதனால், தன்னைச் சார்ந்தவர்க்கும், தனக்கும் எல்லையற்ற இடர் வருவதாயிருந்தாலும்,எதிர்காலப் பெரு நன்மையைக் கருதி, இராமபிரானை, மானைப்பிடிக்க வெளியில் அனுப்பினாள்: தூயவனான, இலக்குவனது மனம் புண்படும்படிக் கொடிய சொல்லைச் சொல்லி அவனை வெளியேற்றினாள்: இராவணனது வருகைக்கு வழிவகுத்து வைத்தாள்.

பிராட்டியின் இந்தத் துணிவான செயலால், அரக்கர் குலத்தினர்கள், இராமபிரானுக்கு நேரான பகைவர்கள் ஆனார்கள். இராமபிரானும், முனிவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை, நேர்மையான முறையில் நிறைவேற்ற வழி கிடைத்தது.

தன் கணவனது வாக்குறுதியை, நேர்மையான முறையில் நிறைவேற்றுவதற்காகவே. சீதாப்பிராட்டி இந்த அருஞ் செயலை மேற்கொண்டதால். 'அறத்திறன் அழியச் செய்யாள் புவியிடை அண்ணல்' என்று இராமபிரான் புகழப்படுகின்றான்: பிராட்டி, கற்பின் வாழ்வு' என்றும் 'புகழின் வாழ்வு' என்றும் போற்றப் படுகின்றாள்.

தூயவன் தொடுத்த சாலை, இலங்கைச் சோலைக்கு வருவதற்கு, சீதாப்பிராட்டி, தானே பொறுப்பேற்றுக் கொண்டுவிட்டாள் என்பதை இதன் மூலம் உணரலாம்.

கற்பின் கனலியை, அவள் இருந்த சாலையோடு இரவணன் தனது தேரில் தூக்கிக்கொண்டு புறப்பட்டான்: வழியில் சடாயுவால் தேர் அழிக்கப் பெற்ற பிறகு, சாலையைத் தன்கையில் ஏந்திக்கொண்டு சென்றான். வெள்ளிமலையை அள்ளி எடுத்த ஆற்றல் பெற்றவன் அல்லவா இராவணன்! சாலையைக்கையில் ஏந்துவது அவனுக்கு அரிய காரியம் அல்ல! எடுத்துச் சென்றவன் எங்கு வைத்தான் சாலையை?

விண்தோய் காலை மாலை தானும் இல்லது ஓர் கனகக் கற்பச் சோலை;

விண்ணுலகைத் தொடும் அளவுக்கு உயர்ந்து வளர்ந்துள்ள, காலை நேரமும், மாலை நேரமும் காணமுடியாதபடி செழித்து அடர்ந்துள்ள, பொன்மயமான அழகிய கற்பக மரங்கள் நிறைந்துள்ள சோலை.

இந்தச்சோலை ஆகாயத்தை அளாவிக்கொண்டுள்ளது சூரிய ஒளி, உள்ளே நுழைய முடியாத அவ்வளவு அடர்த்தியானது: அழகான மரங்களால் நிறையப் பெற்றது. இந்தச் சோலையில் யார் நுழைந்தாலும், அவரது சோகத்தைப் போக்கக் கூடியது அதனால் அசோகவனம் எனப் பேசப் படுவது இந்தச்சோலை. இந்த.சோலை உள்ள இடம் எது?

**வேலையுள் இலங்கை என்னும் விரிநகர் ஒருசார் :**

கடலின் (வேலை-கடல்) நடுவில் இலங்கை என்று சொல்லப்படுகின்ற விரிந்து பரந்துள்ள நகரத்தின் ஒரு பக்கம். கடல் சூழ்ந்த நகர் இலங்கை. இந்த நகரத்தின் ஒரு பக்கத்தில் உள்ளது (அசோகவனம்) கற்பச் சோலை. இந்தச் சோலையில் வைக்கப்பட்டுள்ளது அந்தச்சாலை. சாலையில் இருக்கிறாள் தவம் செய்த தவமாம் தையல்.

இத்தகைய அருமைப்பாடுடைய இடங்களைக் கடந்து சென்றால்தான், பிராட்டியைக் காண முடியும். அனுமன் ஒருவனே, இந்த அரிய வழிகளைக் கடந்து சென்று பிராட்டியைக் காணும் ஆற்றல் பெற்றவன். தனது, அரிய செயலைப் பற்றிக் கூறவில்லை அனுமன்.

ஆனாலும், ஒருமுறைப் படுத்துவதற்குத்தான் இத்தனை விளக்கத்தையும் சுருக்கத்தையும் மேற்கொண்டான் அனுமன். தெய்வத்தைக் கோயிலில் வழிபடச் செல்லும் பக்தன், முதலில் கோபுரவாசலைக் கடக்க வேண்டும். பிறகு மகா மண்டபத்துள் புகுந்து அதனையும் கடந்து செல்ல வேண்டும். அதன் பிறகுதான் கருவறையுள் (கர்ப்பக்கிரகம்) வீற்றிருக்கும் தெய்வத்திருவுருவத்தைக் கண்டு வழிபட முடியும். அது போல, தனது பெருந் தெய்வமாகிய தையலைக்காண்பதற்கு, வேலையுள் இலங்கை என்னும் விரிநகர் என்ற பேரெல்லையைக் கடந்து பிறகு கனகக் கற்பச்சோலை என்ற சிற்றெல்லைக் குள் புகுந்து பிறகு அதனுள் அடங்கிய சாலையில் தையலைக் கண்டேன் என்று அனுமன் கூறுகின்றான்.

இந்தக் கவிதை ஒரு திருக்கோயிலாகக் காட்சி யளிக்கிறது. இக்கவிதைக் கோயிலில் வீற்றிருக்கும் தெய்வம் சீதாப்பிராட்டி. தெய்வத்தை வணங்கச் செல்லும் பக்தன் அனுமன். இலங்கைநகர், கற்பச்சோலை, புல்லினால் தொடுத்தசாலை, பிராட்டி, இவைகள்,

கோபுரவாசல், மகாமண்டபம், கருவறை, தெய்வத்திருவுருவம் ஆகியவற்றை நினைவூட்டுவனவாய் அமைந்துள்ளன. அதனால் இக் கவிதை கற்பார் நினைவில் என்றும் தங்கிக் கொள்ளும் சிறப்புடையதாக இருக்கிறது என்று சொல்லலாம்.

சீதையை, தூயவன் புல்லினால் தொடுத்த தூய சாலையோடு, ஏன் கொண்டு சென்றான். இராவணன்? எப்படிக் கொண்டு சென்றான்? என்ற கேள்வி, இராமன் திருவுள்ளத்தில் எழும். அக்கேள்விக்குறி, பெருமான் திருமுகத்தில் தோன்றும் முன்னே, அதற்கு விடை கூறுகின்றான் அனுமன். அதனைத் தாங்கி வருகின்றது அடுத்தகவி.

# 13. வான் உயர் கற்பினாள்

13. மண்ணொடும் கொண்டு போனான்
வான்உயர் கற்பி னாள்தன்
புண்ணிய மேனி தீண்டுவான்
அஞ்சுவான், உலகம் பூத்த
கண்அகன் கமலத்து அண்ணல்
''கருத்திலள்'' – தொடுதல் கண்ணின்,
எண்ணருங் கூறாய் மாய்தி''
என்றதுஓர் மொழிஉண்டு என்பார்'.

(கம். 6038)

இராவணனது பழைய சாப வரலாற்றை நினைவூட்டுதல் மூலம், அவன் சாலையோடு சீதையை எடுத்துச் சென்றதன் காரணத்தைக் கூறுகின்றது இந்தக் கவிதை.

**சாபம் :**

பாபம் செய்பவர்கள் யாராக இருந்தாலும், அவருக்குச் சாபம் வந்து சேரும். தனது இன்பத்துக்காக, பிறர் துன்பப்படும்படியான செயல்களைச் செய்பவன் எவனோ, அவன் பாபியாகின்றான். பாபம் செய்பவனுக்குச் சாபம் வருவது இயற்கை நியதி, பாபம் செய்பவனைத் திருத்துவதற்குத் தான் சாபம் கொடுக்கப்படுகிறது. பிறரது துன்பத்திலேயே, தனது இன்பத்தைக் காணும் எண்ணும் இருக்கும் வரையில், அந்த மனிதனைச் சாபம் விடாது தொடர்ந்த வண்ணமாகத் தான் இருக்கும்.

**இராவணன் பாபமும் சாபமும்:**

'புஞ்சிகஸ்தலை' என்ற தேவ மாது, படைப்புக் கடவுளாகிய பிரம்ம தேவனை வணங்குவதற்காக ஆகாய வழியில் சென்று கொண்டிருந்தாள். அவ்வழியில் சென்று கொண்டிருந்த இராவணன், அவளைக் கண்டான்: அவளது அழகில் தன் மனத்தைப்பறி கொடுத்தான்: மனம் விரும்பிய வண்ணம், அந்தத் தேவமாதை அனுபவிக்க தீர்மானித்தான். கடவுள் வழிபாட்டுக்காகச் சென்ற தேவமாதைக் கற்பழித்து தன்புலன் இன்பத்தை நிறைவு செய்து கொண்டான் இராவணன்.

இறைவழிபாட்டுக்குப் புதுமலராகச் சென்று கொண்டிருந்தபுஞ்சிகஸ்தலை, இராவணனால் கசக்கப்பட்ட மலராகக் கற்பழிந்த நிலையில் சென்று நின்றாள் பிரம்ம தேவனுக்கு முன்னால். தன்முன் துன்பத்தோடு வந்து நின்ற தேவமாதுக்கு நேர்ந்த நிலையை உணர்ந்தான் பிரம்ம தேவன். இந்தத் தேவமாதின் மனம் துன்புற்று உழலுமாறு அவளைக் கொடுமைப்படுத்திய இராவணன், அயன்குலம் முதற்கு ஒருவன் என நின்றாய்' என்று பேசப்படுபவன். (அயன்-பிரம்மன்) பிரம்ம தேவனை முதலாகக் கொண்ட குலத்தில் பிறந்தவன் இராவணன். ஆதலால், பிரம்மன் தன்குலத்தில் பிறந்த இராவணன் செய்த பாபத்திற்குத் தண்டனையாக அவ்னைத்திருத்துவதற்காக அவனுக்குச் சாபம் இட்டான்.

'இராவணா! இனி, நீ அயல் மாதரை, அவரது விருப்பத்திற்கு மாறாக, வலிதிற் சென்று கற்பழிப்பு செய்தால் உன் தலைகள் சுக்குச்சுக்காக நூறு பிளவாகப் பிளந்துபடும் என்பது பிரம்மன் கொடுத்த சாபம்.

**உலகம் பூத்த கண்ணகன் கமலத்து அண்ணல்:**

இடம் அகன்ற திருமாலினது உந்தித் தாமரையில் தோன்றிய பிரம்மன் (கமலம் - தாமரை மலர்).

'தேவும் எப்பொ ருளும்ப டைக்க,
பூவில் நான்முக னைப்ப டைத்த
தேவன் எம்பெருமான்' (2.2.4)

என்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரத்தை நினைவு படுத்துவது, இந்தக் கவிதைத் தொடர்.

**சாப வரலாறு வெளிவந்த வழி :**

சீதாப் பிராட்டியை, சிறையில் கண்ட அனுமன், தானே பிராட்டியை, இ ரா ம பி ரா னி ட ம் கொண்டு சேர்த்து விடுவதாகவும், அதற்கு அருள் செய்யுமாறும் பிராட்டியிடம் வேண்டினான். அதனை விரும்பாத பிராட்டி, அனுமனிடம் தன் கருத்தை வெளியிடும் போது இதனைக் கூறினாள்.

'தீண்டினான் எனின், இத்தனை சேண்பகல்
ஈண்டுமோ உயிர்மெய்யின்? 'இமைப்பின்முன்
மாண்டுதீர்வென்' என்றே, நிலம், வன்கையால்
கீண்டு கொண்டு எழுந்து ஏகினன், கீழ்மையான்' (5564)

"மேவு சிந்தைஇல் மாதரை மெய்தொடின்,
தேவு வன்தலை சிந்துக நீ என
பூவில் வந்த புராதனனே புகல்
சாவம் உண்டு எனது ஆருயிர் தந்ததால்! (5565)

அன்ன சாவம் உளதுஎன, ஆண்மையான்,
மின்னும் மௌலியன், மெய்ம்மையன் வீடணன்
கன்னி என்வயின் வைத்த கருணையாள்
சொன்னது உண்டு ? துணுக்கம் அகற்றுவான் (5566)

என்பது, பிராட்டி அனுமனிடம் கூறிய சாப வரலாறு.

---

சேண்பகல் - நீண்டகாலம் மாண்டுதீர்வென் - இறந்து விடுவேன்: கீண்டு - பெயர்த்து: கீழ்மையான் - அற்பகுண முடைய இராவணன்: மேவு - விரும்புகின்ற புராதனன் - பழமையனான பிரம்மன்: வீடணன் கன்னி - வீடணன்மகள் திரிசடை: துணுக்கம் - அச்சம்: அகற்றுவான் - போக்குவதற்காக.

வீடணன் மகளாகிய திரிசடை, இந்த ஒரு சடையளாகிய பிராட்டியிடம் கூறியிருந்த சாப வரலாறு அனுமனுக்குத் தெரியவந்த வரலாறு இதுவாகும். இந்த சாப வரலாற்றை அனுமன் தெரிந்து கொண்டதால்,

'மண்ணொடுங் கொண்டு போனான்' என்று கூறினான். இதன் காரணத்தை மேலும் விளக்குகின்றான்.

**வான் உயர் கற்பினாள் தன் புண்ணிய மேனி தீண்ட அஞ்சுவான் :**

மிகச் சிறந்த கற்பு நிலையை உடையவளான சீதாப் பிராட்டியினது தூய்மையான திருமேனியைத் தொடுவதற்குப் பயந்தவனாய் மண்ணொடும் கொண்டு போனான்.

**சீதாப் பிராட்டியின் கற்பு,**

வரிசிலை ஒருவன் (இராமன்) அல்லால் மைந்தர் என் மருங்கு வந்தார். எரி (நெருப்பு)யிடை வீழ்ந்த விட்டில் அல்லரோ ? என்று எச்சரிக்கை விடும் அளவுக்குச் சிறப்புப் பெற்றது. அதனால், பிராட்டியின் தூய்மை நிறைந்த திருமேனியைத் தொட்டால், 'தலை வெடித்துவிடுமே உயிர் போய்விடுமே' என்று பயந்தான் இராவணன். ஆகவே, சாலையை மண்ணோடு பெயர்த்துக் கொண்டான் என்று காரணம் கூறி விளக்கினான் அனுமான்.

'இராவணன், பிராட்டியைத் தீண்டியிருக்க முடியாது.' என்பதை அனுமன் நன்கு உணர்ந்து கொண்டான். தான் உணர்ந்து கொண்டதை, மேலும் தெளிவுபடுத்துகின்றான் அனுமன், அடுத்த கவிதையில்.

# 14. கற்பின் சிறப்பு

14. தீண்டிலன் என்னும் வாய்மை
        திசைமுகன் செய்த முட்டை
கீண்டிலது ; அனந்தன் உச்சி
        கிழிந்திலது ; எழுந்து வேலை
மீண்டில ; சுடர்கள் யாவும்
        விழுந்தில ; வேதம் செய்கை
மாண்டில'து :- என்னும் தன்மை
        வாய்மையால் உணர்தி மன்னோ !

(கம் 6039)

'கற்பின் நின்றன காலமாரியே' என்று சொல்லப்படுவதால், கற்புடையவளது ஆணைக்கு, இயற்கை கட்டுப்பட்டு நிற்கும். கற்புடைமைக்கு ஏதாவது இழுக்கு (குறை) ஏற்படுமானால், இயற்கையின் இயல்புமாறுபட்டுவிடும். அவைகள் மாறுபடாததால், பிராட்டியின் கற்புக்கு எந்த விதமான குறையும் நேரவில்லை என்பதை உணரலாம் என்று அனுமன் கூறுகின்றான்.

இந்த மண்ணுலகம், இதனைத்தாங்கிக் கொண்டிருக்கும் ஆதிசேடனது தலை, நில உலகைச் சுற்றிச்சூழ்ந்த நீர் நிறைந்த கடல், உலகத்துக்கு ஒளி தந்து கொண்டிருக்கும் சூரிய சந்திரர்கள், உலக மக்களை நல்வழிப்படுத்தும் அறவுரைகளைக் கூறும் வேதம், ஆகிய இயற்கைக் கூறுகள் எல்லாம் தமது இயல்பிலிருந்து மாறுபடவில்லை. இது எதற்கு அடையாளம் ?

**தீண்டிலன் என்னும் வாய்மை :**

இலங்கை மன்னன், இராமபிரானுடைய திருத்தேவியைத் தனது கையால் தொடவில்லை என்ற உண்மை நிலை.

'இந்த உண்மையை நான் சொல்லித் தெரிந்து கொள்வதை விட, இயற்கைச் செயல்களின் மூலமும் உணரலாம் என்பது அனுமன் கூறிய தன் உட்பொருளாகும்.

**திசை முகன் செய்த மூட்டை கீண்டிலது :**

நான்கு திசைகளிலும் நடக்கும் காரியங்களைப் பார்த்துக் கொள்வதற்கு ஏற்றவகையில் நான்கு முகங்களைப் பெற்ற பிரம்மன் படைத்த இந்த அண்ட கோளம் பிளந்ததில்லை. இந்த உலகம், பிரம்மனால் படைக்கப்பட்டது.

பிரம்மனால் படைக்கப்பட்ட இந்த உலகத்தில், அறத்திற்கு மாறான செயல் நடந்தால் இது பிளவு பட்டு விடும் பூகம்பம் ஏற்ப்பட்டு விடும். என்பது அறவோர் நம்பிக்கை.

**அனந்தன் உச்சி கிழிந்திலது :**

இந்த உலகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற ஆதி சேடன் என்ற பாம்பினது தலை, வெடித்ததில்லை. (அனந்தன் - ஆதிசேடன் : உச்சி - தலை.)

**வேலை எழுந்து மீண்டில ;**

கடல்கள் பொங்கி மேல் எழுந்து வரவில்லை. கடல் நீர், கரை நோக்கிப் பொங்கி எழுந்தால் உலகத்தை அழித்து விடும். அது நிகழவில்லை.

**சுடர்கள் யாவும் விழுந்தில:**

உலகத்துக்கு ஒளி தந்து கொண்டிருப்பவைகள் சூரியனும் சந்திரனும். அந்த இரண்டும் நிற்கும் நிலையினின்றும் தவறி கீழே விழவில்லை.

**வேதம் செய்கை மாண்டிலது :**

வேதமும், அவ்வேத விதிப்படி செய்யும் நற்காரியமும் அழிந்தது இல்லை.

என்னும் தன்மை வாய்மையான் உணர்த்தி! என்று சொல்லப்படுகின்ற இத்தன்மைகள் மெய்யாகயிருத்தலை நோக்கி அதனால் தெரிந்துகொள்ளலாம்.

சீதாப்பிராட்டியின் கற்பின் சிறப்பைத் தெளிவாக இராமபிரானுக்கு உணர்த்துவதாக அமைந்தது இக்கவிதை.

இயற்கைப் பொருள்கள் தம் இயல்பு குறையாமல் இயங்கிக் கொண்டிருக்கும் நிலைக்குத்தன் கற்பைக் காத்துக் கொண்ட சீதையால், யாருக்குப் பெருமை கிடைத்தது என்ற கேள்வி எழும். அக்கேள்விக்கு விடையாக அடுத்த கவிதை வருகின்றது.



# 15. சோகத்தாளாய நங்கை

15. சோகத்தாள் ஆய நங்கை
கற்பினால், தொழுதற்கு ஒத்த
மாகத்தார் தேவி மாரும்
வான்சிறப்பு உற்றார்! மற்றைப்
பாகத்தாள், இப்போது, ஈசன்
மகுடத்தாள்! பதுமத் தாளும்,
ஆகத்தாள் அல்லள்! மாயன்
ஆயிரம் மௌலி மேலாள்.
(கம் – 6040)

'தக்கவன் ஒருவன் வாழத் தன் குலமெல்லாம் வாழும் என்ற உலகப் பழமொழியின் உண்மையை. சீதாப்பிராட்டியின் செயல் மூலம் விளக்கிக் காட்டுகிறது இக்கவிதை.

'ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது' என்றார் உலகாசிரியர். (பிள்ளை லோகாசாரியார்) சிறையிருந்தவள் ஏற்றத்தால், மாதர் குலத்துக்கு ஏற்றம் சொல்லுகிறது இந்தக் கவிதை.

**சோகத்தாள் ஆய நங்கை :**

அசோக வனத்தில், சோகமே ஒரு உருவம் கொண்டாற் போன்று இருக்கின்ற சீதாப்பிராட்டி, தன் கணவனாகிய', இராமபிரானுக்கு, தான் பக்கத்தில் இருந்து கொண்டு சேவை செய்ய முடியவில்லையே என்றுதான் வருந்தினாள்.

'அருந்தும் மெல் அடகு ஆர் இட அருந்தும்? என்று அழுங்கும்:
'விருந்து கண்ட போது என் உறுமோ?' என்று விம்மும்.

(காட்டில் உண்ணப்படுகின்ற மென்மையான இலையுணவு முதலியவற்றை யார் எடுத்துக் கொடுக்க இராமபிரான் உண்பார்' என்று நினைத்து வருந்துவாள்: 'விருந்தினரைக் கண்டபோது, வந்த விருந்தினரை எப்படி உபசரிப்பது, உபசரிப்பவர் இல்லையே என்று எவ்வளவு துன்பம் படுவாரோ? என்று எண்ணிப்பார்த்து அழுவாள்.)

தன்னை மனைவியாக ஏற்றுக்கொண்ட கணவனை, தக்கபடி உணவு முதலியவற்றைக் கொடுத்துப் பேணுதலும், விருந்தினரை உபசரித்தலுமாகிய இல்லறக் கடமையைச் செய்ய முடியவில்லையே என்பதுதான், பிராட்டியின் சோகத்துக்குக் காரணம்.

**கற்பினால் :**

கற்பினால்' என்ற சொல், சோகத்தின் காரணத்தை மேலும் தெளிவுபடுத்துகிறது. இல்லற வாழ்வை நடத்தும் ஒரு தலைவனுக்கு (கணவனுக்கு) வாழ்க்கைத் துணையாக வருபவளின் கற்புத்திறம் எப்படி அமைய வேண்டும் என்பதைப்பற்றி வள்ளுவம் அழகாக வகுத்துக் கூறுகின்றது.

**'தற்காத்து, தற்கொண்டான் பேணி, தகைசான்ற**
**சொற்காத்து, சோர்விலாள் பெண்.' (56)**

என்ற திருக்குறள், இல்லற வாழ்க்கைப் பெண் கற்பினால் சிறப்புறுவதற்கு, மூன்று செயல்களைக் கூறுகின்றது.

கற்பு நெறியினின்றும் வழுவாமல் தன்னைப் பாது காத்துக் கொள்தல்: தன்னை வாழ்க்கைத் துணையாக ஏற்றுக்கொண்ட இல்லத் தலைவனுக்கு எந்தவிதமான குறையும் வாராமல். உண்டி முதலியவற்றைக் கொடுத்து

அவன் நலம் பேணுதல்: இருவரிடமும் அமைந்த நன்மை நிறைந்த புகழ், நீங்காமல் அவற்றைப் பாதுகாத்தல். இந்த மூன்றையும் வாழ்க்கையில் தவறாமல் கடைபிடிக்கும் பெண்தான் கற்பில் சிறந்தவளாவாள்.

இந்த மூன்றில், காத்தல் இரண்டு: பேணுதல் ஒன்று. காத்தல் முன்னும் பின்னும் அமைவன. பேணுதல் நடுவில் நிற்பது. நடுவில் கூறப்பெற்ற கணவன் நலத்தைப் பேணுதல் செய்தால்தான், முதலிலும் முடிவிலும் அமைந்த காத்தல் தொழில் சிறக்கும். கணவன் நலத்தைப் பேணுதலில் கவனம் செலுத்தும் பெண், தனது கற்பொழுக்கத்தையும் காத்துக் கொள்வாள், புகழையும் காத்துக்கொள்வாள்.

**காத்தல் :**

நலம் பேணுதல் என்பது எல்லாக் காலத்துக்கும் உரியது. காத்தல் என்பது, ஆபத்து ஏற்படும்போது, மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கை.

எதற்கு ஆபத்து வரும்? எது மிக உயர்ந்ததாக இருக்கிறதோ, அதற்குத்தானே ஆபத்து வரும்! இல்லற வாழ்க்கைத் துணைக்கு உயர்வளிப்பது, அவளது கற்பு ஒழுக்கமும், இல்லற வாழ்க்கையின் புகழும் ஆகும்.

தனது கணவனது நலம் பேணும் நற்செயல், ஒரு பெண்ணுக்கு, இவை இரண்டையும் காத்துக் கொள்ளும் ஆற்றலைக் கொடுத்துவிடுகிறது.

சீதாப்பிராட்டி, அயோத்தியிலும், ஆரணியத்திலும் (காட்டிலும்) இராமபிரானுக்கு, அவ்வப்போது செய்ய வேண்டிய கைங்கரியங்களைச் செய்து, அப்பெருமானது நலத்தைப் பேணி வந்ததால், தற்காத்தலுக்கும், தகைசான்ற சொல் (புகழ்) காத்தலுக்கும் வேண்டிய ஆற்றல், தனக்குக் கிடைத்துவிட்டதாக உணர்கின்றாள்.

அதனால்தான், பிராட்டி சிறையில் இருக்கும் இந்தச் சமயத்தில், இராமபிரானது நலத்தைப் பேணமுடியவில்லையே (அருந்தும்.........விம்மும்) என்று வருந்துகின்றாள்: சோகத் தாளாய நங்கையாக இருக்கின்றாள்.

பெண்மைக்கு, திருவள்ளுவர் கூறியுள்ள இலக்கணத்துக்கு ஒரு எடுத்துக் காட்டாகத் திகழும் சீதாப் பிராட்டியின் கற்பின் பெருமையால், பெண் இனமே உயர்ந்து விட்டது. அப்படி உயர்வு பெற்ற பெண் இனத்தாரை வரிசைப்படுத்திக் காட்டுகின்றன. பின் வரும் கவிதைத் தொடர்கள்.

**மாகத்தார் தேவி மாரும் தொழுதற்கு ஒத்த வான் சிறப் புற்றார்:**

பெரிய வானத்தில் வசிப்பவர்களாகிய இந்திராணி, கலைமகள் போன்ற தேவ மாதர்களும், அனைவரும், வணங்கி வழிபாடு செய்வதற்கு ஏற்ற பெருஞ் சிறப்பைப் பெற்றுக் கொண்டு விட்டார்கள். தங்கள் கணவன் மார்களால் போற்றப் படுதலுக்கும் உரியவராயினர். ( மாகம் - ஆகாயம் : விண்ணகம். )

சீதாப்பிராட்டியின் கற்பு, மண்ணக மாதரை மட்டும் அல்ல! விண்ணக மாதர்களையும் சிறப்படையச் செய்துள்ளது.

**மற்றைப் பாகத்தாள், இப்போது ஈசன் மகுடத்தாள்:**

சிவபெருமானது, மற்றொரு பாகமாகிய இடப் பக்கத்தில் இருந்தவளான உமாதேவி, இப்போது, அந்தப் பரமசிவனது தலைமேல் இருக்கத்தக்க சிறப்புடையவளாக உயர்ந்து விட்டாள். தனது கணவனாகிய பரமசிவன் தனது தலைமேல் வைத்துக்கொண்டாடத்தக்க சிறப்பு உமாதேவிக்குக் கிடைத்தது, சிறையிருக்கும் சீதாப்பிராட்டியின் கற்புப் பெருமையால் தான். (மகுடம் - தலை உச்சி )

**பதுமத்தாளும் ஆகத்தாள் அல்லள் : மாயன் ஆயிரம் மௌலி மேலாள் :**

செந்தாமரை மலரில் வசிப்பவளான திருமகளும், இனி மேல், திருமாலின் திருமார்பில் இருக்கத்தக்கவள் அல்லள்.

அப்பெருமானது ஆயிரம் திருமுடிகளின் மேல் தங்குவதற்கு உரியவளாகின்றாள். திருமார்பில் தங்கியிருந்த திருமகள், தனது தலையில் வைத்துக் கொண்டாடுவதற்கு ஏற்ற பெருஞ் சிறப்பைப் பெற்றுவிடுகின்றாள் சீதாப்பிராட்டியின் கற்புத் திறத்தால். திருமால் விராட சொரூபம், ஆயிரம் தலைகளைக் கொண்டதாக இருக்கும். அதனைக் கருதி' ஆயிரம் மௌலி, எனப்பட்டது.

'தேவி மாரும், பதுமத்தாளும்' என்ற உம்மைகள் உயர்வுச் சிறப்பைக் குறிப்பனவாகும்.

'அசோக வனத்தில் (சோகத்தைப் போக்கக் கூடிய சோலை) தங்கியிருந்தும் சோகத்தினளாகயிருக்கும் சீதாப் பிராட்டியின் கற்புத்திறத்தால், விண்ணக மாதர்கள் மேன்மை பெற்றனர்' என்று சொல்வதன் மூலம், சோகத்தினனாக இருக்கும் இராமபிரான் அசோகனாக (சோகம் அற்றவனாக மாறவேண்டும் என்பது அனுமனது விருப்பம்.

சீதாப்பிராட்டியின் கற்பு மேம்பாட்டைக் கேட்ட இராம பிரான், அசோகனாக மாறியதை உணர்ந்து கொண்டான் அனுமான். கற்புத்திறத்தை விளக்குவதை இத்தோடு நிறுத்திக் கொண்டு, அந்தப் பிராட்டியைத் தான் காண்பதற்கு எடுத்துக் கொண்ட வழிவகைகளை இனி, விரிவாகப் பேசத் தொடங்குகின்றான் அனுமன்.

# 16. கடலில் கண்டேன்

16 இலங்கையை முழுதும் நாடி,
இராவணன் இருக்கை எய்தி,
பொலங்குழை யவரை எல்லாம்,
பொதுவுற நோக்கிப் போந்தேன்,
அலங்குதண் சோலை புக்கேன்
அவ்வழி, அணங்கு அன்னாளை,
கலங்குதெண் திரையிற்று ஆய
கண்ணின்நீர்க் கடலில் கண்டேன்.
(கம் 6041)

அனுமன், சீதாப்பிராட்டியைக் கண்ட வழியைத் தெரிவிப்பதாக அமைந்தது இக்கவிதை. கடலைக் கடந்து இலங்கை நகருக்குள் புகுந்த அனுமன், 'சீதாப்பிராட்டியைக் கண்டது கடலில்தான்' என்று நயமாகப் பேசுகின்றான்.

**இலங்கையை முழுதும் நாடி :**

சீதாப்பிராட்டி இருக்கும் இடத்தைக்கண்டு பிடிப்பதற்கு, அனுமன் மேற்கொண்ட முதல் முயற்சி, இலங்கை நகர் முழுவதையும் சுற்றிப் பார்த்தால் ஆகும். (நாடி-தேடி) பிராட்டி இலங்கை நகருள்தான் வைக்கப்பட்டிருக்கிறாள் என்பது ஏற்கனவே அனுமன் அறிந்த செய்தி அந்தநகருள் எந்த இடம் என்பதுதான், கண்டு பிடிக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

பிராட்டி இருக்கும் இடத்தைக் கண்டு பிடிப்பதன் மூலம் அனுமன், இலங்கை நகரின் அமைப்பு, மக்கள் வாழ்க்கை, அரசியலில் பங்கு கொண்டுள்ள முக்கியமானவர்களின் நிலை முதலிய அனைத்தையும் ஆராய்ந்து தெரிந்துகொண்டு விட்டான்.

அனுமன், இலங்கையை முழுதும் நாடியதன் செய்தியை, கம்ப நாட்டாழ்வார், ஊர்தேடு படலமாக உருக்கொடுத்து, இருநூற்று முப்பத்து நான்கு (234) கவிதைகளில் விவரித்துள்ளார். 'அனுமன், இலங்கை நகரைச் சுற்றிக்கொண்டு வந்த காலம் வீணகாப் போனது அல்ல' என்பதைத் தெளிவு படுத்துவதற்குத்தான், கவிச்சக்கரவர்த்தி, இங்கு இருநூற்றுக்கு மேற்பட்ட கவிதைகளைச் சுவையாகத் தொடுத்துள்ளார்.

சொல்லிலும் செயலிலும் பெரு வீரனாகத் திகழும் அனுமன், நகரைச் சுற்றிப் பார்த்தலுக்குச் செலவிட்ட காலத்தில் அவனுக்குக் கிடைத்த அனுபவப் பேருண்மைகள், எதிர் காலச் செயலுக்கு எவ்வளவு பயனுடையதாக அமையப் போகிறது என்பதை இக்கவிதைகள் காட்டுகின்றன.

நகர் வலத்தின் மூலம் அனுமன் கண்ட பேருண்மைகள் பலப்பல. அவற்றுள் ஒன்று:

**கறங்கு கால்புகா: கதிரவன் ஒளிபுகா: மறலி**
**மறம் புகாது: இனிவானவர் புகார் என்கை வம்பே!**
**திறம்பு காலத்துள் யாவையும் சிதையினும், சிதையா**
**அறம்புகாது, இந்த அணிமதில் கிடக்கை நின்று அகத்தின்!**
**(4857)**

உயர்ந்த இந்த மதிளின் எல்லையைக் கடந்து இலங்கை நகரத்துள் எதுவும் புகமுடியாது. சுற்றிச் சுற்றி சுழன்று அடிக்கின்ற (காற்று) வாயுதேவன். எங்கும் தடையின்றி தனது ஒளியைப் பரப்பிக் கொண்டிருக்கின்ற சூரியன், எத்தகைய ஆற்றல் படைத்தவர்களையும் நடுங்கச் செய்கின்ற எமன் முதலிய தேவர்களே அந்த நகரத்துள் நுழையமுடியாது. பிறதேவர்கள் புகமுடியாததைச் சொல்லவே வேண்டாம்.

---

கறங்கு - சுற்றுகின்ற: கால் - காற்று: கதிரவன் - சூரியன்: மறலி-எமன்: மறம்-கொடிய திறம்: வம்பு-புதுமை: (வீண்) சிதையினும்-அழிந்தாலும்: திறம்பு காலம்-அழியும் காலம்.

உலகம் யாவும் அழிகின்ற காலத்தில் எல்லாப் பொருள் களும் அழியும். அந்த அழிவுக் காலத்தில்கூட அழியாத தருமமும் இந்த நகரத்துள் நுழையாது. என்றும் எங்கும் அழியாது நிலைத்து நிற்கக்கூடிய தருமதேவதையே நுழை யாத நகர், இலங்கை.

அறம் எங்கு இல்லையோ. அங்கு அழிவு, அழைக்காம லேயே வரும். அறத்தை நாட விடாத இலங்கை நகர், அழிவை நாடிக் கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டான் அனுமன்.

'இலங்கையை முழுதும் நாடி' என்று அனுமன் சொல்லிய சொல், அந்நகர் அழிவை நாடிக் கொண்டிருப்பதை. அவன் உள்ளத்தில் உணர்ந்த உணர்வால் எழுந்த ஒன்றாகும்.

**இராவணன் இருக்கை எய்தி:**

இலங்கையை முழுதும் நாடிப் பார்த்த அனுமன், எந்த இடத்திலும், தான் தேடி வந்த சீதாப் பிராட்டியைக் காண முடியவில்லை. அதனால், அவன் சிந்தித்தான். சிந்தனையில் ஓர் ஐய உணர்வு. பிராட்டியை இராவணன் கவர்ந்து வந்த தால், தான் திருட்டுத்தனமாகக் கொண்டு வந்த பொருள் யாருக்கும் தெரியாமல் மறைத்து வைத்துக்கொள்ளலாம் என்று, தனது அரண்மனையிலேயே, வைத்திருந்தாலும் இருக்கலாம். தனது கள்ளத்தனச் செயல், வெளியில் தெரி வது நல்லதல்ல என்பதாலும், அரக்கன் தனக்கே உரித்தான அந்தப்புரத்தில் பிராட்டியை வைத்திருக்கலாம். இந்தச் சந் தேகத்தால்தான், இராவணன் இருப்பிடத்தைச் சென்று பார்த்தான் அனுமன். (இருக்கை-இருப்பிடம்: எய்தி-அடைந்து)

**பொலங்குழையவரை எல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தேன்:**

இராவணனது அந்தப்புரத்தில் மகளிர்கள் பலர் இருந் தனர். அவர்களெல்லாம் பொன்னாலான, 'குழை' (பொலம்-

பொன்) என்னும் காதணிகளை அணிந்துகொண்டு ஆபரணங்களால் அழகு பெற்றவர்களாக இருந்தனர். 'அவர்களை எல்லாம் பொதுவாக நோக்கிக்கொண்டு சென்றேன்' என்று அனுமன் கூறுகின்றான்.

அந்த மகளிர்களின் கூட்டத்தில், தான் தேடிவந்த பிராட்டியைக் காணாததால், அனுமனின் உள்ளத்தில் வேறு ஒரு உணர்வு தோன்றலாயிற்று.

**"வடித்து ஆய் பூங்குழலாளை, வான் அறிய மண்அறிய**
**பிடித்தான் இவ் அடலரக்கன் எனும் மாற்றம் பிழையாதால்,"**

(தேர்ந்தெடுத்த மலர்களைச் சூடிய கூந்தலை உடைய சீதாப் பிராட்டியை, இந்தக் கொடிய, அரக்கன் கவர்ந்து சென்றது, விண்ணுலகத்தவரும் மண்ணுலகத்தவரும் அறிந்த ஒன்றாகும்.) இது தவறாத ஒரு செய்தி.

இந்தச்செய்தியை அனுமன் தனது மனத்தில் உறுதிப் படுத்திக் கொண்டுவிட்டான். அதனால், இலங்கையில்தான் பிராட்டியிருக்க வேண்டும் என்று நம்பினான் அனுமன். தான் தேடிப் பார்த்த இடங்களில் எங்கும் பிராட்டி காணப்படாததால், இராவணன் என்ன செய்திருப்பானோ என்று எண்ணத் தொடங்கிவிட்டான் அனுமன்.

**'கொன்றானோ, கற்பழியாக் குலமகளை? கொடுந்தொழிலால்,**
**தின்றானோ? எப்புறத்தே செறித்தானோ? சிறியேன்**
**ஒன்றானும் உணரகிலேன்'**

('தன் கருத்துக்கு இணங்காததால், கற்பழியாத உயர் குலத்துப் பெண்ணாகிய சீதாப் பிராட்டியை இந்த அரக்கன் கொன்றுவிட்டானோ? அல்லது கொடுமையான, இரக்கமில்லாத தனது குலத் தொழிலால் அவளைத் தின்றுவிட்டானோ? எந்த இடத்தில் சிறைக் காவலில் பத்திரப் படுத்தி வைத்துள்ளானோ? சிறியவனாகிய நான் இந்த மூன்று வகையில் உண்மையாக நிகழ்ந்தது இன்னது என்று அறிய இயலாதவனாக உள்ளேன்.)

அதனால்.

'வல்லரக்கன் தனைப்பற்றி வாயாறு குருதியுக
கல்லரக்கும் கரதலத்தால் காட்டு' என்று காண்கேனோ?'

(கொடிய அரக்கனாகிய இராவணனைப் பிடித்து, அவனுடைய வாய் வழியாக இரத்தம் சிந்தும்படியாக, கல்லையும் அழிக்கவல்ல எனது கையால், அவனது கன்னத்தில் அறைந்து வருத்த, அந்தவலி பொறுக்கமுடியாமல், அவன் பிராட்டியைக் காண்பிக்க நான் காணக் கடவேனோ?) என்று எண்ணுகின்றான் அனுமன்.

மகளிர்கள் தங்கியிருக்கும் அந்தப்புரத்திலும் பிராட்டியைக் காணாததால், ஏற்பட்ட அனுமனது உணர்ச்சி வேகம் இவ்வாறு எண்ணச் செய்தது, இந்த எண்ணத்தின் அடிப்படையில் எழுந்தது 'பொதுவுற நோக்கிப் போந்தேன்' என்பது.

**அலங்குதண் சோலை புக்கேன் :**

காற்று அசைகின்ற குளிர்ந்த அசோகவனத்தில் நுழைந்தேன். இலங்கையில் பல இடங்களையும் சுற்றிப் பார்த்த அனுமன், இறுதியாக, 'கள் உறையும் மலர்ச்சோலை அயல் ஒன்று கண்ணுற்றான்''மாடு நின்ற அம்மணி மலர்ச்சோலையை மருவி, தேடிக் காண்பனேல் தீரும் என் சிறுமை' என்று எண்ணினான் அனுமன்.(தேன் நிறைந்த மலர்கள் மலர்ந்துள்ள சோலை ஒன்று பக்கத்தில் இருப்பதைக்கண்டான்) (பக்கத்தில் இருக்கின்ற இந்த அழகிய மலர்ச்சோலையை அடைந்து,தேடிப் பார்த்து விட்டால் எனது கீழ்மைத் தன்மை நீங்கும்)

'சோலை புக்கேன்' என்ற கவிதைத் தொடர் அனுமன் இலங்கையில் அசோகவனத்தைக் கண்டதும், எண்ணிய எண்ணத்தை நினைவு படுத்துகின்றது.

அவ்வழி, அணங்கு அன்னாளை, கலங்கு தெண்திரையிற்றாய கண்ணின் நீர்க்கடலில் கண்டேன்.

அந்தச் சோலையில், திருமகள் போன்றவளான சீதாப் பிராட்டியை அலைகின்ற தெளிந்த அலைகளை உடையதாகிய கண்ணீராகிய கடலில் பார்த்தேன்.

அந்த மணி மலர்ச்சோலையில் தான் கண்டது சீதாப் பிராட்டிதான். என்பதை 'கண்ணின் நீர்க்கடலில் கண்டேன்' என்ற தொடரின் மூலம் உறுதிப் படுத்துகின்றான் அனுமன்.

பிராட்டியைச் சுற்றிலும் கடல் போன்று நீர் நிறைந் துள்ளது. அது, சீதையின் கண்களினின்றும் வழிந்த அழுகை நீர், 'களிக்கின்றார் அல்லால், கவல்கின்றார் ஒருவரையும் இலங்கையில் கண்டிலன் அனுமன். அதனால், கவல் கின்ற நிலையில் இருப்பவள் சீதாப் பிராட்டியாகத்தான் இருக்கவேண்டும் என்று தீர்மானித்தான் அனுமன்.

'பிராட்டியைக் கண்ணின் நீர்க் கடலில் கண்டேன்' என்ற தனது கூற்று, இராமபிரானது திருவுள்ளத்தில், சீதாப்பிராட்டி யைப் பற்றிய ஒரு நல்லெண்ணத்தை உருவாக்கியிருக்கும் என்பதை உணர்ந்து கொண்டான் அனுமன்.

பிறகு, தான் கண்டபோது, பிராட்டி எந்த நிலையில் இருந்தாள் என்பதை அடுத்த கவிதையில் தெரிவிக்கின்றான். அனுமன்.

# 17. தமியள்

17 அரக்கியர் அளவு அற்றார்கள்
அலகையின் குழுவும் அஞ்ச,
நெருக்கினர் காப்ப, நின்பால்
நேயமே அச்சம் நீக்க,
இரக்கம் என்ற ஒன்றுதானே
ஏந்திழை வடிவம் எய்தி,
தருக்குஉயர் சிறை உற்றன்ன
தகையள்அத் தமியள்—அம்மா!

(கம்-6042)

சென்ற கவிதையில் கூறப்பட்ட, அணங்கு அன்னாளை, அளவற்ற அரக்கியர்கள் நடுவில் அனுமன் கண்டதாகக் கூறுகிறது இந்தக் கவிதை. 'பிராட்டியைச் சுற்றிலும் கணக்கற்ற அரக்கிமார்கள் நெருக்கிக் கொண்டிருந்தார்கள். ஆனாலும், பிராட்டி, தமியளாகக் காணப்பட்டாள்' என்று அனுமன் கூறுகின்றான். அரக்கியர் கூட்டத்தின் நடுவில் இருந்தும் தமியளாகக் காணப்பட்டது எவ்வாறு? அதன் விளக்கத்தைக் குறிப்பாகக் காட்டுகிறது கவிதை.

**அரக்கியர் அளவு அற்றார்கள் :**

இராவணன் கூறும் சொல்லுக்குக் கட்டுபட்டு, அதன் படியே, நடந்துகொள்ளும் அரக்கியர்கள் எண்ணற்றவர்கள். (அளவு-கணக்கு) ஒரு பெண்ணைத் தன் இச்சைக்கு இணங்க வைப்பதற்கு, பல பெண்களின் மூலம் முயல்கின்றான் இராவணன். சுற்றியுள்ளவர்கள் உருவத்தால் பெண்கள்: உள்ளத்தால் பேய்கள்.

**அலகையின் குழுவும் அஞ்ச :**

பேய்க் கணங்களும் (குழு-கூட்டம்) பயப்படும் படியாக. பேய், தனது உடல் பசியைத் தீர்த்துக் கொள்வதற்காக, பிற உயிர்களை இரக்கம் இல்லாமல், அடித்துத்தின்னும் தன்மையது; தான் அஞ்சாமல், பிறரை அச்சுறுத்துவது: இரக்கம் என்பது இன்னது என்று அறியாத இயல்புடையது. அத்தகைய இயல்பினதாக இருந்தாலும், 'பெண்' என்றால் பேயும் இரங்கும்' என்ற உலகப் பழமொழிக்கு உட்பட்டதாக இருக்கும். அந்தப் பேய்கள்கூட இந்த அரக்கியர்களைக் கண்டால், அஞ்ச வேண்டும். அவ்வளவு கொடியவர்கள் இந்த அரக்கியர்கள்.

**நெருக்கினர் காப்ப :**

தப்பிப் போவதற்கு முடியாதபடி சந்துவிடாது நெருங்கி நின்று சுற்றிக்கொண்டு பாதுகாவல் செய்ய. சீதாப் பிராட்டி வெளியில் தப்பித்துக்கொண்டு போக முடியாதபடி, அரக்கியர்கள் நெருக்கமாகச் சுற்றிக் கொண்டுள்ளார்கள். கொடுமையே உருவமான பேய்களும்கூட, இவர்களது கொடுஞ்செயலைக் கண்டால், அஞ்சும்படியாக அரக்கியர்கள் இந்தப் பெண்ணாகிய சீதாப்பிராட்டியைக் கொடுமைப் படுத்தி அச்சுறுத்திக் கொண்டுள்ளார்கள்.

**நின்பால் நேயமே அச்சம் நீக்க :**

உன்னிடத்தில் கொண்ட அன்பே, அந்த அச்சத்தை நீக்க. (நேயம்-அன்பு) 'அன்பு' என்பதும் 'அச்சம்' என்பதும் வேறுபட்ட உணர்வுகள். உள்ளத்தில் ஒரு உணர்வு தோன்றினால், மற்றொரு உணர்வு அடங்கிவிடும். உள்ளம் ஏதேனும் ஒரு உணர்வுக்குத்தான், இடம் கொடுக்கும். அரக்கியர்களது கொடுஞ்செயலால் பிராட்டியின் திருவுள்ளத் தில் அச்ச உணர்வு தோன்றி அலைக்கழித்தது. இந்த உணர்வு வெளிப் பொருள்களின் பார்வையாலோ தொடர் பாலோ ஏற்படுவது.அன்பு உணர்வு இயல்பிலேயேஅமைந்தது. சீதாப்பிராட்டி, இராமபிரானிடம் கொண்ட, நீங்காத அன்பு உணர்வு, அரக்கியர் செயல்களால் ஏற்பட்ட அச்ச உணர்வை அகற்றியது.

**இரக்கம் என்ற ஒன்றுதானே எந்திழை வடிவம் எய்தி :**

இரங்குதல் என்ற ஒரு உணர்வு தானே, ஆபரணங்களை அணிந்துகொண்டு ஒரு உருவத்தைப் பெற்று.

பிறரது துயரைக் கண்டபோது, அந்தத் துயர் தனக்கு வந்ததாக எண்ணி வருந்துவதற்கு இரக்கம் என்று பெயர். இந்த இரக்க உணர்வு, பிறர்படும் துயரத்தைத் துடைக்கச் செய்யும். சீதாப்பிராட்டி, அந்த இரக்க உணர்வின் உருவமாக உள்ளாள்.

'இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினராகிய அரக்கர்களை' அழிப்பதாக ஆரணியத்தில் முனிவர்களிடம் உறுதி கூறியிருந்தான் இராமபிரான் தன் கணவனாகிய இராமபிரானது உறுதிமொழியைக் காப்பதற்காக, சீதாப் பிராட்டி, இரக்கமே ஒரு உருவு கொண்டாற்போன்ற வடிவினளாய் இரக்கம் அற்ற அரக்கியர் நடுவில் இருந்தாள்.

**தருக்கு உயர் சிறையுற்று அன்ன தகையாள் :**

கொடுமை மிக்க சிறைக் காவலில் அகப்பட்டிருந்தாற் போன்ற தன்மையுடையவளாக இருந்தாள்.

சீதாப்பிராட்டியிருந்த சிறை,அங்குக்காவலுக்கு வைக்கப்பட்டிருந்த அரக்கியர்களால் கொடுமை நிறைந்ததாக இருந்தது. (தருக்கு-கொடுமை : தகையள் - தன்மையள்)

**தமியாள் :**

'இரக்கம் என்ற ஒன்று ஏந்திழை வடிவம் எய்திதருக்கு உயர் சிறையுற்று இருந்தது' யார்? இந்தக் கேள்விக்கு விடையாக, 'சீதாப்பிராட்டி' என்ற சொல் வரவில்லை. இப்போது பிராட்டியின் மனநிலை எதுவோ, அதை எடுத்துக் காட்டும் சொல்லே, கேள்விக்கு விடையாக வந்துள்ளது. அரக்கியர்கள் நடுவில் இருந்தாலும், பிராட்டி தன் உள்ளத்தளவில் தனிமையில் இருப்பதாகவே, எண்ணுகின்றாள். இராமபிரானைப் பிரிந்து, எந்த இடத்தில் இருந்தாலும் அது தனிமைதான்.

தன்கணவனோடேயே, தங்கியிருப்பதைத் தான், தனிமை யற்றதாகக் கருதுவர் கற்புடை மகளிர் தன் மனதுக்கு இசை யாதவர்கள் எத்தனை பேர் கூடியிருந்தாலும், தனிமையில் இருப்பதாகக் கருதுவதுதான் உள்ளத்தின் இயல்பாகும்.

'இந்த உள்ளத்தினளாகப் பிராட்டி, அரக்கியர்கள் நடுவில் இருக்கிறாள்' என்று சொல்வதுதான் இராம பிரானுக்கு உகந்ததாக இருக்கும் என எண்ணி, 'தமியள்' என்ற சொல்லை அமைத்தான் அனுமன். இவன் சொல்லின் செல்வன்' அல்லவா? எந்த இடத்தில் எந்தச் சொல்லைச் செலுத்த வேண்டும் என்பதை நன்கறிந்த சொல்வல்லான் அனுமன்.

தமியள், அரக்கியர்......நெருக்கினர் காப்ப......நேயமே, அச்சம் நீக்க, ஏந்திழை வடிவம் எய்தி,.........சிறையுற்றன்ன தகையன்.

'தமியள்' என்ற இந்தச் சொல்லே இந்தக் கவிதைக்குத் தனித்ததோர் ஏற்றம் கொடுக்கிறது என்று சொல்லலாம்.

தமியளை, தான் காண்பதற்கு இருந்தபோது, அப் பிராட்டிக்கு நேர்ந்த ஒரு துன்பச் சூழ்நிலையை அனுமன் விவரிக்கின்றான் அடுத்த கவிதையில்.

# 18. வெய்து உரை சொன்ன நங்கை

18 தையலை வணங்கற்கு ஒத்த
இடைபெறும் தன்மை நோக்கி,
ஐய! யான் இருந்த காலை,
அலங்கல்வேல் இலங்கை வேந்தன்
எய்தினன்: இரந்து கூறி
இறைஞ்சினன்: இருந்த நங்கை
வெய்து உரை சொல்ல, சீறி
கோறல்மேல் கொண்டு விட்டான்.
(கம் - 6043)

தமியளாக நின்ற பிராட்டியின் கற்பு நெறிக்கு, ஏற்பட்ட பெருஞ்சோதனையையும், அந்தச் சோதனை தந்த வேதனையில் அவள் எப்படி நடந்துகொண்டாள் என்பதையும் அனுமன் எடுத்துக் கூறுவதாக அமைந்தது இந்தக்கவிதை.

பிராட்டியின் கற்பைக் குலைக்க வந்தவன் யார்? அவன் செய்தது என்ன? அந்தச் செயலுக்கு, பிராட்டியின் மாற்றுச் செயல் என்ன? இந்த மாற்றத்தால் ஏமாற்றம் உற்றவன், மேற்கொண்டு செய்ய நினைத்தது யாது? என்ற நான்கு கேள்விகளுக்குத் தெளிவான விடைகளைத் தருவது இந்தக் கவிதை.

ஐய! தையலை வணங்கற்கு ஒத்த இடை பெறும் தன்மை நோக்கி இருந்த காலை:

சுவாமியே! நான், பிராட்டியை எதிர் சென்று வணங்குவதற்கு ஏற்ற ஒரு சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டு இருந்தபோது.

எந்தச் செயலைச் செய்வதற்கும் காலம் இடம் கொடுக்க வேண்டும். செயலைத் திறம்படச் செய்வதற்கு மனிதன் எந்தக் காலத்தை எதிர்பார்க்கின்றானோ, அந்தக் காலம் வராமலும் போகலாம். எதிர்பார்க்கும் காலம் வரவில்லையே என்று ஏமாற்றம் அடைதல் கூடாது. உரிய காலம் வரும் போது, முன்புசெய்ய நினைத்ததைவிட, அதிகமான செயலைத் திறம்படச் செய்யலாம். இதுதான் காலத்தை ஒட்டிய வாழ்க்கைத் தத்துவம்.

அனுமன், தான் பிராட்டியை (வணங்கற்கு) இறைஞ்சுவதற்குரிய காலத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான். ஆனல் அந்தக் காலம், அனுமன் எதிர்பாராத வகையில், வேறு ஒருவன் பிராட்டியை இறைஞ்சுவதற்கு இடம் கொடுத்துவிட்டது. சீதாப்பிராட்டியை இறைஞ்சுதலுக்கு வேறுஒருவனுக்கு வாய்ப்பளித்து, அனுமனைத் தடுத்துநிறுத்திய அந்தக் காலம், பிறகு அனுமனுக்கு ஒரு பேருண்மையைப் புலப்படுத்தியது.

எதிர்பார்க்கும் நன்மை, உடனே கிடைக்காமல், தடைப்படுத்தப்படுவது, பின்னால் அதனினும் பெரிய நன்மையைக் கொடுப்பதற்குத்தான், என்பதைக் காலத் தத்துவத்தை உணர்ந்தவர்கள் தெளிவாகப் புரிந்து கொள்வார்கள்.

பிராட்டியை அனுமன் வணங்குவதற்கு ஏற்படுத்தப்பட்ட தடை, அவன், எதனை அனுமானமாக உணர்ந்திருந்தானோ, அதனைப் பிரத்தியட்சப் பிரணமாகக் (கண்ணால் நேரில் கண்டு தெளிவதற்காக) கண்டு தெளிவாக உணர்ந்து கொள்வதற்குத்தான்.

**அலங்கல் வேல் இலங்கை வேந்தன் எய்தினன் :**

வெற்றி மாலையைச்சூடிய, வேலாயுதத்தை உடைய

இலங்கை மன்னன் இராவணன், அங்கு வந்து அடைந்தான். (அலங்கல்-மாலை) மன்னன் மார்பு,மலர்மாலையால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. கை, வேல் ஒன்றை ஏந்தியுள்ளது. கையில் ஏந்தியுள்ள வேல்,வெற்றிக்குரிய வேலையைச் செய்வது.அதன் அடையாளமாக வந்த மாலையை (வெற்றி மாலை) மார்பு பெற்றுக்கொள்கின்றது. வேலையைச் செய்வது கை: வெற்றி மாலையைப் பெறுவது மார்பு. வேல் ஏந்திய கையும் வெற்றி மாலை புரளும் மார்பும், இராவணனது வீரத்திற்கு அடையாளமாக விளங்குவன! அத்தகைய வீரன், சீதையிருக்கும் சிறை உலகுக்குள் வருகின்றான், வந்து என்ன செய்தான்?

## இரந்து கூறி இறைஞ்சினன் :

யாசித்தலுக்குரிய வார்த்தைகளை வாய்கூசாமல் சொல்லி வணங்கினான். யாருக்கும் வணங்காமுடி வீரனாகிய இலங்கை மன்னன், ஒரு பெண்ணின் காலில் விழுந்து வணங்கினான். கையில் ஏந்தியிருந்த வேலும்,மார்பில் புரண்ட மாலையும், இப்பொழுது தமது அடையாளப் பொருளை இழந்து விட்டன.

ஒரு பெருவீரன் பேசத் தகாத சொற்களை, அவன் வாய் பேசிற்று. ஒரு மாமன்னன் செய்யத்தகாத செயலை, அவனது தலை செய்தது. ‘தோற்றிலா விறலோன்’ என்று போற்றப்படும் இராவணன், பிறரால் தூற்றப்படும் செயலைச் செய்யத் துணிந்து விட்டான். இராவணன், வாயினின்றும் வெளிவந்த வார்த்தைகளைத் தன் செவிகளால் கேட்டவன் அனுமன். அவன் செய்த செயலைத் தன் கண்களால் கண்டவன் அனுமன்.

## அனுமன் அசோகவனத்தில் கண்டதும் கேட்டதும் :

‘அவ்விடத்து அருகு எய்தி, அரக்கன்தான்,
‘எவ்விடத்து எனக்கு இன்அருள் ஈவது?
நொவ் இடைக் குயிலே நுவல்க’ என்றனன்:
வெவ்விடத்தை அமிழ்து என வேண்டுவான்.’ (5169)

..................................

..................................

'ஆசைப்பாடும் அந்நாணும் அடர்த்திடக்
கூசிக் கூசி இனையன கூறினான்.' (5170)

'இழவு எனக்கு உயிர்க்கு எய்தினும் எய்துக,
குழைமுகத்து நின் சிந்தனை கோடினால்,
பழகு நிற்புறும் பண்பு இவை காமத்தோடு,
அழகினுக்கு, இனியாருளர் ஆவரே.' (5177)

'குடிமை மூன்று உலகும் செயும் கொற்றத்து என்
அடிமை கோடி; அருளிதியால்' எனா,
முடியின் மீது முகிழ்த்து உயர் கையினன்,
படியின்மேல் விழுந்தான். பழி பார்க்கலான்.' (5182)

(உயிரைக் கொல்லும் தன்மையுள்ள விஷத்தை, தன்னை வாழவைக்கும் அமிர்தம் எனநினைத்து, அதனை விரும்புபவனான இராவணன், சீதையிருக்கும் இடத்திற்குச் சமீபமாக வந்து, 'வருந்துகின்ற (நொவ்-வருந்துதல்) இடையை உடைய குயில் போன்றவளே, எப்போது எனக்கு இன்னருள் செய்வது நீ சொல்வாயாக' என்று கூறினான்.)

(பிராட்டியின்மேல் கொண்ட பெருங்காதலும், மன்னனாகயிருக்கும் நாம் ஒரு மாதரிடத்தில் இப்படிக் கெஞ்சுகின்றோமே என்ற நாணமும் (வெட்கமும்) தன்னை வருத்துதலின், மனத்தில் கூச்சம் கொண்டு, இத்தகைய இரந்து கூறும் வார்த்தைகளைக் கூறினான்.) (தகுதிக்குக் குறைவான சொல்லைச் சொல்லும் போதும், செயலைச் செய்யும்போதும் உள்ளத்தில் அச்சம் ஏற்படும்.)

(வருந்துகின்ற முகத்தை உடைய உனது எண்ணம், என்மீது இரக்கம் கொள்ளாமல் மாறுபட்டால் (கோடினால்) நான் இறந்துவிடுவேன். அத்தகைய நாசம்

(இழவு) எனது உயிருக்கு நேர்ந்தாலும் நேரட்டும். அது ஒரு பெரிதல்ல. பழகுமாறு நிலையாக உள்ள, இப்படிபட்ட பண்புகளும், காமமும் ஆகியவற்றோடு உனது அழகுக்கு ஏற்றவாறு அமைந்த ஆடவர் என்னைத்தவிர வேறுயாரேனும் இருப்பார்களோ)

(பிறர் மனைவியை விரும்புவதால் தனக்குவரும் அபகீர்த்தியைப் பற்றிச் சிறிதும் சிந்திக்காதவனான இராவணன், 'மூவுலகத்துள்ளாரையும் எனக்குக் கீழ்வாழும் குடியாகச் செய்துள்ள வெற்றியைக் கொண்ட என்னை, உனது அடிமையாக ஏற்றுக்கொண்டு அருள்க' என்று சொல்லிக் கொண்டு, தன் தலையின்மேல் இரு கைகளையும் குவித்துக் கொண்டு, தரையின் (படி தரை) மீது விழுந்து வணங்கினான்)

தான் இவ்வாறு கண்டதையும் கேட்டதையும் உள்ளத்தில் இருத்திக்கொண்டு, 'இலங்கை வேந்தன் எய்தினன், இரந்து கூறி இறைஞ்சினன்' என்று அனுமான் கூறினான்.

இவ்வளவு பெரிய ஒரு மாமன்னன், பிச்சைக் காரனைப் போன்று இரந்து சொல்லிய சொற்களுக்கும் நிலத்தில் விழுந்து வணங்கிய செயலுக்கும் தனது மனைவி, கற்பு நெறி தவறாத வண்ணம், எத்தகைய பதில் கொடுத்தாளோ என்ற எண்ணம் இராமபிரான் திருவுள்ளத்தில் தோன்றுவது இயல்பு. அந்த இயல்புக்கேள்வி இராமபிரான் திருமுகத்தில் தோற்றம் அளிப்பதற்கு முன்னாலேயே,

'இருந்த நங்கை வெய்து உரை சொல்ல: என்று சொன்னான் சொற்செல்வன். அசோக வனத்தில் இருந்த அந்தப் பிராட்டி கொடிய சொல்லைச் சொல்ல.

இராவணனது ஆசை நோய், அவனது சொல்லை மெலிய வைத்தது. வேண்டத்தகாத அவனது காமம், அவன் வாயினின்றும் உதிர்த்த சொற்களை மென்மையாக்கியது. அதற்குப் பதில் கொடுக்கத் துணிந்த பிராட்டியின் கற்புத்

திறம், பிராட்டியின் சொற்களுக்கு வன்மை சேர்த்தது. பிராட்டியின் சொற்கள் வலிமை பெற்றதற்குக் காரணமாக அமைந்தது, பிராட்டியின் திருவுள்ளத்தில் தங்கிக்கிடந்த கற்புத்திண்மைதான்.

அசோகவனத்தில் அந்த அரக்கனுக்கு முன்னால் பிராட்டி சொன்ன வெய்ய மாற்றங்களைத் தனது செவி யாரக் கேட்டவன் அனுமன். அவ்வளவு மாற்றங்களும் (சொற்களும்) எதிரில் நின்ற இலங்கை மாமன்னனுக்கு ஏமாற்றம் அளித்தன.

**மேருவை உருவ வேண்டின், விண்பிளந்து ஏக வேண்டின்,**
**ஈர்எழு புவனம் யாவும் முற்றுவித் திடுதல் வேண்டின்,**
**ஆரியன் பகழி வல்லது: அறிந்து இருந்து - அறிவு இலாதாய்!**
**சீரிய அல்ல சொல்லி, தலைபத்தும் சிந்துவாயோ?'**

(கம்-5185)

(அறிவற்றவனே! உயர்ந்தவனான எனது கணவன் இராமபிரானுடைய அம்பு, மேருமலையைத் துளைக்க விரும்பினாலும், ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டு அப்புறம் செல்ல வேண்டுமென்றாலும் பதினான்கு உலகங்களையும் அழிக்க வேண்டுமென்று எண்ணினாலும் இதனை எல்லாம் உடனே செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றது. இதனை நீ தெரிந்திருந்தும், சிறப்பில்லாத வார்த்தைகளைச் சொல்லி, உனது பத்துத் தலைகளையும் சிதறக்கடவாயோ') இது, சீதை கூறிய வெய்ய உரைகளின் ஒரு பகுதி.

வேண்டத்தகாத வார்த்தைகளைக் கூறிய இலங்கைப் பேரரசனை, 'அறிவிலாதாய்' என்று அழைத்ததும், அவனுக்கு முன்னால், இராமபிரானது வில்லாற்றலை எடுத்துச் சொன்னதும், இராவணன் பேசிய பேச்சு, அவனது தலை களைச் சிதறடித்துவிடும் என்று எச்சரிக்கை விடுத்ததும், பிராட்டியின் கற்புளத்தில் கனன்று வந்த வெய்துரையாகும்.

இத்தகைய வெய்ய மாற்றங்களை, அனுமன் காதுகுளிர அசோக வனத்தில் கேட்டதால், 'இருந்த நங்கை வெய்துரை சொல்ல' என்று இராமபிரானிடம் கூறினான்.

**வேண்டத்தகாததைக் கூறினான் அரக்கன்:**

வேண்டத்தக்கது எது என்பதை எடுத்து விளக்கினாள் பிராட்டி. இந்த வெய்துரையைக் கேட்ட வேந்தன் என்ன செய்தான் என்பதை, கவிதையின் இறுதித் தொடர் காட்டுகின்றது.

**சீறி, கோறல்மேற் கொண்டு விட்டான்:**

(நங்கை கூறிய கொடுஞ்சொற்களைக்கேட்ட இராவணன்) கோபித்து, அவளைக்கொல்லத்தலைப்பட்டு விட்டான். தனது ஆசை நிறைவேறாது போனால், ஆசைக்கு உரிய பொருளை அழித்துவிட எண்ணுவது கீழ்மைக்குணம். அந்தக் கீழ்க்குணத் தளவுக்கு இறங்கினான் இராவணன். (சீறி-கோபித்து : கோறல்-கொல்லுதல்)

'பிராட்டியைக் கொல்லத் தலைப்பட்டான் அரக்கன்' என்ற செய்தியைக் கேட்ட இராமபிரான், இரக்கமற்ற அந்த அரக்கன் என்ன செய்திருப்பானோ' என்று எண்ணியிருந் திருப்பான். அந்த எண்ணம், மேல் எழுந்து, செய்தது என்ன?' என்ற கேள்வியாக வருவதற்கு முன்பு, அதற்கு விடை வருகிறது அடுத்த கவிதையில்.

'தையலை வணங்கற்கு ஒத்த காலம்'அனுமனுக்குத்தடைப் பட்டதால்தான், பிராட்டியின் கற்புத் திண்மையை நேரில் காண்பதற்கும், அதனை, இராமபிரான் திருவுள்ளம் குளிரச் சொல்வதற்கும் வாய்ப்பு கிட்டியது.

இராமபிரான் திருவுள்ளத்தில் உவகை மிகுமாறு மேற்கொண்டு, தான் கண்ட காட்சியை விவரிக்கின்றான் அனுமன் அந்தச் செய்தியை உட்பொருளாக்கிக் கொண்டு வருகிறது அடுத்தக் கவிதை.

# 19. பாதுகாப்பு

19 ஆயிடை அணங்கின் கற்பும்,
ஐய! நின் அருளும், செய்ய
தூயநல் அறனும், என்று, இங்கு
இனையன தொடர்ந்து காப்ப.
போயினன், அரக்கி மாரை
'சொல்லுமின் பொதுவின் என்று, ஆங்கு,
ஏயினன்; அவர்எலாம் என்
மந்திரத்து உறங்கி யிற்றார். (கம்-6044)

'கோறல் மேற் கொண்டுவிட்ட' அர்க்கனது செயல், நடக்க முடியாதபடி பிராட்டி காப்பாற்றப்பட்டது எவ்வாறு என்பதைத் தெளிவாக்குகிறது இந்தக் கவிதை.

இராவணனிடமிருந்து பிராட்டியைக் காப்பாற்றியது, கண்ணால் காணக்கூடிய எந்தப் பொருளும் அல்ல! எந்த மனிதரும் அல்ல! கண்ணால் காணமுடியாத. கருத்தால் உணரக் கூடியவற்றால்தான், பிராட்டிக்குப் பாதுகாப்புக் கிடைத்தது என்று கூறுகிறது இந்தக் கவிதை.

அனுமான், தான் சீதாப்பிராட்டியைக் கண்டு பேசுவதற்கு உரிய வாய்ப்பு, எவ்வாறு கிட்டியது என்பது பற்றியும், பேசிய பேச்சைப் பற்றியும் இனிமேல் விவரிக்கத் தொடங்குகின்றான்.

**ஐய! ஆயிடை அணங்கின் கற்பும்:**

சுவாமியே! அந்தச் சமயத்தில் பிராட்டியின் கற்பு நிலையும், சீதாப்பிராட்டியை, ஆபத்தினின்றும் காப்பதில் முதலிடம் வகிப்பது அவள் தம் கற்பு! மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை' என்பது வள்ளுவம். 'நிறையாவது நெஞ்சைக் கற்பு நெறியில்நிறுத்தல்' என்பது பரிமேலழகர் தரும் விளக்கம்.

பிராட்டியை ஆபத்திலிருந்து காப்பாற்றும் மூன்றனுள் கற்பு முதன்மையாக இருப்பதற்குக் காரணம், அது பிராட்டியிடம் இயல்பாக அமைந்திருப்பதாகும்.

**நின் அருளும் :**

உனது திருவருளும், பிராட்டியைக் காப்பதில் அடுத்ததாக வருவது இராமபிரானது திருவருள். பெருமானது திருவருளின் துணையால், தீமையாக வரும் எதனையும் எதிர்த்து நிற்கலாம். அப்படி, இராமபிரானது அருட்கருணை தந்த வலிமையால், சீதாப்பிராட்டி இராவணனை எதிர்த்துப் பேசி, அவனை எச்சரித்தாள்.

**செய்ய தூயநல் அறனும்:**

செவ்வையாகிய தூய்மையான நல்ல அறமும், செவ்வையும் தூய்மையும் நன்மையும் உடைய தருமமும், பிராட்டியைப் பாதுகாப்பதற்குத் துணையாக நின்றது.

**என்று இங்கு இனையன தொடர்ந்து காப்ப:**

என்று இங்கு சொல்லப்படுகின்ற இந்த மூன்றும் தொடர்ச்சியாக நின்று பிராட்டியின் உயிரை விடாமல் பாதுகாக்க

**போயினான் :**

இராவணன் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டான். பிராட்டியைக் கொல்லத் தொடங்கிய அரக்கன், அவளை, கற்பும், இராமபிரானது திருவருளும், தருமதேவதையும் தொடர்ந்து பாதுகாத்து நிற்பதால், தான் நினைத்த,

கொடுஞ் செயலைச் செய்ய இயலாது, அந்த இடத்தைவிட்டு அகன்றான். அந்த இடத்தை விட்டு அகல்வதற்கு முன்பாக அங்கிருந்த அரக்கியர்களுக்கு ஒரு கட்டளையிட்டுச் சென்றான் இராவணன்.

**அரக்கிமாரைச் 'சொல்லுமின் பொதுவின்'**
**என்று ஆங்கு ஏயினன்:**

அரக்கிகளைப் பார்த்து, 'பொதுவாகச் சொல்லுங்கள்' என்று அந்த இடத்தில் கட்டளை (ஏயினன்) இட்டான் இராவணன். இராவணனது கருத்துக்கு இசைந்தால் என்ன நன்மை கிடைக்கும் என்றும், இசையவில்லை என்றால் எத்தகைய தீமை கிடைக்கும் என்றும், பிராட்டியிடம் சொல்லுமாறு அரக்கியர்களுக்கு ஆணையிட்டான் இராவணன், மனிதரது இழிவையும், எனது பெருமையையும் எடுத்துக் கூறி எனக்கு அவளை இசையப் பண்ணுங்கள்' என்பது அங்கு காவலுக்கு இருந்த அரக்கியர்களுக்கு இராவணன் இட்ட ஆணை.

இந்த ஆணையைப் பிறப்பித்த பிறகுதான், இலங்கை மன்னன், அந்த இடத்தை விட்டு அகன்றான். இந்த ஆணைக்குக் கட்டுப்பட்ட அரக்கியர்கள் என்ன செய்தார்கள்?

**என் மந்திரத்து உறங்கியிற்றார்:**

நான் உச்சரித்த மந்திரத்தின் வலிமையால் தூங்கிவிட்டார்கள். காவலுக்கு இருக்கும் அரக்கிகள் விழித்துக்கொண்டிருந்தால், பிராட்டியைக் காண்பதும், பேசுவதும் இரகசியமாக இருக்காது என்பதால், அவர்களைத் தூங்க வைத்துவிட்டான் அனுமன். அரக்கியர்களின் தூக்கம், அனுமன் எண்ணத்துக்கு மாறாக, வேறு ஒரு எதிர்பாராத செயலுக்குத் துணையாக நிற்பதாகி விட்டது. அந்த எதிர்பாராத செயலோடு தொடங்குகிறது அடுத்த கவிதை.

# 20. வணங்கியதும் இணங்கியதும்

20 அன்னதுஓர் பொழுதில் நங்கை
ஆர்உயிர் துறப்ப தாக
உன்னினள்: கொடிஒன்று ஏந்தி,
கொம்பொடும் உறைப்பச் சுற்றி,
தன்மணிக் கழுத்தில் சார்த்தும்
அளவையில், தடுத்து, நாயேன்
பொன்அடி வணங்கி நின்று,
நின்பெயர் புகன்ற போழ்தில் (கம்-6045)

அனுமன் எதிர்பாராத நிகழ்ச்சி ஒன்று, பிராட்டியினிடம் நடந்ததையும், பிராட்டி எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி, அனுமன் மூலம் நடந்ததையும் தெரிவிக்கின்றது இந்தக் கவிதை.

பிராட்டியைக் காத்து நின்றது மூன்று என்பது, முந்தைய கவிதையின் செய்தி. இப்போது, அவளைக் காத்தது அனுமன் ஒருவனே என்று இந்தக் கவிதை கூறுகின்றது.

கற்பும், அருளும், அறமும் பிராட்டியை எந்த முறையில் காத்தது என்பது பிராட்டிக்கும் தெரியாது; பிறர்க்கும் தெரியாது. இப்போது அனுமான் காத்தது பிராட்டிக்கும் தெரியும் பிறர்க்கும் தெரியும். பிராட்டிக்கு எவ்வளவு பெரிய ஆபத்து வந்தது என்பதையும், அந்த ஆபத்தினின்றும் அனுமன் பிராட்டியை எந்த வகையில் காப்பாற்றினான் என்பதையும் இந்தக் கவிதையில் தெளிவாகக் காணலாம்.

**அன்னது ஓர் பொழுதில் :**

அத்தன்மையதான சமயத்தில் பிராட்டியைக் காவல் செய்துகொண்டிருந்த அரக்கிமார்களெல்லாம் தூங்கிக்கொண்டிருந்த அந்தச் சமயத்தை நினைவூட்டுவது இந்தத் தொடர். அரக்கிகளின் உறக்கத்தைத் தனது எண்ணத்தைச் செயல் படுத்திக் கொள்வதற்குச் சாதகமாக்கிக் கொள்ளத் துணிந்து விட்டாள் பிராட்டி.

**நங்கை ஆருயிர் துறப்பதாக உன்னினாள்:**

சீதாப்பிராட்டி பெறுதற்கு அரிய தனது உயிரை விட்டு விடுவதாக எண்ணினாள். (உன்னுதல்-எண்ணுதல்) வாழ்க்கையில் ஏற்படும் வெறுப்புத்தான், உடலினின்றும் உயிரைப் பிரித்துக் கொள்வதற்குத் தூண்டுகின்றது. உடலைத் தங்குமிடமாக்கிக் கொண்டும், அதனைக் கருவியாக்கிக்கொண்டும், உலகில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் ஆன்மா. அதனை விட்டுப் பிரிந்து விடுவது என்று முடிவு செய்து விட்டால், அந்த முடிவை மாற்றும் ஆற்றல் உடலுக்கு இல்லை. உடல் எவ்வளவு மெலிவுற்றிருந்தாலும், 'இன்னும் சில நாட்கள் இங்குதான் தங்கியிருப்பேன்' என்று ஆன்மா தீர்மானம் செய்து விட்டால், அந்தத் தீர்மானத்தை மாற்றி, ஆன்மாவை வெளியேற்றும் வல்லமையும் உடலுக்கு இல்லை.

பிராட்டி, அசோக வனத்தில், இந்தச் சமயத்தில் எண்ணிய எண்ணம், உடலினின்றும் உயிரைப் (ஆன்மா) பிரித்து விடுவது என்பது பிரிக்க முடிந்ததா? இல்லை. வீழ்ந்தவரை எல்லாம். வாழ்ந்தவராக்க வந்த பிராட்டி, தனது வாழ்க்கையை வெறுக்கும் நிலைக்கு வந்து விட்டாள். வாழ்க்கையின் கடைக் கோடிக்குப் போகும் அளவுக்கு, பிராட்டியின் மனம் நொந்து விட்டது.

மனம் நொந்து, வாழ்க்கையை வெறுக்கும் சூழ்நிலை தனக்கு ஏற்பட்டிருப்பதாத, ஒன்றன் பின் ஒன்றாகச் சிந்தித்துப் பார்க்கிறாள் பிராட்டி. இறுதியாக,

'அற்புதன், அரக்கர்தம் வருக்கம் ஆசுஅற
வில்பணி கொண்டு அருஞ்சிறையின் மீட்டநாள்,
"இல்புகத் தக்கலை" என்னில், யானுடைக்
கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்,.
(5248)

'ஆதலான் இறத்தலே அறத்தின் ஆறு' எனா
சாதல் காப்பவரும் என்தவத்தின் சாம்பினார்:
ஈதுஅலாது இடமும் வேறுஇல்லை, என்று, ஒரு
போதுஉலாம் மாதவிப் பொதும்பர் எய்தினாள்.
(5249)

(ஆச்சரியகரமான திருக்கல்யாண குணங்களை உடைய இராமபிரான், தனது வில்லாற்றலைக் கொண்டு, இந்த அரக்கர்கள் கூட்டத்தை (வருக்கம்) அடியோடு அழித்து விடுவார். அப்போது நான் இந்தச்சிறையினின்றும் மீட்கப்படுவேன். மீண்டு வெளியில் வந்த என்னைப் பார்த்து, அந்தப் பெருமான் 'என் வீட்டில் நுழையும் தகுதி உனக்கு இல்லை' என்று கூறிவிட்டால், எனது உடைமையாகக் கொண்டுள்ள கற்பு நிலைமையை எந்த வழியில் நிரூபித்துக் காட்டுவேன்)

'இதுவரை உயிரோடு இருந்ததே, குணங்கள் என்னும் பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணியனாகிய இராமபிரானைக் கண்டு விடலாம் என்ற ஆசையால்தான். இந்த ஆசை தான், பொறையிருந்து, என் ஆருயிரைப் போற்றுமாறு செய்த என் ஆசை நிறைவேறுதற்குரிய அடையாளம் எதுவும் தெரியவில்லை.' பிராட்டியின் இத்தகைய எண்ணங்கள்தான் 'இறத்தலே அறத்தின் ஆறு' என்ற முடிவுக்கு வரும்படிச் செய்து விட்டன.

(சாதலே தருமத்தின் முறையாம்' என்று தீர்மானித்த பிராட்டி, அதற்கேற்ற சூழ்நிலை தனக்குச் சாதகமாக அமைந்திருப்பதாக எண்ணுகின்றாள். 'நான் சாகாமல் இருப்பதற்காக என்னைக் காவல் செய்துகொண்டிருக்கும் இந்த

அரக்கியர்தளும், எனது நல்வினைப் பயனால், உறங்கிக் கிடக்கின்றார்கள்.' 'இதுவல்லாமல் உயிரைத் துறக்க, வேறு சமயம் கிடைக்காது' என்று எண்ணி, மலர்கள் அசையப் பெற்ற ஒரு குருக்கத்தி மரச்செறிவை அடைந்தாள் பிராட்டி.)

இந்தச் சமயத்தில், அரக்கியர்கள் உறங்குவதற்குக் காரணம், தனது நல்வினைப் பயன்தான் என்று (சாதல் காப்பவரும் என் தவத்தின் சாம்பினார்) கருதுகின்றாள் பிராட்டி. அனுமனோ, அவரெல்லாம் என் மந்திரத்தால் உறங்கிக் கிடக்கின்றார்கள்' என்று எண்ணுகின்றான்.

சீதாப் பிராட்டியைத் தனித்துக் காண்பதற்கும், அவளிடம் தனித்துப் பேசுவதற்கும், அரக்கியர்களின் விழிப்பு நிலை தடையாக இருக்கும் என்று எண்ணி, அனுமான்தான் தனது மந்திர வலிமையால் அவர்களை உறங்க வைத்தான். அது, பிராட்டிக்குத் தெரியாது, அதனால் தன் தவப்பயனே அவர்களை உறங்க வைத்தது என்று கருதுகின்றாள் பிராட்டி.

அரக்கியர்களின் உறக்கத்தை, தனது உயிரை மாய்த்துக் கொண்டு, நிலையான உறக்கத்துக்குச் செல்வதற்குச் சாதக மாக்கிக் கொண்டு விட்டாள் பிராட்டி. தனது உயிரை வாழ வைப்பதற்கு-உயிர்க்குப் பாதுகாப்புக்காக, அரக்கியர் உறக்கம், அனுமனால் ஏற்படுத்தப்பட்டது என்பதை அறியாள் பிராட்டி.

எது ஒன்று. மனிதனது வாழ்க்கையை நலமாக்கு வதற்காக' அவன் எதிரில் வந்து கிடக்கின்றதோ, அதனை அதற்கு மாறாக, மனம் சில சமயம் எண்ணி விடுகின்றது. அத்தகைய மன நிலையை உடையவளாயினாள் பிராட்டி.

பிராட்டியின் எதிரில் காணும் அரக்கியர்களின் உறக்கம் அவளது எண்ணத்திற்கு மாறாக வேறு ஒரு வகையில் பிராட்டியின் நன்மைக்கே உதவப் போகிறது.

அரக்கியர் உறக்கம் அணங்கு அன்னாளின் நலத்துக்கு எப்படி உதவியாக இருந்தது என்பதை மேற்கொண்டு விவரிக்கின்றான் அனுமன்.

**கொடி ஒன்று ஏந்தி, கொம்பொடும் உறைப்பச் சுற்றி, தன்மணிக் கழுத்தில் சார்த்தும் அளவையில்:**

(ஆருயிர் துறக்க உன்னிய நங்கை) ஒரு கொடியை எடுத்து, ஒரு மரத்தின் கிளையிலே உறுதியாகக் கட்டி, தனது அழகிய கழுத்திலே சேர்த்துச் சுருக்கிட்டுக் கொள்ளும் சமயத்தில் (கொம்பு - மரக்கிளை; உறைப்ப - உறுதியாக; மணி - அழகு)

வாழ்க்கையின் இறுதிக் கட்டத்துக்குப் பிராட்டி சென்று கொண்டிருந்ததை நேரில் கண்டவன் அனுமன், அதனால் தான் நேரில் கண்ட காட்சியை, கண்டவண்ணமே எடுத்துப் பேசுகின்றான் அனுமன்.

இதனைக் கேட்ட இராமபிரான் திருவுள்ளத்தில். 'வாழ்வின் இறுதியை எட்டிக்கொண்டிருந்த பிராட்டி, எவ்வாறு மீட்கப்பட்டாளோ?' என்ற எண்ணம் அலைமோதிக் கொண்டிருந்திருக்கும். அந்த எண்ண அலைகள், திருமுகத்திற்கு வரும் முன்பே, 'தடுத்து' என்ற சொல்லை இட்டான் அனுமன்.

**நாயேன் தடுத்து:**

(சுருக்கிட்டுக் கொள்ளும் சமயத்தில்) நாய்போற் கடைப்பட்டவனாகிய அடியேன், அதனைத் தடை செய்து, பிராட்டியின் செயலை, தான் தடுத்து நிறுத்திய முறையை மனத்தில் பதிய வைத்துக்கொண்டு, 'தடுத்து' என்ற ஒரு சொல்லை மட்டும் சொன்னான் அனுமன்.

மங்கையின் மணிக்கழுத்தும் மரக்கிளையும் ஒன்றோடு ஒன்று இணையப் போகும் இந்த ஆபத்தான சமயத்தில், அந்தச் செயலைத் தடுத்தது எப்படி? அந்தச் செயலில் துணிந்து இறங்கிய தனது மனைவியின் உடலைத் தொட்டு தானே, தடுத்திருக்க வேண்டும், என்று இராமபிரான் நினைக்க இடம் உண்டு. அந்த நினைவுக்கு இடம் கொடுக்காதபடி,

'மெய் தீண்டக் கூசிய தான், 'அண்டர் நாயகன் அருள் தூதன் யான்' என்று சொல்லிய வண்ணம், தொண்டை வாய் மயிலினைத் தொழுது தோன்றிய காட்சியை மனத்தில் நினைத்துக்கொண்டு,

**"பொன் அடி வணங்கி நின்று நின்பெயர் புகன்றேன்"** என்று அனுமன் கூறினான்.

பிராட்டியின் அழகிய திருவடிகளை வணங்கிக்கொண்டு உன்னுடைய திருப்பெயரைக் கூறினேன். 'இராமா உனது திருப்பெயரோடு நான் பிராட்டியை வணங்கியதும், அவள் அப்போது மேற்கொண்டிருந்த ஆபத்தான செயலைக் கைவிடுவதற்கு இணங்கி விட்டாள். உனது திருப்பெயரின் ஒலியைச் செவி குளிரக் கேட்டதால்தான், பிராட்டி, தனது உயிர் விடும் செயலைக் கைவிடுவதற்கு இணங்கினாள்' என்று அனுமன். தடுத்தது எப்படி என்பதை விளக்கினான்.

தான் வணங்கியதும், பிராட்டி இணங்கியதை அடுத்த கவிதையில் விவரிக்கின்றான் அனுமன். பிராட்டி இணங்கியதை அடுத்த கவிதை விரிவாகப் பேசப் போவதால்தான், இந்தக் கவிதை 'புகன்ற போழ்தில்' என்று குளகமாக (எச்சமாக) நிறுத்தப்பட்டிருக்கிறது போலும்!

# 21. உவந்து சொன்னாள்

21 ‘வஞ்சனை அரக்கர் செய்கை
இது’ என மனக்கொண் டேயும்,
‘அஞ்சன வண்ணத் தான் தன்
பெயர் உரைத்து, அளியை, என்பால்
துஞ்சுறு பொழுதில் தந்தாய்
துறக்கம்’என்று உவந்து சொன்னாள்
மஞ்சுஎன வனமென் கொங்கை
வழிகின்ற மழைக்கண் நீராள் (கம்-6046)

தனது உயிரை மாய்த்துக் கொள்ளத் துணிந்த பிராட்டி அத்துணிவைத் துறப்பதற்கு இணங்கியது, எதனால் என்பதை விளக்கமாகப் பேசுகின்றது இக்கவிதை.

தனக்கு நல்வாழ்வு அளிக்க வந்து, தனது பொன்னடிகளை வணங்கி நின்ற அனுமனைக் கண்டதும், பிராட்டியின் மனத்தில் தோன்றிய எண்ணம், அனுமனைப் பார்த்து பிராட்டி உவந்து சொன்ன வார்த்தை, அப்பொழுதிருந்த பிராட்டியின் தோற்றம், ஆகிய இந்த மூன்று செய்திகளைத் தாங்கியவண்ணம் அமைந்தது இக்கவிதை.

**வஞ்சனை அரக்கர் செய்கை இது என மனக் கொண்டேயும்:**

அனுமன், இராமபிரானது திருநாமத்தைச் சொல்லிக் கொண்டு, பிராட்டியின் திருவடியை வணங்கிய இந்தச் செயல் வஞ்சனையின் உருவாக இருக்கும் அரக்கர்களது செய்கைதான் என்று தனது மனத்தில் நினைத்துச் சந்தேகித்தும், இந்தச் சந்தேகத்துக்குக் காரணம் உண்டு,

சீதாப்பிராட்டியைத் தனது இச்சைக்கு இணங்க வைப்ப தற்காக, இராவணன் எல்லாவிதமான மாயை வேலைகளையும் செய்வான். காட்டில், பர்ணகசாலையில் பிராட்டி இருந்தபோது, மாரீசன் என்ற அரக்கனை மான் உருவில் அனுப்பி வைத்து, அவன் மூலமாகவே, இலக்குவன் பெயரையும் சீதையின் பெயரையும் சொல்ல வைத்து, பிராட்டியை நம்ப வைத்தவன் இராவணன். மேலும், அங்கு, சாலையில் தனித்து இருந்த சமயம், தூய்மைக்குரிய துறவு வேடத்துடன் வந்து முனிவர்கள் பேசத்தக்க பேச்சினைப் பேசி, பிராட்டியை நம்ப வைத்தவன் அந்த அரக்கன்.

இதையெல்லாம் சீதாப்பிராட்டி மனத்தில் நினைத்துப் பார்க்கின்றாள். இதற்கு முன்பு இந்த அனுமனது திருவுருவத்தைப் பிராட்டி பார்த்ததும் இல்லை; இந்த உருவம் இராமபிரானுடைய திருப்பெயரைச் சொல்வதைக் கேட்டதும் இல்லை. இதனை, பர்ணகசாலையில் அன்று நடந்த நிகழ்ச்சியோடு ஒத்திட்டுப் பார்க்கின்றாள் பிராட்டி. அன்று வந்த மானைப் போன்று, வேறு ஒரு மானை அதற்கு முன்பு பிராட்டி பார்த்தது இல்லை. அந்தப் புதிய தோற்றம் தன்னை ஏமாற்றியதை, நினைத்து, இதுவும் அப்படியிருக்கலாம் என்ற சந்தேகம் தோன்றுகின்றது பிராட்டிக்கு. அந்த மாயத் தோற்றமும், தூயவன் புல்லினால் தொடுத்த தூய சாலையின் முன்பு தான், தன்னை ஏமாற்றியது; இந்தப் புதிய தோற்றமும், சோலையுள் இருக்கும் அதே சாலையின் முன்புதான், காணப்படுகிறது என்று எண்ணும்போது, சந்தேகம் மேலும் உறுதிப்படுகிறது பிராட்டியின் திருவுள்ளத்தில்.

ஆரணியத்தில் அன்று சாலை முன்பு புதிதாகத் தோன்றிய மான் உருவமும், இங்கு இன்று, அதே சாலையின் முன்புறத்தில் புதிதாகத் தோற்றமளிக்கும் இந்தக் குரங்கு உருவமும், மனித வடிவத்தினின்றும் மாறுபட்டவைகள். மனிதத்தோற்றத்திற்கு மாறுபட்ட மானின் வருகையும்,

அன்று எதிர்பாராதது: இன்று இங்குவந்துள்ள குரங்குத் தோற்றத்தின் வருகையும் எதிர்பாராதது அன்று எதிர் பாராத மானின் வருகை, பிறகு பெரிய ஏமாற்றம் அளித்து ஆபத்திற்கு உள்ளாக்கியது போன்ற, இன்று, எதிர்பாராத வருகைக்கு உட்பட்ட இந்தக்குரங்கு உருவமும் ஆபத்தை ஏற்படுத்தி விடுமோ என்று எண்ணும்போது, சந்தேகத்தை மேலும் வலுப் படுத்திவிடுகிறது, பிராட்டியின் திருவுள்ளத்தில். பிராட்டி யின்திருவுள்ளம், அன்று நடந்த நிகழ்ச்சியோடு நடக்கும் நிகழ்ச்சியை ஒத்திட்டுப் பார்த்து. அதில் ஒற்றுமை கண்டு, ஐயப்பாட்டை (சந்தேகத்தை) உறுதிப்படுத்திக் கொண்டதே அன்றி, இரண்டிற்கும் உள்ள, வேற்றுமையை உணரவில்லை, வேற்றுமையை உணர்ந்து, வியந்து மகிழும் மனநிலை அப்போது உடனே பிராட்டிக்கு ஏற்படவில்லை.

அன்று, அங்கு, சாலைமுன்பு வந்த மாய மான், நஞ்சன யானாகிய இராவணனால் அனுப்பப்பட்டது. அது, தோற்றத்தாலும் மனித வடிவத்தினின்றும் மாறுபட்டது: செயலாலும், மனித மனத்திற்கும் கீழ்மைப்பட்டது. அதன் வருகை, பிராட்டியிடமிருந்து பெருமானைப் பிரிப்பதற்காகவே ஏற்படுத்தப்பட்டது. அதில் வெற்றியும் கண்டுவிட்டது.

இன்று, இங்கு சாலைமுன்பு தோன்றும் குரங்குத் தோற்றம். அமிழ்தினும் ஆற்ற இனியனாகிய இராம பிரானுடைய ஆசீர்வாதம் பெற்றது. இந்த வடிவமும், மனித உருவத்தினின்றும் மாறுபட்டதுதான். ஆனாலும், இதன் செயல் மனித மனத்தினின்றும் மிக மிக மேம்பட்ட தெய்வ நிலைக்கு உரியது. இதன் வருகை, மானின் வருகையால் அன்று பிரிந்த இராமபிரானையும் சீதாப் பிராட்டியையும் ஒன்று சேர்த்து வைப்பதற்காக அமைந்தது. இதில் வெற்றியும் காணப்போகிறது. நன்மையின் வெற்றிக்கு முன்பு, ஐயமே, மேலோங்குகிறது.

இராவணன் தனது வஞ்சகச் செயலை மாயமான் மூலமாக நிறைவேற்றிக் கொள்வதற்காக நடத்திய நிகழ்ச்சியில், அன்று சிறிதும் சந்தேகம் கொள்ளவில்லை பிராட்டி. சந்தேகம் கொள்ளாதது மட்டும் அல்ல! அதனைத் தெளிவாக்கிக் கொண்டு, இராமபிரானையும் தன்னிடமிருந்து பிரியச் செய்தாள். அன்று, பிரிந்த பெருமானும், பிராட்டியும் ஒன்று சேர்வதற்காகவே செயல்பட்டுக் கொண்டிருக்கும் அனுமனைக் கண்டு, இன்று அரக்கனோ என்று ஐயம் கொள்கின்றாள் பிராட்டி. அன்று, தேராத ஒன்றில் தெளிவு கொண்டாள்: இன்று. தெளிந்த ஒன்றில் ஐயம் கொள்கின்றாள் பிராட்டி.

தீமையைக் கொடுப்பதற்காகவே. வருகின்ற ஒன்றை. நமக்கு நன்மையைச் செய்யவே, வந்தது என்று அதனை ஆசையோடு வரவேற்பதும், நல்லதையே நடத்த வந்த ஒன்றில், அது, தீமையைச் செய்து விடுமோ என்று சந்தேகப் படுவதும் மனித மனத்தின் இயல்பு விண்ணகத்துத் தெய்வமே ஆயினும், இந்த மண்ணகத்துக்கு வந்து மனித உருவில் இயங்கினால், அந்த மன இயல்புக்கு உட்பட்டு விடும் போலும்!

எந்த உயர்ந்த மனமும் மண்ணின் வாசனையை ஒட்டித் தான், தனது இயல்பை அமைத்துக் கொள்ளும், என்ற உள இயல் தத்துவத்தை, கவிச்சக்ரவர்த்தி, தமது காப்பியத் தலைவியின் மூலம் காட்டுவதற்காகவே, பிராட்டியின் எண்ண அலைகளை இங்கு விவரித்தனரோ என்று நினைக்கத் தோன்றுகின்றது.

அனுமனைக் கண்டதும், பிராட்டியின் உள்ளத்தில் ஒன்றன்பின் ஒன்றாக எழுந்துவந்த எண்ண அலைகள்:-

**'அரக்கனே ஆக; வேறு ஓர் அமரனே ஆக; அன்றிக்**
**குரக்கு இனத்து ஒருவனேதான் ஆகுக; கொடுமை ஆக;**
**இரக்கமே ஆக; வந்து இங்கு எம்பிரான் நாமம் சொல்லி,**
**உருக்கினன் உணர்வை; தந்தனன் உயிர்; இதின்உதவி**
**உண்டோ.' (5255)**

'என் முன்னால், நான் எதிர்பாராது தோன்றியுள்ள இவன், அரக்கனாகவே இருந்தாலும் இருக்கட்டும்: அல்லது, அரக்கர் இனத்துக்கு முற்றிலும் வேறுபட்டிருக்கும் தேவர்களுள் ஒருவனாக இருந்தாலும் இருக்கட்டும்: அல்லது இப்போது காணப்படுவது போல குரங்குக் கூட்டத்துத் தலைவனாக இருந்தாலும் இருக்கட்டும்: இதனால் வரக்கூடிய விளைவு, அன்று ஆரணியத்தில் நிகழ்ந்த தீமையேயானாலும் ஆகட்டும். அல்லது, இவன் என்மீது இரக்கம் கொண்டு, செய்கின்ற செயல் நன்மையேயானாலும் ஆகட்டும்.

பிராட்டியின் திருவுள்ளத்தில், ஐய உணர்வினால் எழுந்த இந்த ஐந்து எண்ண அலைகளுள் முதலாவதாக வந்தது அரக்கனோ என்ற எண்ணம்தான். பிராட்டி, முதன் முதலாக ஏமாந்துபோய் தவறு செய்தலுக்குக் காரணமாக இருந்தவன் அரக்கன். (மாரீசமான்) அந்தப் பயம்தான், நன்மைக்கு வந்ததையும் பலவாறாக எண்ணி ஐயப்படச் செய்தது.

இந்த ஐயங்களுக்கு மேல் ஒரு உறுதிப் பாட்டுக்கு வந்தாள் பிராட்டி.

'இவ்வளவு பாதுகாப்பு நிறைந்த-யாரும் அணுகமுடியாத இந்தச் சோலைக்குள் வந்து, என்முன் நின்று, எனது ஆருயிர்க் கணவனாகிய இராமபிரானது திருநாமத்தைச் சொன்னான். அந்தத் திருநாமச் சொல், எனது ஆன்ம உணர்வை உருக வைத்துவிட்டது. அதனால், உடலை விட்டு வெளியேறஇருந்த எனது உயிர், வெளியில் செல்லாது தடுக்கப்பட்டு விட்டது. இதைவிடச் செய்யத்தக்க சிறந்த உதவி ஏதேனும் இருக்க முடியுமா? எல்லா உதவியைவிட உயிர்தந்த உதவிதானே பேருதவியாக இருக்க முடியும்? என்பதுதான், பிராட்டியின் திருவுள்ளத்தில் எழுந்த ஐய உணர்வுகளை அடக்கிவைத்துவிட்டு, இறுதியாகத் தோன்றிய உறுதிப்பாடு.

'உணர்வை உருக்கினன்' என்ற தொடர், 'ஒண்தாமரை யாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு' என்ற பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதியின் தொடரை நினைவு படுத்துகின்றது. (இயற்பா-1-67)

இலங்கை நகர்க் கற்பச்சோலையில். பிராட்டியின் ஐய உணர்வுகளை, தான் உணர்ந்து கொண்டதால்தான், அனுமன் இங்கு இராமபிரானிடம், 'வஞ்சனை அரக்கர் செய்கை இது' என மனக் கொண்டேயும்' என்று சொன்னான். பிறகு, பிராட்டி, சொல்லியதைச் சொல்லலானான் அனுமன்.

**அஞ்சன வண்ணத்தான் தன் பெயர் உரைத்து, அளியை, என்பால், துஞ்சுறு பொழுதில் தந்தாய் துறக்கம் என்று உவந்து சொன்னாள்:**

என்பால் அளியை - என்பக்கல் நீ அருளுடையவன்: துஞ்சுறு பொழுதில்-யான் சாகப்போகின்ற இந்தச் சமயத்தில்: அஞ்சன வண்ணத்தான் தன் பெயர் உரைத்து மை போன்ற கரிய திருநிறம் உடைய இராமபிரானது திருநாமத்தைச் சொல்லி; துறக்கம் தந்தாய்-மரணத்தை ஒழித்து, சுவர்க்கத் தைத் தந்தாய்: என்று உவந்து சொன்னாள் - என்று மகிழ்ச்சியோடு சொன்னாள்.

பிராட்டி திருவுள்ளம் உவந்து சொன்ன வார்த்தைகளை எல்லாம் சுருக்கமாகத் தொகுத்து இராமபிரான் திருவுள்ளம் உவக்குமாறு சொல்கின்றான் அனுமன்.

'சாதலின் இன்னாதது இல்லை' என்றபடி. கொடூரமான சாவை எதிர்நோக்கிச் சென்று கொண்டிருந்த பிராட்டிக்கு, சுவர்க்க வாழ்வைக் (இன்பகரமான வாழ்வு) கொடுப்பதற்கு, அவள் எதிர்பாராவண்ணம் ஒருவன் வந்து நிற்கின்றான் என்றால், அவன் பிராட்டியிடம் எவ்வளவு அருளுடையவ னாக இருந்திருக்க வேண்டும். அதை நினைத்துத்தான், 'என்பால் அளியை' (நீ) என்று கூறுகின்றாள் பிராட்டி.

பிராட்டி உவந்து சொன்னது என்ன? 'துஞ்சுறும் பொழுதில் துறக்கம் தந்தாய்' என்று அனுமனைப் பார்த்துச் சொன்னது. துறக்கம்-சுவர்க்கம். அனுமன் பிராட்டிக்குச் சுவர்க்கம் தந்தது எவ்வாறு?

அஞ்சன வண்ணத்தான் தன் பெயர் உரைத்ததனால். எம்பிரான் திருநாம ஒலியைக் காதாலே கேட்பதே சுவர்க்க இன்பம். 'ஸ்ரீராம் ஜெயராம்' என்று அனுமன் திருவாயினின் றும் எழுந்த ஒலியே, பிராட்டியின் செவிக்குத்தேன் என இனித்தது. 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற படியே, பெருமானுடைய திருப்பெயரைக் கேட்டதும் உணர்வு உருகினாள் பிராட்டி. அதனால், பயனற்று, சாவுப் பயணத் தில் செல்வதாக இருந்த உயிர், பயன் பெறுவதற்காக, வாழ்வுப் பயணத்திற்கு மீளத் தொடங்கிவிட்டது.

தனது உணர்வை உருக்கி உயிர்தந்த உதவியைத் தன் திருவுள்ளத்தில் பதித்துக் கொண்டு, நன்றி உணர்வு தோன்ற பிராட்டி உவந்து சொன்ன சொற்கள் இவை.

துறக்கலா? துறக்கமா?

'துறக்கல்' என்று உவந்து சொன்னாள் என்ற பாடம், வை. மு. கோ. பதிப்பிலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பிலும், உள்ளது. 'துறக்கம்' என்றபாடம் மர்ரே கம்பெனிப் பதிப்பிலும், சென்னைக் கம்பன் கழகப் பதிப்பிலும் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

'துறக்கல் தந்தாய் - (யான் மரணத்தை) ஒழித்தலைச் செய்தாய்' என்பது வை. மு. கோ. பதிப்பின் உரை துறக்கல் தந்தாய்-(யான்) இறக்கும் தருவாயில்——மரணம் ஒழிதலைச் செய்தாய்' என்பது அ. ப. கழகப்பதிப்பு உரை 'துறக்கல்' என்பதற்கு ஒழிதல் என்று பொருள் கொண்டதால் 'தந்தாய்' என்பதற்குச் செய்தாய் எனப்பொருள் கொள்ளப்பட்டது இரண்டு பதிப்பிலும்.

அந்த இரண்டு பதிப்பினரும் கம்பன் காப்பியத்தில் மிக மிக ஆழமாகத் தோய்ந்து தோய்ந்து அனுபவித்து, சொற் களுக்குச் சரியான பொருள்காணும் நுண்ணறிவினர்தான்

ஐயம் இன்று ஆனால், அடியேன், சிறிய ஞானத்தினனாய், அங்கு இன்னும் ஆழமாகச் சென்று அறிதற்குரியது ஒன்று உண்டு என்று உணர்கின்றேன்.

உணர்ந்த ஒன்றை எழுதுவதுதானே எழுத்தாளனது கடமை! இந்தக் கடமையின் அடிப்படையில் வெளிவரும் கருத்தினை அறிஞர் பெருமக்களின் ஆய்வு மன்றத்துக்கு உரித்தாக்குகின்றேன். ஆய்வுமன்றம், கருத்தினை ஏற்றுகொண்டால்,கடமையைச் செய்ததற்கு மகிழ்வேன். பிழையைச் சுட்டிக்காட்டினால், திருத்தம் பெறுவேன்.

'தந்தாய்' என்ற சொல்லுக்கு நேரான பொருள் 'கொடுத்தாய்' என்பதுதான்'தா' என்ற பகுதியைக்கொண்டது இந்தச் சொல் தா-கொடு. இந்த நேர்ப்பொருளைக் கொள்ளாமல் 'செய்தாய்' என்று கருத்துப் பொருள் கொள்ளப்பட்டது அந்தப் பதிப்புக்களில் காரணம் 'துறக்கல்' என்ற பாடத்தை எடுத்துக்கொண்டதால் 'துறக்கல்'-'துறக்காதே' என்று அல் ஈற்று எதிர்மறை வியங்கோள் வினைமுற்றாக அமையக் கூடிய ஒன்றை 'துறத்தல்' என்ற தொழிற் பெயராகக் கொண்டு (மரணத்தை) ஒழித்தலைச் செய்தாய் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. 'துறவு' என்பது தொழிற்பெயர் உருவம் பெற வேண்டுமானால் 'துறத்தல்'என்று வருவதுதான் சொல்லிலக்கணம். அது துறக்கல் என்று வருமா? இங்கு, ஒழித்தல் என்ற பொருள்படும் படியான சொல் இருந்தால்தான், 'தந்தாய்' என்பதற்கு, 'செய்தாய்' என்று பொருள் கொள்வது பொருத்தமாக இருக்கும் இது கருத்தானால், 'துறத்தல்' என்றே கவிதையில் இடம் பெற்றிருக்கலாமே! துறக்கல், துறத்தல் இரண்டும் கவிதையில் இடம் பெறக்கூடிய'புளிமா' என்ற ஒரே சீர்வகையைச் சேர்ந்ததுதான் ஒரு பிரதியிலும் 'துறத்தல்' என்ற பாடம் இல்லை.

அதனால், தந்தாய் என்பதற்கு கொடுத்தாய் என்ற நேரான பொருள் கொள்வதற்குத் தடையாக இருக்கக் கூடிய 'துறக்கல்' என்ற சொல், திருத்தம் பெற வேண்டிய ஒன்றாக உள்ளது. 'ல்' 'ம்' என்று மாறினால் போதும் 'தந்தாய்' நேராகிவிடும்.

'துறக்கல்' என்ற பாடம், ஒரு பிரதியில் மட்டும்தான் உள்ளது. 'துறக்கம்' என்ற பாடம் 17 பிரதிகளில் உள்ளது. (அ.ப.க.பதிப்பு பாட வேறுபாடு பக்-291)அதனால், 'துறக்கம்' என்ற பாடமே கொள்ளத்தக்கதாக அமைகிறது ஒரு பிரதியில் காணப்படும் பாடமே (துறக்கல்) அப்பதிப்புக்களில் ஏற்கப் பட்டுள்ளது.

'துறக்கம் தந்தாய்'-சுவர்க்கத்தைக் கொடுத்தாய். அதுவும் கவிதையில் 'தந்தாய் துறக்கம்' என்று தான்அமைக்கப் பட்டுள்ளது. இறுதியில் நிற்கவேண்டிய சொல்லுக்கு,கவிஞன் வாக்கியத்தில் முதலிடம் கொடுத்துள்ளான். காரணம் அந்தச் சொற்களைச் சொல்பவரது உணர்வுக்கு முக்கியம் கொடுப் பதே ஆகும். உணர்ச்சி வேகம்தான் சொல்லை இடம் மாற்றி வைக்கும்.

'தந்தாய் துறக்கம்'என்பது சீதாப்பிராட்டியின் திருவுள்ளத் திலிருந்து எழுந்தது, இங்கு என்ன உணர்வு?உவகை உணர்வு உந்துகின்றது. 'உவந்து சொன்னாள்'—துஞ்சுறும் பொழுதில் சாவுத்துன்பம் ஏற்படப்போகும் சமயத்தில் சுவர்க்க இன்பம் வந்தால், அந்த மகிழ்ச்சிக்கு அளவு எது? அந்த மகிழ்ச்சிப் பெருக்கால்தான், 'துஞ்சுறும் பொழுதில் தந்தாய் துறக்கம்' என்று சொன்னாள் பிராட்டி. சாவுத்துன்பத்தில் சுவர்க்க இன்பம் கிடைத்ததால் பிராட்டியின் திருவுள்ளத்தில் உவகை உணர்வு பெருகியது அந்த உவகைப் பெருக்கைக் காட்டுவது 'ரந்தாய் துறக்கம்' என்ற கவிதைத் தொடர்.

'வீடு மின் முற்றவும்' என்ற தொடர், திருவாய் மொழியில் (1.2.1.) இடம் பெறுகிறது 'முழுவதையும் விட்டு விடுங்கள்' என்று இதற்குப் பொருள் இங்கும் வீடு மின் என்ற பயனிலை சொல், முதலிடம் பெற்றிருக்கின்றது. இதற்கு விரிவுரை கண்ட பேராசிரியர்கள் (வியாக்கியானகர்த்தாக்கள்)விட்டு விடுங்கள் ஆசைமுழுவதையும்' என்று சொல்வதன் மூலம்,ஆழ்வார்,அந்த ஆசைகளால் வரும் ஆபத்து உணர்வை உணர்த்துகின்றார் என்று சொல்கின்றனர்.

திருவாய் மொழியில் ஆபத்து உணர்வு,சொல் மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளது. இங்கு உவகை உணர்வு, சொல்லை இடம் மாற்றிவைத்துள்ளது. அதனால், தந்தாய் 'துறக்கம்'- துறக்கம் என்ற பாடமே சிறப்புடையதாகக் கொள்ளலாம்.

'துறக்கம்' என்ற சொல்லை, சுவர்க்கம் என்ற பொருளில்
**'ஆண்டு அது துறக்கம்; அஃதே அருமறைத் துணிவு'** என்றும் **(4833)**
**'துப்பு அழிந்து உய்வது துறக்கம் துன்னவே'** என்றும் **(5248)**
**'துஞ்சுதலில் வானவர் துறக்க நகரத்தும்'** என்றும் **(5442)**
**'நரகம் ஒக்குமால் நன்னெடுந் துறக்கம் இந்நகர்க்கு'** என்றும் **(4855)**

கவிச்சக்கரவர்த்தி இவ்வாறு பல இடங்களில் கையாண்டுள்ளார்.

துறக்கம் என்பது இங்கு சுவர்க்கத்து இன்பத்தைக் குறிப்பது. இராமபிரானது திருப்பெயரைக் கேட்பதே பிராட்டிக்குச் சுவர்க்க இன்பம். 'எம்பிரான் நாமம் சொல்லி உருக்கினன் உணர்வை' என்பது பிராட்டியின் திருவுள்ளக் கருத்தல்லவா? 'நோற்றுச் சுவர்க்கம்' புகுகின்ற அம்மானாய்' என்ற திருப்பாவைத் தொடரின் பொருளும், இறைவன் திருப்பெயரைக் காதில் கேட்டலே சுவர்க்க இன்பம் தரும் என்ற கருத்துக்கு வலிமை சேர்க்கிறது.

'தந்தாய் துறக்கம்' என்று உவந்து சொன்ன பிராட்டியின் தோற்றத்தை விவரிக்கின்றது கவிதையின் ஈற்றடி.

**மஞ்சு என வனமென் கொங்கை வழிகின்ற மழைக்கண் நீராள் :**

மலைமேல் பெய்கின்ற மழைபோல அழகும் மென்மையும் கொண்ட தனது தனங்களின் மேல் பெய்து ஓடுகின்ற குளிர்ந்த கண்களின் நீரை உடையவளாகிய பிராட்டி.

கண்களிலிருந்து பெருகிவரும் நீர் குளிர்ச்சியாக இருக்கிறது. அதனால், இது, பிராட்டியின் ஆனந்தக் கண்ணீர் என்பதைக் காட்டுகிறது. பிராட்டியின் சொற்கள் உவகை உணர்வின் உந்துதலால் திருவாயினின்றும் வெளிவந்தவை. எம்பெருமானின் திருநாமம் கேட்ட ஆனந்தப் பெருக்கால் புறப்பட்ட நீர், கண்களினின்றும் வெளிவருபவவை. சொற்களுக்கு அடிப்படை உவகை: கண்ணீருக்கு அடிப்படை ஆனந்தம். (மஞ்சு-மேகம்: மழை-குளிர்ச்சி)

'மழைக்கண் நீராள், அரக்கர் செய்கை மனக்கொண்டேயும், 'அஞ்சன வண்ணத்தான் தன் பெயருரைத்து, என்பால் அளியையாய் (கருணை, அருள்) துஞ்சுஉறு பொழுதில் துறக்கம் தந்தாய் என்று உவந்து சொன்னாள்.' என்று பொருள் முடிவு காணவேண்டும் இந்தக் கவிதைக்கு.

உவந்து சொன்ன பிராட்டி, பிறகு அந்த உவகைப் பெருக்குக்கு ஏற்ப என்ன கண்டாள் என்பதைச் சொல்கின்றது அடுத்த கவிதை.

# ௨௨. கண்டாள்

22 அறிவுறத் தெரியச் சொன்ன,
பேர்அடை யாளம் யாவும்,
செறிவுற நோக்கி, நாயேன்
சிந்தையில் திருக்கம் இன்மை
முறிவுஅற எண்ணி, வண்ண
மோதிரம் காட்ட, கண்டாள்;
இறுதியின் உயிர்தந்து ஈயும்
மருந்துஒத்தது அனையது-எந்தாய். (கம்-6047)

இராமபிரான் கொடுத்தனுப்பியிருந்த திருவாழியை (மோதிரம்) அனுமன் பிராட்டியிடம் காட்டி, அதனைப் பிராட்டி கண்டபிறகு. அவள் எப்படியிருந்தாள் என்பதையும், அதனைக் காண்பதற்கு முன்பு, எதனை எண்ணினாள் என்பதையும் எடுத்துக் கூறுகிறது இக்கவிதை.

அனுமன், தான் இராமபிரான் அனுப்பிய தூதுவன் என்ற செய்தியை, பிராட்டியை நம்பவைப்பதற்கு, அடையாளங்கள் பலவற்றைச் சொல்லால் சொல்லி நிரூபித்தபிறகு, இறுதியாக, பெருமான் அனுப்பிவைத்த மோதிரத்தைக் காட்டி, பிராட்டியின் திருவுள்ளம் ஏற்குமாறு உறுதிப் படுத்துகின்றான். பிராட்டி, முழு நம்பிக்கை பெறும் அளவு, தான் சொல்லியதையும் செய்ததையும் படிப்படியாக இராம பிரானிடம் சொல்லிவந்த அனுமன். மோதிரத்தை, பிராட்டி யிடம் சேர்ப்பித்ததைச் சொல்லுகின்றான்.

**எந்தாய் :**

எமது தலைவனே! 'என்+தந்தாய்' என்றும், 'எம்+தாய்' என்றும் பிரித்துப் பொருள் காணக் கூடிய ஒரு அருமையான தொடர் இது. அறிவை வளர்க்கும் தந்தையாகவும், அன்பைப் பெருக்கும் தாயாகவும் இருந்து அருள் சுரப்பவன் இறைவன். இத்தகையவன் தானே தலைவனாக இருக்க முடியும்! அனுமன் இராமபிரானைத் தலைவனாக மதித்து, 'எந்தாய்' என்று அழைத்துப் பேசத் தொடங்குகின்றான். தலைவன் தான், ஒருவனை தனக்கு விருப்பமான இடத்திற்கு, தனது செய்தியைத் தாங்கிச் செல்லும் தூதுவனாக அனுப்ப முடியும் அண்டர் நாயகன் அருள் தூதன் யான்" என்று பிராட்டியிடம் தன்னை அறிமுகம் செய்து கொண்டு, இராமபிரான் சொல்லியதை எல்லாம் சொல்லியும், செய்தும் வந்த தூதுவனாக நின்று. 'எமது தலைவனே' (எந்தாய்) பெருமானை விளித்து (அழைத்து) மகிழ்கின்றான்.

**அறிவுறத் தெரியச்சொன்ன பேர் அடையாளம் யாவும்:**

பிராட்டி அறியும்படி தெளிவாகச் சொன்ன பெரிய அடையாளங்கள் எல்லாவற்றையும்.

சீதாப் பிராட்டியை அனுமன் இதற்கு முன்பு கண்டது இல்லை. ஆயினும் இராமபிரான் சொன்ன அங்க அடையாளங்களைக் கொண்டும், கண்களில் தோன்றும் பிராட்டியின் அக உணர்வைக்கொண்டும் பிராட்டியைக் கண்டுகொண்டு விட்டான் அனுமான். இந்த அனுமனும் சீதைக்குப் புதியவன். இந்தப் புதியவனைச் சீதை எப்படி நம்புவது? இவனைச் சீதை நம்ப வேண்டும் என்பதற்காகத்தான், இராமபிரான் சில அடையாளச் சொற்களைச் சொல்லியும் அடையாளப் பொருள் ஒன்றைக் கொடுத்தும் அனுமனை அனுப்பிவைத்தான்.

அந்த அடையாளச் சொற்கள் இராமபிரானுக்கும் சீதாப்பிராட்டிக்கு மட்டுமே தெரியும் பிறர் யாருக்கும் தெரியாது அப்படிப்பட்ட அடையாளச் சொல்லை அனுமன் பிராட்டியிடம் எப்படிச் சொன்னான் என்பதைக் கவிச்சக்கரவர்த்தி கம்பர்,

**'தன்னை அறியாது அயர்வாளை**
**தரையின் வணங்கி, நாயகனார்**
**சொன்ன குறிஉண்டு: அடையாளச்**
**சொல்லும் உளவால், அவை, தோகை**
**அன்ன நடையாய்! கேட்க' என**
**அறிவன் அறைவான் ஆயினான்**

என்று அழகாக கூறியுள்ளார்.

(தன்னை அறியாமல் சோர்வுற்றிருக்கும் பிராட்டியை, முதலில் நிலம் தோயக்கீழ்விழுந்து வணங்கினான் அனுமன். இவன்தான் எந்த இடத்தில் எந்த முறையில் எதைச்சொல்வது என்பதை அறிந்து கொண்ட அறிஞன். இந்த அறிவன் சொல்லத் தொடங்கினான். (அறைதல்-சொல்லுதல்) மயில் போன்றமென்மையான சாயலை உடைய பிராட்டியே! உமது கணவனாராகிய இராமபிரான் அனுப்பிய அடையாளப் பொருளும் என்னிடம் உள்ளது. {அடையாளச் சொல்லும் உண்டு அதைச் சொல்கின்றேன். கேளுங்கள் (தோகை-மயில்) என்று, தனது பேச்சுக்கு முன்னுரை வகுத்துக் கொண்டு, அடையாளச் சொற்களைச் சொல்லத் தொடங்குகின்றான் அனுமன்.

தந்தையின் ஆணையைத் தலைமேற்கொண்டு இராமபிரான் கானகத்துக்குப் புறப்படும் போது பிராட்டிக்கும், பெருமானுக்கும் நடந்த உரையாடல்.

| | | |
|---|---|---|
| இராமபிரான் | : | கருவி மாமழைக்கல் கடம் கண்டு, நான் வருவென் ஈண்டு: வருந்தலை நீ |
| சீதாப்பிராட்டி | : | 'நாடு இழந்து காடு நோக்கிப் போகின்றேன் நான்' என்று சொன்னதில் எனக்கு வருத்தம் இல்லை. 'நீ வருந்தலை நீங்குவன் யான்' என்ற தீய வெஞ்சொல்தான் என் செவியைச் சுடுகின்றது. |
| பெருமான் | : | காட்டு அதர்-கல் அரக்கும் கடுமைய: நின் சில் அரக்கு உண்ட சேவடிப்போது, அதைப் பொறுக்குமா? |
| பிராட்டி | : | ஈண்டு நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு? |
| பெருமான் | : | கண்ணின் நீர்க்கடல் கைவிட நேர்கிலேன். |
| பிராட்டி | : | நானும், அகமனை எய்தி, புனையும் சீரம் துணிந்து, புனைந்து, வள்ளலாகிய நுமது நீள்கரம் பற்றி நிற்பேன். |
| பெருமான் | : | வெண்நகையாய்! விளைவை உன்னுவாய் அல்லை: போத அமைந்தனை ஆதலின், எல்லையற்ற இடர் தருவாய். |
| பிராட்டி | : | என் துறந்த பின் இன்பமே கொலாம்? (நகரைக் கடப்பதற்கு முன்பு) |
| பிராட்டி | : | யாண்டையது கான்? |
| பிராட்டி | : | (தேரில் கொண்டு வந்து நகர்ப் புறத்தில் விட்டு விட்டு அயோத்திக்கு மீள்கின்ற சுமந்திரனிடம்) பூவையும்..................அரசர்க்கு, அத்தையர்க்கு, என்னுடைய வணக்கம் முன் இயம்பி,யானுடைப் பொன் நிறப் பூவையும், கிளியும் போற்றுக என்று உன்னும் என் தங்கையர்க்கு உணர்த்துவாய். |

---

கடம்-காடு : அதர்-வழி : சேவடிப்போது-சிவந்த திருவடி மலர் : நேர்கிலேன்-உடன் பட்டிலேன் : சீரம்-மரவுரி : கரம்-கை : நகை-பற்கள் : இடர்-துன்பம் : யாண்டையது-எங்கு உள்ளது : கான்-காடு

என்ற இந்த உரையாடல்களை, இராமபிரான் சொல்லிய வண்ணம், சுருக்கமாகவும் தெளிவாகவும் பெரிய அடையாள மாகப் பிராட்டியிடம் சொன்னான் அனுமான்.

**செறிவுற நோக்கி :**

சொன்ன அந்த அடையாளங்கள் யாவும் பொருத்தமாக இருக்கிறதா என்று கவனித்துப்பார்த்து(செறிவு-பொருத்தம்) அனுமனால் சொல்லப்பட்ட அடையாளங்களைக் கொண்டு, இவன் இராமபிரானால் அனுப்பப்பட்டவனாகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வருவதற்கு ஏற்ற வண்ணம், பொருத்திப் பார்த்தாள் பிராட்டி.

**நாயேன் சிந்தையில் திருக்கம் இன்மை முறிவு அற எண்ணி :**

அடியேன் மனத்தில் மாறுபாடு இல்லாமையைக்கேடு இன்றியோசித்து. (சிந்தை-மனம் : திருக்கம்-மாறுபாடு : முறிவு-கேடு)

**வண்ண மோதிரம் காட்ட கண்டாள்:**

அழகிய மோதிரத்தை அடியேன் காட்ட, அதனைக் கண்டாள் பிராட்டி. (வண்ணம்-அழகு) அனுமன் சொன்ன அடையாளங்களின் பொருத்தத்தைக் கவனித்தும், அனுமனின் மனத்தில் எந்தவிதமான களங்கமும் இல்லை என்று சீதாப் பிராட்டி எண்ணி ஒரு முடிவுக்கு வந்தபிறகு, அனுமன், தான் கொண்டுவந்த மோதிரத்தைக் காட்டினான். அதனைப் பிராட்டி தன் கண்ணாரக் கண்டாள்.

**'மீட்டும் உரை வேண்டுவன இல்லை: என, 'மெய்ப்பேர்**
**தீட்டியது: தீட்டரிய செய்கையது: செவ்வே**
**நீட்டு இது'என நேர்ந்தனன் எனாநெடிய கையால்**
**காட்டினன் ஓர் ஆழி:அது வாள் நுதலி கண்டாள்.'** (5290)

என்று, அசோகவனத்தில் மோதிரம் கொடுத்தபோது நடந்த நிகழ்ச்சியைச் சுருக்கி, 'வண்ணமோதிரம் காட்ட, கண்டாள்' என்று இராமபிரானுக்கு, முன்சொன்னான் அனுமன்.

மோதிரத்துக்கு அழகு (வண்ணம்) என்பது. 'இராமா' என்று பெருமானது திருப்பெயர் எழுதப்பட்டதும், சித்திரித்தற்கு அரிய வேலைப்பாடு அமைந்ததும் ஆகும்.

மெய்ப்பெயர் தீட்டிய வண்ண மோதிரம்தான், அனுமனை, 'அண்டர் நாயகன் அருள் தூதன்' என்று பிராட்டியை உறுதியாக நம்பவைத்தது. அடையாளச் சொல்லில் அவன் நாமம் கேட்டாள் அடையாளப்பொருளில் இராமபிரானுடைய திருபெயரைத் தெரியக் கண்டாள் பிராட்டி.

அனுமன் உரைத்த அடையாள நிகழ்ச்சியில் ஈடுபட்ட பெரியாழ்வார்.

**'மைத்தகுமா மலர்க்குழலாய்! வைதேவீ; விண்ணப்பம்,**
**ஒத்தபுகழ் வானரக்கோன் உடனிருந்து நினைத்தேட**
**அத்தகுசீர் அயோத்தியர்கோன் அடையாளம் இவை மொழிந்தான்**
**இத்தகையான், அடையாளம் ஈது அவன்கை மோதிரமே'**

என்று, மோதிரத்தை அடையாளப்பொருளாக்கியதை நினைத்து மகிழ்கின்றார். (பெரியாழ்வார் திருமொழி 3-10-8)

மோதிரம் யாரிடத்திலிருந்து அனுப்பப்படுகிறதோ, அவருடைய பெயர் மோதிரத்தில் எழுதப்பட்டிருந்தால்தான், அதனைப் பெருபவர்க்கு ஒரு நம்பிக்கை ஏற்படும்.

சிந்தாமணிக் காப்பியத் தலைவன் சீவகன், தனது அருமைக் காதலி குணமாலைக்கு ஒரு கிளியைத் தூது அனுப்புகின்றான். அவன் கொடுத்தனுப்பும் அடையாளப் பொருள் 'சீவகன்' என்று பெயர் பதிக்கப்பட்ட மோதிரம் இது 'நாம மோதிரம்'என்று திருத்தக்க தேவரால் குறிக்கப்பெறுகின்றது. (சிந்தாமணி-1040)

---

மெய்ப்பேர்-உண்மையான திருப்பெயர் (இராமா) தீட்டியது-எழுதப் பட்டது: செவ்வே நீட்டு-நேராகச் சீதையின் கையில் கொடு: நேர்ந்தனன்-கொடுத்தான்: வாள் நுதலி-ஒளிமிக்க நெற்றியை உடைய சீதை.

**இறுதியின் உயிர்தந்து ஈயும் மருந்து ஒத்தது அனையது:**

அந்த வண்ண மோதிரம், பிராட்டிக்கு, மரணகாலத்தில். உயிரை, இறவாதபடி நிலை நிறுத்திக் காப்பாற்றுதற்கு உரிய மிருத சஞ்சீவி என்னும் மருந்தைப் போன்றது.

பிராட்டியின் உயிர் இறுதிக் காலத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. மெய்ப்பெயர் தீட்டிய இந்த மோதிரத்தைப் பிராட்டி கண்டதும், செல்ல இருந்த உயிர், உடலை விட்டுச் செல்லாமல் நின்று விட்டது. இந்த மோதிரத்தைக் கண்ட போது, பிராட்டி அடைந்த மகிழ்ச்சியை விளக்கிக் காட்டுவதற்குப் பல உவமைகளைக் கவிச்சக்கரவர்த்தி கையாண்டுள்ளார்.

> **'இறந்தவர் பிறந்த பயன் எய்தினர்.'**
> **'மறந்தவர் அறிந்து உணர்வு வந்தனர்.'**
> **'துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்தது.'**
> **'இழந்த மணி புற்று அரவு எதிர்ந்தது.'**
> **'பழந்தனம் இழந்தன படைத்தவர்.'**
> **'குழந்தையை உயிர்த்த மலடி.'**
> **'உழந்து விழி பெற்றது ஓர் உயிர்ப்பொறை.'**

இந்த உவமைகள் எல்லாம் பிராட்டியின் மகிழ்ச்சியை எடுத்துக்காட்டுவன.

அந்த மோதிரம் பிராட்டிக்கு எத்தகையதாக இருந்தது என்பதற்கும் உவமைகள் காட்டப்பட்டுள்ளன.

> **இருந்து பசியால் இடர் உழந்தவர்கள் எய்தும்**
> **அருந்தும் அமுது ஆகியது: அறத்தவரை அண்மும்**
> **விருந்தும் எனல் ஆகியது; வீயும் உயிர் மீளும்**
> **மருந்தும் எனல் ஆகியது; வாழி மணிஆழி.**

இவ்வளவு உவமைக் கருத்துக்களையும் உள்ளடக்கி வைத்து. 'அனையது மருந்து ஒத்தது' என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்தான் அனுமான்.

---

துறந்த உயிர்-சென்ற உயிர்: அரவு-பாம்பு: பழந்தனம்-பழைய செல்வம்: மலடி - பிள்ளைப் பேறு இல்லாதவள்: உயிர்த்த-பெற்ற: உழந்து-வருந்தி: அருந்தும்-உண்ணுகின்ற அண்மும்-வந்துசேர்ந்த: வீயும் உயிர்-இறக்கும் நிலையிலுள்ள உயிர்.

'காட்ட கண்டாள்' என்ற தொடரை வைத்துக் கொண்டு இதில் இராமாயணக் கதையின் தத்துவப் பொருளைக் காட்டி, ஆன்மீக உண்மைப் பொருளை விளக்குவார்கள் சமய ஞானம் படைத்த பெரியோர்கள்.

காட்டியவன் அனுமன் : கண்டவள் சீதை: காட்டப்பட்ட பொருள் வண்ண மோதிரம்: இதில் தீட்டப்பட்ட பெயர் **'ஸ்ரீராம்'** இதனை அனுப்பியவர் இராமபிரான் அனுப்புவதற்கு காரணம் தன்னோடு பிரியாது வந்த சீதை, பொன்மானின் மேல் கொண்ட ஆசையால் பிரிந்தாள்; இலங்கையில் சிறைப் பட்டாள்: இவளை மீட்பதற்கு, முன் நடவடிக்கையாக மோதிரத்துடன் அனுப்பப்படுகின்றான் அனுமன். இது இராமாயணக் கதையின் முக்கிய நிகழ்ச்சி.

தத்துவப் பொருள்: பரமான்மாவும் சீவான்மாவும் (பரமாத்மா ஜீவாத்மா) இணைபிரியாதவைகள் சீவான்மா, பரமான்மாவை விட்டுப் பிரியாமல் இருக்கும் வரை அதற்கு எந்தத் துன்பமும் இல்லை. பிரிந்தால் துன்பம் தொடரும் பிரிவதற்குக் காரணம் உலகப் பொருள் மேல் கொண்ட ஆசை இந்த மாய ஆசை, பரமான்மாவோடு சேர்ந்திருக்கும் சீவான் மாவைப்பிரித்து விடுகின்றது. பிரிந்த சீவான்மா, பொறிபுலன் கட்கு உட்பட்ட உடல் சிறையுள் கட்டுண்டு விடுகின்றது உடலகச் சிறையுள் அகப்பட்டு உலக வாழ்வில் சிக்குண்டு தவிக்கும் சீவான்மாவை, மீண்டும் தன்னோடு சேர்த்துக் கொள்வதற்குத் திட்டமிடுகின்றது பரமான்மா அத்திட்டத்தின் பயனாக உருவானவர் குருநாதர்.

பரம் பொருள், சீவான்மாவை மீட்பதற்கு, அதனிடம், தன்னால் ஆசீர்வதிக்கப்பட்ட ஒரு குருநாதரை அனுப்பி வைக்கிறது. அந்தக் குருநாதர் பரம் பொருளின் திருநாமத் தைச் சொல்லிக்கொண்டு, உலகச்சேற்றில் அழுந்திக் கொண் டிருக்கும் சீவான்மாவிடம் வருகின்றார். 'குரு' என்றாலே 'ஒளி' என்று பொருள் ஒளியைக் காட்டுபவர் குருநாதர். ஒளியைக் காண்பது, பிரிந்து தவிக்கும் சீவான்மா.

குருநாதர் காட்டும் ஒளி பரமாத்மாவிடமிருந்துதாம் பெற்ற ஞான ஒளி. இந்த ஒளி, சீவான்மாவுக்கு, பரமாத்மாவிடம் செல்வதற்குரிய வழியைக் காட்டும். ஞான ஒளி காட்டி, நல்வழியில் நடத்திச் செல்லும் குருநாதர், யாராலே அனுப்பப் பட்டாரோ, அந்த இறைவனாகவே, மதித்து வணங்கி வழிபாடு செய்யத்தக்கவராவார். குருவே நாம் வணங்கும் தெய்வம் என்று பெரியோர்கள் சொல்வார்கள்.

'குருர்ப்ரஹமா குருர்விஷ்ணுர் குருர்தேவோ மஹேஸ்வர;
குரு: ஸாஷாத் பரம்ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம:'
என்று உபநிடதம் கூறுகின்றது.

(குருவே பிரம்மா: குருவே விஷ்ணு: குருவே மஹேஸ் வரன்: குருவே பரப் பிரம்மம். அந்தக் குருவிற்கு சாஷ்டாங்க நமஸ்காரங்கள்)

இராமாயணத்தில் குருநாதராக வருபவர் ஆஞ்சநேய மூர்த்தி. பரமாத்மா, ஸ்ரீ ராமபிரான்: ஸ்ரீவாத்மா சீதாப் பிராட்டி. உலக மாயா ஆசை - மாயமான்: (பொன்மானாகிய மாரீசன்) ஐந்து புலன்கள் ஐந்து பொறிகள் அடங்கிய உடல்- பத்துத்தலை படைத்த இலங்கை மன்னன் ஆட்சிக்கு உட்பட்ட அசோகவனச் சிறை:

வண்ண மோதிரம்-குருநாதர் காட்டும் ஞானப்பேரொளி. இந்த ஞானப் பேரொளியைக் குருநாதர் காட்ட, அதனைக் கண்டு மகிழும் பக்குவம் சீவான் மாக்களுக்கு வரவேண்டும். 'காட்ட காணும்' ஆற்றல் சீவான்மாவுக்கு வந்துவிட்டால், சீதாப்பிராட்டி இராமபிரானிடம் சென்று சேர்ந்ததுபோல், சீவான்மாவும் பரமான்மாவுடன் சென்று சேர்ந்து, பிரியா நிலையாகிய பேரின்பத்தைப் பெற்றுவிடலாம்.

இதுதான், ஸ்ரீமத் ராமாயணக் கதையின் சாரம் என்று சுவாமி சிவானந்த மகராஜ் அவர்கள் இராமாயண சாரம் என்ற நூலுள் குறிப்பிட்டுள்ளார்கள்.

வண்ண மோதிரத்தைக்கண்ட சீதாப் பிராட்டியின் உள்ளத்து உணர்வைப்பற்றிச் சொல்கின்றான் அனுமன் அடுத்த கவிதையில்.

# உ3. இரண்டு கண்டேன்

23 ஒருகணத்து இரண்டு கண்டேன்
ஒளிமணி ஆழி ஆன்ற
திருமுலைத் தடத்து வைத்தாள்
வைத்தலும் செல்வ! நின்பால்
விரகம் என்பதனின் வந்த
வெங்கொழுந் தீயினால் வெந்து
உருகியது உடனே ஆறி,
வலித்தது குளிர்ப்பு உள்ஊற (கம்-6048)

பிராட்டி கண்டது ஒன்று; அதனைக் கண்ட பிராட்டியிடம் அனுமன் கண்டது இரண்டு, என்ற நயத்தோடு தொடங்குகின்றது இந்தக் கவிதை.

உள்ளத்துள் துள்ளி விளையாடும் உணர்ச்சிகளுக்கு ஒரு உருக் கொடுத்துக் காட்டும் ஒளி படைத்த ஒரு கவிதையாகும் இது.

**செல்வ :**

எல்லாச் செல்வமும் நிரம்பிய பெருமானே! செல்வத்துக்கு ஆதி தேவதை திருமகள். அந்தத் திருமகள், 'அகலகில்லேன் இறையும்' என்று, நாராயணன் மார்பில் உறைவதால்தான், திருமால் என்ற திருப்பெயருக்கு உரியவர் ஆனான் அந்த நாராயணன். நாராயணன் இராமனாக அவதரித்த போது, திருமகள் சீதையாக அவதாரம் செய்தாள்

அந்தச் சீதாப்பிராட்டி, இராமனைப் பிரிந்து சிறையிலிருக்கும் போது, இராமபிரான் செல்வனாவது எப்படி? சிறை இருக்கும் சீதை சீக்கிரத்தில் இராமபிரானை வந்துசேர்வது உறுதி என்பது அனுமனுக்குத் தெரியுமாதலால், இராமபிரானைச் 'செல்வ' என்று அழைத்தான் அனுமான்.

**ஒரு கணத்து இரண்டு கண்டேன்:**

ஒரு கணப் பொழுதில், ஒன்றற்கு ஒன்று மாறுபட்ட இரண்டு விதமான உணர்வுகளை நான் பார்த்தேன்.

எல்லாவிதமான உணர்வுகளுக்கும் இருப்பிடம் மனித உள்ளம்தான். உள்ளத்தில் ஒரு உணர்வு மேலோங்கி நிற்கும்போது மற்றையவைகள் அடங்கிவிடும். இன்பமும் ஒரு உணர்வு. துன்பமும் ஒரு உணர்வு. இவைகள் இரண்டும் ஒன்றுக்கு ஒன்று மாறுபாடு கொண்டவைகள். ஒன்று தோன்றும் போது, மற்றொன்றுக்கு அங்கு வேலை இல்லை, மாறுபட்ட இந்த இரண்டையும் ஒரே சமயத்தில் பிராட்டியிடம் கண்டேன் என்று அனுமன் கூறுகின்றான்.

இன்ப உணர்வு தோன்றும் போது, அதனுடைய தோற்றம், கண்களின் கடைக்கண் வழியாக, ஆனந்தக் கண்ணீராக வழிந்து இரு கன்னங்களையும் நனைத்து உடலைக் குளிர வைத்துவிடும்.

துன்ப உணர்வின் தோற்றம், அழுகை நீராக வெளிவந்து கண்களை குளமாக்கி, கண்களின் முற்பகுதி மூலமாக வழிந்து, மூக்கின் இருபக்கத்தையும் தொட்டுக் கொண்டு வந்து மார்பை நனைத்து உடலை வெப்பமாக்கி வைத்து விடும்.

உடலைக் குளிரவைத்தலும். உடலை வெப்பமாக்குதலும் ஆகிய வியத்தகு நிகழ்ச்சி ஒரே சமயத்தில் பிராட்டியிடம் நடந்தது எவ்வாறு என்பதை விளக்குகின்றான் அனுமன்.

இது சீதாப்பிராட்டிக்கு அப்படியே பொருந்துவதை உணரலாம் என்பது திரு. மகராஜன் விளக்கம்.

ஒன்றோடு ஒன்று மாறுபட்ட நிகழ்ச்சிகள் ஒரே சமயத்தில் நடந்த இந்த வியத்தகு. காட்சியை, ஆங்கிலக் கவிஞர் மகாகவி ஷேக்ஸ்பியர் தமது 'கிங்க்லியர்' நாடகத்தில் காட்டுவதை இங்கு ஒத்திட்டுப் பார்த்து மகிழலாம். லியர் பிரிட்டிஷ் நாட்டு மன்னன் கார்டிலியா, அரசனுடைய மூன்றாவது மகள். இவளது அன்பைப் புரிந்துகொள்ளாமல் அவளை வெறுத்த அரசன், இறுதிக் காலத்தில் துன்புற்ற நிலையில் தனது பெண்ணுக்கு ஒரு கடிதத்தை அனுப்பி வைக்கின்றான். அக்கடிதம் வரும்போது. அவளும் ஒரு துன்ப நிலையில்தான் இருந்தாள். தன் தந்தையிடமிருந்து வந்த கடிதத்தைப் பெற்றுப் படிக்கும் போது, அவள் தோற்றம் எப்படியிருந்தது என்பதை ஆங்கில மகாகவி சித்தரிக்கின்றார்.

படிக்கும் போது அவள் மென்மையான கன்னத்தின் வழியே ஒரு வளமான கண்ணீர்த்துளி அடிக்கடி உருண்டு வடியும். பார்க்கும்போது. அவள் தன் உணர்ச்சிக்கு அரசியாக இருந்தாள். ஆனால் அவள் உணர்ச்சியோ, கலகக்காரனைப் போல் கட்டு மீறி அவளுக்கு அரசனாக இருக்க முனைந்தது.

அவளது, குண அழகை எடுத்துக் காட்டும் முயற்சியிலே பொறுமையும் சோகமும் போட்டி போட்டன மழையும் வெயிலும் ஏககாலத்தில் அடிப்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவளுடைய புன்முறுவலும் அப்படியிருந்தன. இல்லை. அதைக் காட்டிலும் அழகாயிருந்தன. வைரங்களிலிருந்து முத்துக்கள் உதிர்ந்ததுபோல் அவள் கண்களிலிருந்து கண்ணீர் உதிர்ந்தது. கண்களில் தங்கியிருக்கும் விருந்தாளிகளை அறியாமல் அவளுடைய சிவந்த உதட்டிலே குறுமுறுவல்கள் களிப்போடு விளையாடிக் கொண்டிருந்தன. சுருங்கச் சொன்னால், தக்கவர்கள் துயரத்தை அனுபவிக்கும்போது, துயரத்துக்கே ஒரு ஆபூர்வமான பொலிவு ஏற்பட்டுவிடுகிறது; விரும்பத்தக்க அரிய பொருளாகி விடுகிறது துயரம்.

---

லியர் அரசன். தமிழாக்கம் திரு. எஸ். மகராஜன் பக்-122, 123

**ஒளிமணி ஆழி ஆன்ற திருமுலைத் தடத்து வைத்தாள்:**

விளங்குகின்ற இரத்தினம் பதித்த பொன் மோதிரத்தை, என் கையினின்றும் வாங்கி, சிறந்த தனது கொங்கைகளில் வைத்துக் கொண்டாள்.

இராமபிரான் திருப்பெயர் பதிக்கப்பட்ட மோதிரம் ஆகையால், அ த னை ப் பெற்றதும், பெருமானையே அடைந்து விட்டது போன்ற ஒரு இன்ப உணர்ச்சி மேலிட்டது பிராட்டிக்கு. அதனால் வாங்கிய மோதிரத்தைத் த ன து மார்பில் வைத்துக் கொண்டு விட்டாள். உடனே உணிர்ச்சி வேறு விதமாக மாறத் தொடங்கி விட்டது.

**வைத்தலும், நின்பால் விரகம் என்பதனின் வந்த வெங் கொழுந் தீயினால் வெந்து உருகியது:**

பொன் மோதிரத்தை மார்பில் வைத்துக் கொண்டதும், அது, உன்னிடத்திலிருந்துபிரிந்தது என்பதனால் உண்டாகிய வெப்பம் நிறைந்த செழித்த நெருப்பினால் வெந்து உருகி விட்டது.

பொன், சூடுபட்டால் உருகும் இயல்பினது. பிராட்டிக்கு, இராமபிரானைப் பிரிந்த பிரிவுத் துன்பம் உணர்வு மிகுதியாகத் தோன்றியதும் உடல் வெப்பமாகியது. அந்த வெப்பத்தில் பொன்னால் ஆன மோதிரம் உருகிப் போய் விட்டது.

உருகிப்போன மோதிரம். பிராட்டி, பிரிவாற்றாமைத் தாக்குதலால், எவ்வளவு உள்ளம் உறுகிப் போயிருக்கிறாள் என்பதைக் காட்டுகின்றது. துன்ப உணர்வு மோதிரத்தை உருக வைத்துவிட்டது.

**குளிர்ப்பு உள் ஊற உடனே ஆறிவலித்தது :**

பிறகு, மோ தி ர ம் உடம்பிற்பட்ட மகிழ்ச்சியினால், குளிர்ச்சி உடம்பில் மிகுகின்றது. அதனால் அப்பொழுதே அது தணிந்து இறுகி முன்புபோல் ஆகிவிட்டது.

இன்ப உணர்வு பெருகியதும் உடல் குளிர்ந்தது. அந்தக் குளிர்ச்சி, இளகிய பொன் மோதிரத்தை முன்பு போல் இறுக வைத்துவிட்டது.

மோதிரம் இளகுதலும் இறுகுதலும், பிராட்டியினுடைய துன்ப, இன்ப உணர்வுகளை வெளிப்படுத்துவன.

ஒன்றற்கு ஒன்று மாறுபட்ட இரண்டு உணர்வுகளின் வெளிப்பாட்டை, பிராட்டியின் திருமார்பைச் சேர்ந்த மோதிரம் உருகுதலின் மூலமும் இறுகுதலின் மூலமும் உணர்த்துகின்றான் அனுமான்.

பெற்றுக் கொண்ட மோதிரத்தை மேற்கொண்டு பிராட்டி என்ன செய்தாள் என்பதை அடுத்த கவிதையில் கூறுகின்றான் அனுமன்.

# 24. உயிர்ப்பு விண்டாள்

24 வாங்கிய ஆழி தன்னை
'வஞ்சர் ஊர் வந்ததாம்' என்று
ஆங்கு உயர் மழைக்கண் நீரால்,
ஆயிரம் கலசம் ஆட்டி,
ஏங்கினள் இருந்தது அல்லால்,
இயம்பலள்; எய்த்த மேனி,
வீங்கினள்; வியந்தது அல்லால்,
இமைத்திலள்; உயிர்ப்பு விண்டாள். (கம்-6049)

தூய்மை நிறைந்த ஒரு பொருள், எப்பொழுது தூய்மையை இழக்கிறது என்பதும், இழந்த தூய்மையை மறுபடியும் அந்தப் பொருளுக்குச் சேர்ப்பது எப்படி என்பதையும் இந்தக் கவிதையில் காணலாம்.

வாய் பேசிக் கொண்டிருப்பதும் கண் இமைத்துக் கொண்டிருப்பதும் உடலின் இயல்பு. பிராட்டியின் திருவாய் இப்போது பேச்சற்று இருக்கிறது; திருக்கண்கள் இமைக்காமல் திறந்தபடி இருக்கின்றன. திறக்க வேண்டிய வாய், மூடிக் கொண்டது: மூடவேண்டிய கண்கள் திறந்தபடியே (விழித்தபடியே) இருக்கின்றன. இயல்புக்கு மாறாக, பிராட்டியிடம் தான் கண்ட காட்சியை, தான் கண்டவண்ணமே, இராமபிரான் கருத்தில் பதியுமாறு நயமாகப் பேசுகின்றான் நாநலம் பெற்ற நல்லோனாகிய அனுமன்.

இயம்பலள், இமைத்திலள் என்ற இந்த இரண்டு சொற்களும், இந்தக் கவிதைக்கு இரு கண்களாய் அமைந்து, கவிதாதேவியின் திருமுகத்தைக் கவின்பெறச் செய்கின்றன.

இந்த இரண்டு சொற்களும், சீதா தேவியின் உள்ளத்து உணர்ச்சியை, இராமபிரானுக்குத் தெளிவாக்கிக் கொண்டிருக்கும் அனுமானுக்குப் பேருதவியாக உள்ளன.

ஏன் இயம்பலள்? (பேசவில்லை) ஏன் இமைத்திலள்? (கண்மூடவில்லை)என்பதைக் காரண காரியத்துடன் அனுமன் விளக்கிக்காட்டுவதை,இந்தக்கவிதை தனது உட்பொருளாகப் பெற்றுக்கொண்டுள்ளது.

இயம்பாமல் (பேசாமல்) இருந்ததற்குரிய காரணம் வருகிறது முதலில்.

வாங்கிய ஆழி தன்னை வஞ்சர் ஊர் வந்ததாம் என்று, பிராட்டி தனது கையில் வாங்கிய திருவாழியைப் பார்த்து, (மோதிரத்தை) இது, வஞ்சகர் நிறைந்துள்ள இந்த இலங்கை நகருக்கு வந்து தனது தூய்மையை இழந்து விட்டதே என்று எண்ணி.

'ஸ்ரீராம்' என்று மெய்ப் பெயர் பதிக்கப் பெற்ற இந்தக் கணை ஆழி,பொய்ம்மைக் குணங்களால் உருவான அரக்கர்கள் வாழும் இந்த ஊருக்கு வந்ததால், இதனுடைய தூய்மை போய்விட்டதே என்பது பிராட்டியின் திருவுள்ளக் கருத்து. உயர்ந்த ஒரு பொருள், தாழ்ந்த இடத்தைச் சேர்ந்தால், சேர்ந்த இடம், சேரப்பட்ட பொருளின் உயர்வை-மதிப்பை இழக்கச் செய்துவிடும். அதனால், உயர்வுக்குரிய - தூய்மை தவழ்தற்கு உரிய ஒரு பொருள், எந்த இடத்திற்குச் சென்று சேரவேண்டுமோ, அந்த இடம் தூய்மையாக்கப்பட்டிருக்க வேண்டும்.

இறைவன் தூய்மையானவன்: அமலன். அவன் வந்து சேர்ந்து தங்குமிடமாகிய இடமும் தூய்மையானதாக (மலம் அற்றதாக-குற்றம் இல்லாததாக) இருக்க வேண்டும். தனது உள்ளத்தை.இறைவன் தங்கும் இடமாக்க விரும்பிய பெரியாழ்வார், உள்ளத்தை இதற்கு முன்பு அழுக்காக்கி, தூய்மையைக் கொடுத்துக் கொண்டிருந்த தீவினைகளை விரட்டுகின்றார். இந்த வகையில் பத்துப் பாசுரங்கள் பாடியுள்ளார் ஆழ்வார் அவற்றுள் ஒன்று.

'மங்கிய வல்வினை நோய்காள்!
உமக்கும் ஓர் வல்வினை கண்டீர்,
இங்குப் புகேன்மின்! புகேன்மின்!
எளிதன்று கண்டீர் புகேன்மின்!
சிங்கப் பிரான்அவன் எம்மான்
சேரும் திருக்கோயில் கண்டீர்,
பங்கப் படாதுஉய்யப் போமின்!
பண்டு அன்று பட்டினம் காப்பே. (5. 2. 5.)

என்ற பாசுரப்பொருள், இங்கு சிந்திக்கத்தக்கதொன்றாகும். இராம நாமம் தாங்கிய தூய்மைக்கணை ஆழி. தூய்மையற்ற இலங்கைக்குள் வரும்முன்பு, இந்த இடத்தைத் தூய்மையாக்கியிருக்க வேண்டும். பெரியாழ்வார் தனது உள்ளத்தைத் தூய்மையாக்கியது போன்று, இலங்கையை யார் தூய்மை செய்வது? இனி தூய்மைபெறும், பிராட்டியின் மூலமாக.

**ஆங்கு உயர் மழைக்கண் நீரால் ஆயிரம் கலசம் ஆட்டி:**

அப்பொழுது, மிக்கமழை போன்ற ஆனந்தக் கண்ணீரைக் கொண்டு ஆயிரம் குடங்களால் திருமஞ்சனம் செய்து.

வஞ்சர் ஊர் வந்ததால், இந்த மணி ஆழி தூய்மை இழந்துவிட்டதே என்று எண்ணிய பிராட்டி, தனது ஆனந்தக் கண்ணீரால் அதற்குத் திருமஞ்சனம் செய்து: இழந்த தூய்மையை மீண்டும் பெறச்செய்தாள்.

மோதிரத்தைப்பெற்ற பிறகு பிராட்டியின் திருவுள்ளத்தில் தோன்றிய ஆனந்தம், பெருவெள்ளமாய் ஊற்றெடுத்து, கண்களில் கணக்கற்ற அளவில் வழிந்து கொண்டிருந்தது.கண்ணீர் ஆனந்தத்தால் வருவது,அது திருமஞ்சனம் செய்வதற்கு ஏற்ற தீர்த்தமாயிற்று.

அன்று,எம்பெருமான் திருஉலகு அளந்தருளிய காலத்தில் மேலுலகத்துக்கு நீட்டிய திருவடியைக் கண்டான் பிரம்ம தேவன் உடனே தனது கமண்டலத்து நீரால் அந்தத் திருவடிக்குத் திருமஞ்சனம் செய்து மகிழ்ந்தான்.

அதுபோல, இலங்கையில் எம்பெருமான் திருப்பெயர் தாங்கியதிருவாழி(மோதிரம்)வந்ததும். அதற்குத் திருமஞ்சனம் செய்து மகிழ்கின்றாள் பிராட்டி ஒரு வேறுபாடு; பிரம்மதேவன் திருமஞ்சனம் செய்த நீர் கமண்டலத்திலிருந்து வந்தது. இலங்கையில் செய்த திருமஞ்சன நீர், பிராட்டியின் கண்களிலிருந்து பெருகுவது கமண்டலத்து நீர், எம்பெருமான் திருவடியைச் சேர்ந்த பிறகு, அது கங்கா தீர்த்தமாகப் பெருகி, புனிதம் பெற்று விட்டது இலங்கையில் திருக்கணை ஆழிக்குச் செய்த திருமஞ்சன நீர், வரும் போதே, தீர்த்தமாக வந்து ஆழியைத் தூய்மையாக்கி, அதனைப் புனிதப்படுத்துகிறது. எம்பெருமான் திருப்பெயரைக் கண்டதும், உள்ளத்தில் தோன்றிய பேரானந்தத்தால் வெளிவருவதால், இதுவரும்போதே தீர்த்தமாகிவிட்டது. அதனால், மேலுலகத்து, திருவடித் திருமஞ்சனத்தைவிட. இலங்கையில் கற்பச் சோலையுள், புல்லினால் தொடுத்த சாலையில் திருவாழிக்குச் செய்த திருமஞ்சனம் உயர்வு பெற்றுவிடுகிறது.

மெய்ப்பெயர் தீட்டிய மோதிரத்துக்குத் திருமஞ்சனம் செய்த பிராட்டியின் நிலையை, கவிதையின் ஈற்றடிகள் இரண்டும் விளக்குகின்றன.

**ஏங்கினள், இருந்ததல்லால் இயம்பலன்:**

இரங்கிக் கொண்டிருந்தவளாய் வாளா இருந்தது அல்லாமல் வேறுஒன்றும் உரைக்க மாட்டாதவளாயினாள்.

பிராட்டியின் ஏக்கம், அவளை இயம்பவிடவில்லை. ஏக்கம் என்றால் என்ன? மனம், எதனைப் பெற்றால், நிறைவு செய்துகொள்ளலாம், என்று எண்ணுகின்றதோ, அது கிடைக்காத போது, உள்ளத்தில் நிகழுகின்ற ஒரு நிலைக்குத்தான் ஏக்கம் என்று பெயர். எண்ணிய பொருள் கிடைத்துவிட்டால் மனம் நிறைவு பெற்று அமைதியாகிவிடும் அப்பொழுது ஏக்கம் என்பது மனத்தை விட்டு அகன்று ஓடிவிடும்.

பிராட்டியின் ஏக்கம் என்ன? 'ஸ்ரீராம்' என்ற மெய்ப் பெயர் தாங்கிய மோதிரம், அதனை அணிந்திருந்த தனது கணவனாகிய இராமபிரானது திருக்கரத்தைப் பிராட்டிக்கு நினைவூட்டிவிட்டது. அதனால். இந்தத் திருவாழி அணிந்த திருக்கரம் தன்னை அணைத்துக் கொள்ளவேண்டும் என்று பிராட்டியின் திருவுள்ளம் எண்ணமிடத் தொடங்கிவிட்டது. திருக்கரத்தின் அணைப்பை எண்ணி எண்ணி ஏங்குகிறது பிராட்டியின் திருவுள்ளம். இந்த ஏக்கத்தை எப்படி வெளியில் சொல்வது?

இந்த மணி ஆழியைக் காண்பதற்கு முன்பு, பிராட்டிக்கு இந்த ஏக்கம் இல்லை. இம்மணி ஆழி, தான்காண இருந்தது மட்டுமல்ல. இதனை அணிந்திருந்த இராமபிரானது திருக் கரத்தையும் பிராட்டிக்கு நினைவுபடுத்துவதால். பிராட்டி அளவு கடந்த மகிழ்ச்சிக்கு உள்ளானாள். அந்த மகிழ்ச்சிப் பெருக்கினாலும் எதுவும் பேசமுடியாதவளாகக் காணப் பட்டாள் பிராட்டி.

'மனம் மகிழ்ச்சியில் மூழ்கினால், வாயில் பேச்சு வராது' என்ற உள்ளத்தின் தத்துவத்தை ஏற்கனவே அறிந்தவள் சீதாப்பிராட்டி.

மிதிலை நகரில். ஒரு நிகழ்ச்சி. சீதாப்பிராட்டியின் திரு மணத்துக்குத் தடையாக இருந்த சிவதனுசு இராமபிரானால் முறிக்கப்பெற்றது. இந்த நற்செய்தியை நீலமாலை என்ற தோழி சீதாப்பிராட்டியிடம் சொல்வதற்கு ஓடி வருகின்றாள். திருமண நற்செய்தியைத் தாங்கிக்கொண்டு வரும் 'நெடுந் தடங்கிடந்த கண் நீலமாலைக்கு' உள்ளத்தில் எழுந்தோடி வரும் மகிழ்ச்சிப் பெருக்கைத் தாங்க முடியவில்லை, மகிழ்ச்சி யினால்,

'வந்து அடி வணங்கிலள்; வழங்கும் ஓதையள்;
அந்தம் இல் உவகையள்; ஆடிப் பாடினள்;
ஆனால், பேச்சு வரவில்லை. பிறகு, சீதை,
'சிந்தையுள் மகிழ்ச்சியும், புகுந்த செய்தியும்,
சுந்தரி! சொல்' என, தொழுது சொல்லுவாள்.

'கருங்கடல் பள்ளியுள் கலவி நீங்கிப்போய், அயோத்தியிலும், மிதிலையிலுமாகப் பிரிந்தவர்கள்' இனி, கூடப்போகும் நற்செய்தியைச் சொல்லவந்த தோழி நீலமாலைக்கு, மகிழ்ச்சியினால், சொல்வரவில்லை. ஆடுதலும் பாடுதலும் நடந்தன. 'வந்த செய்தியைச் சொல்' என்று சீதை கேட்ட பிறகுதான், நீல மாலையின் வாய், நற்செய்தியைச் சொல்வதற்குத்திறந்தது.

இப்போது, பர்ணக சாலையினின்றும் நீங்கிப்போய் கிட்கிந்தை மலையிலும், இலங்கைக்கடி நகரிலுமாகப் பிரிந்து கிடக்கின்றவர்கள் ஒன்று சேர்வதற்குரிய நற்செய்தியைத் தாங்கி வந்த அனுமன். அவனுக்கு முன்னால், மெய்ப்பெயர் தீட்டிய மோதிரத்தைக் கண்டதும் வந்த மகிழ்ச்சிப் பெருக்கால், சீதாப் பிராட்டியின் திருவாய் திறக்கவேயில்லை.

பிராட்டிக்குப் பேச்சுவராமல் இருந்ததற்கு இரண்டு காரணம். ஒன்று மோதிரத்தைக் கண்டதும் ஏற்பட்ட மகிழ்ச்சிப் பெருக்கு. மற்றொன்று, இந்தக் கணை ஆழியை அணிந்த இராமபிரானது திருக்கரத்தின் அரவணைப்பைப் பற்றிய ஏக்கம். இந்த ஏக்கத்தை வெளியிடும் உரிமை வாய்க்கு இப்போது கிடைக்குமா? இது ஏற்ற இடமும் அல்ல' காலமும் அல்ல. அதனால், ஏங்கி இருந்தாளே அன்றி, இயம்புதல் (பேசுதல்) செய்யவில்லை பிராட்டி.

ஆனால் தமது திருவுள்ளத்தில் அடங்கிக் கிடக்கும் ஏக்கத்தையும், பெருகிவழியும் மகிழ்ச்சி வெள்ளத்தையும் வேறுஒரு வகையில் புலப்படுத்திவிட்டாள் பிராட்டி.

**எய்த்தமேனி வீங்கினள்: வியந்தது அல்லால் இமைத்திலள்:**

இளைத்திருந்த திருமேனி பூர்த்தவளாயினாள்: மோதிரத்தைக்கண்டு வியந்து நின்றாளே அன்றி, திறந்த கண்ணை மூடினாள் இல்லை.

வீங்கிய (பூர்த்த) திருமேனி, பிராட்டியின் திருவுள்ளத்து மகிழ்ச்சிக்கு அடையாளம். இமையாதகண், பிராட்டியின் ஏக்கத்துக்கு அடையாளம்.

உள்ளத்தில் மகிழ்ச்சி புகுந்தால், அந்த உள்ளத்தைத் தாங்கியிருக்கும் உடல், பெருக்கத்தை அடைவது இயல்பு 'மென் மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்திருந்த' சீதாப்பிராட்டி, 'ஸ்ரீராம்' என்ற திருப்பெயரைக் கண்டதும் தோன்றிய உவகைப் பெருக்கால், இவளது திருமேனியும் வீங்குவது (பூரிப்பது) இயற்கைக்கு ஒத்ததாயிற்று.

'திருப்பெயர் தாங்கிய மோதிரம். வலிந்து பிரிந்த நம்மைச் சேர்ப்பதற்கு, நாம் இருக்கும் இடத்திற்கே வந்து விட்டதே அந்தப்பெருமான் தன் கையை விட்டுப்பிரியாத மோதிரத்தைப் பிரித்து, பிரிந்திருக்கும் நம்மைத் தம்மோடு சேர்ப்பித்தற்காக இங்கு அதனை அனுப்பி வைத்து விட்டாரே? என்ன கருணை! என்ன அருட்பெருக்கு' என்று பிராட்டி வியப்போடு மோதிரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கின்றாள்.

இராமபிரான், பிராட்டியின் பால் கொண்ட அன்புக்கும் அருளுக்கும் எல்லையிலாக் கருணைக்கும் அடையாளப் பொருளாக மோதிரத்தைக் காண்கின்றாள் பிராட்டி அதனால்தான் 'இவ்வளவு அன்பா? இவ்வளவு அருளா' என்ற வியப்பினால், கண்கள் மூடாது திறந்த படியே உள்ளன.

'கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்றபடியே, கணை ஆழி ஒன்றையே, கற்பரசி கண்டு கொண்டிருக்கின்றாள் இப்பொழுது. மோதிரம், வஞ்சர் ஊருக்கு எப்படி வந்தது என்ற வியப்பு, கண்ணை இமைக்கச் செய்யாததில் வியப்பு இல்லை.

கண் இமையாமைக்கு மற்றொரு காரணம் திருவுள்ளத்து ஏக்கம். 'இந்த மெய்ப்பெயர் தாங்கிய மோதிரம் அணிந்த அலகுத்திருக்கரம், எப்பொழுது நம்மை அரவணைக்குமோ' என்ற ஏக்கம். இந்தஏக்கம் தீரும் காலம்எது? யாருக்குத் தெரியும்? அதனால், 'அந்த ஏக்கம் தீர, இந்தக்கணை ஆழியையே கண்டு கொண்டிருப்போம்' என்ற எண்ணத்தோடு இமைக்காமல் மோதிரத்தைக் கண்டு கொண்டேயிருக்கின்றாள் பிராட்டி.

இந்த ஏக்கத்தால் பிராட்டி இயம்பலள்: இமைத்திலள் ஏக்கம், பிராட்டியின் திருவாயைத் திறக்க விடவில்லை:திறந்த கண்ணை மூட விடவில்லை. இமைக்காததற்குக் காரணம் இரண்டு: ஒன்று வியப்பு. மற்றொன்று ஏக்கம்.

மகிழ்ச்சியால், நிகழ்ந்தது இரண்டு: ஒன்று பேச்சற்றது: மற்றொன்று திருமேனி வீங்கியது (பூரித்தது)

இவ்வளவு கருத்துக்களையும் அடக்கிவைத்து, அனுமன், இதனைச் சுருக்கமாகச் சொல்வதற்குக் காரணம், அந்த மோதிரத்தைப் பெற்றபோது, பிராட்டியின் மெய்ப்பாடுகளை நேரில் கண்டதது தான்.

'வாங்கினள்; முலைக் குவையில் வைத்தனள்; சிரத்தால்,
தாங்கினள்; மலர்க் கண்மிசை ஒற்றினள்; தடந்தோள்
வீங்கினள்; மெலிந்தனள், குளிர்ந்தனள்; வெதுப்பொடு
ஏங்கினள் : உயிர்த்தனள் : இது இன்னது எனல் ஆமே?'
(கம்: 5293)

அனுமன் கொடுத்த மோதிரத்தை வாங்கியதும், பிராட்டியிடம் அவன் கண்ட காட்சி இது. இது இன்னது என்பதை, 'இயம் பலள்' 'இமைத்திலள்' என்ற எதிர் மறைச் சொற்களின் மூலமாக, பிராட்டியின் உடன்பாட்டை இராமபிரானுக்கு உணர்த்தி விட்டான் சொல் வல்லான்.

ஏக்கமும் மகிழ்ச்சியும் அழுத்திய உள்ளம் ஒரு பெரு மூச்சாக வெளிவந்தது என்பதை 'உயிர்ப்பு விண்டாள்' என்று சொல்லிக் காட்டினன் சொற் செல்வன்.

உள்ளம் இயல்பான நிலையில் இருக்கும் போது, உள்ளிருந்து வரும் மூச்சுக்காற்று சாதாரணமாக வந்து கொண்டிருக்கும் ஏதேனும் ஒன்றால் அழுத்தம் ஏற்படும் போது, மூச்சு சிறிது நேரம் அடங்கிவிடும் பிறகு அடங்கியதும் சேர்ந்து பெரிதாக வெளிவரும். அப்படி இப்பொழுது, சீதாப் பிராட்டி சிறிது நேரம் மூச்சற்று, பிறகு பெரு மூச்சு விட்டாள்.

எங்கள் 'தனி முதல்வனை எம்பெருமான் தன்னை என்று கொலோ கண் குளிரக் காணும் நாளே' என்று ஏங்கும் ஏக்கத்தை,பிராட்டியின் கண்களின் வழியாகக் கண்ட அனுமன் அந்த ஏக்கம் தீரும் வகையில் பிராட்டியிடம்தான் கூறியதை இராமபிரானிடம் சொல்கின்றான் அனுமான் அடுத்த கவிதையில்.

# 25. உயிர்ப்பு வந்தாள்

25 அன்னவர்க்கு, அடியனேன், நிற்பிரிந்த பின்
அடுத்த எல்லாம்,
சொல்முறை அறியச் சொல்லி,
'தோகை! நீ இருந்த சூழல்
இன்னது என்று அறிகிலாமே,
இத்தனை தாழ்த்தது' என்றே
மன்ன! நின் வருத்தப் பாடும்
உணர்த்தினென்; உயிர்ப்பு வந்தாள்(கம்: 6050)

சீதையை,சிறையிலிருந்து மீட்பதற்கு காலம் நீட்டித்ததன் காரணத்தை,அனுமன் பிராட்டிக்கு விளக்குவதாக அமைந்தது இந்தக் கவிதை.

**அன்னவர்க்கு :**

உயிர்ப்பு விண்டவளாய சீதாப்பிராட்டிக்கு மோதிரத்தை கண்ட மகிழ்ச்சியாலும் ஏக்கத்தாலும், பேச்சும் மூச்சும் அற்றவளாக இருந்தாள் சீதாதேவி.

அடியனேன், நிற் பிரிந்தபின் அடுத்த எல்லாம் சொல் முறை அறியச் சொல்லி:

அடியவனாகிய நான், நின்னைப் பிரிந்த பிறகு நடந்த செய்திகளை எல்லாம் சொல்லும் முறையால் பிராட்டி அறியும் படிச்சொல்லி.

சீதாப்பிராட்டி, இராமபிரானை விட்டுப் பிரிந்த பின்பு என்ன என்ன நிகழ்ச்சிகள் நடந்தனவோ அவைகளை எல்லாம் வரிசையாகச் சொன்னான் அனுமன் அந்த நிகழ்ச்சிகள் முழுவதையும் பிராட்டி நன்றாக அறிந்து கொண்டு விட்டாள்.

சீதாதேவியைப் பிரிந்த பிறகு இராமபிரான் தன்னுடைய தம்பி இலக்குவனுடன் கிட்கிந்தை மலைக்கு வந்ததும், சுக்கிரீவனுடன் நட்புக் கொண்டதும், வாலியைக் கொன்றதும், சுக்கிரீவனுக்கு முடிசூட்டியதும், வானரப் படைகளைத்திரட்டி வைத்ததும், தன்னைத் தூதுவனாக அனுப்பி வைத்ததும் அனுமன் கூறிய செய்திகள் இதனைப் பிராட்டி நன்றாகத் தெரிந்து கொண்டு விட்டாள். அதற்குப்பிறகு, பிராட்டியிடம் சொன்னதை, அனுமன் இராமபிரானிடம் கூறுகின்றான்.

'தோகை! நீ இருந்த சூழல் இன்னது என்று அறிகிலாமே இத்தனை தாழ்த்தது.

'மயில் போன்ற சாயல் உடையவளே! நீ இருந்த இடம், இன்ன இடத்தது என்று தெரியாததனாலேயே இவ்வளவு காலம் நீட்டித்தது.

இராமபிரான் தன்னைச் சிறையினின்றும் மீட்பதற்கு, இதுவரை வராமல் இருந்ததற்குப் பலப்பல காரணங்களை எண்ணி எண்ணி ஏங்கிக்கொண்டிருந்தாள்.பிராட்டி நினைத்த காரணம் எதுவும் இல்லை. தான் இருக்கும்இடம், எந்தப்பகுதியைச் சார்ந்தது என்பதை, இராமபிரான் அறிந்து கொள்ள முடியாமல் இருந்ததே இத்தனைக்கால நீட்டிப்புக்குக் காரணம் என்பதை அனுமன் சொல்ல, அதனைக் கேட்டு பிராட்டி, உண்மையை உணர்ந்து கொண்டாள்.

இந்த உண்மையைப்பிராட்டி உணர்ந்து கொண்டபிறகு அனுமன் அவளுக்குச் சொன்னதை, இராமபிரானிடம் கூறு கின்றான் அனுமான்.

**மன்ன! நின் வருத்தப் பாடும் உணர்த்தினென் :**

தலைவனே! நீ பிராட்டியைப் பிரிந்து வருத்தப்படும் தன்மையையும், சீ தா தே வி உணர்ந்து கொள்ளுமாறு தெளிவாக எடுத்துச் சொன்னேன்.

இந்தச் செய்திகளை எல்லாம் கேட்டறிந்த பிறகு.பிராட்டி 'உயிர்ப்பு வந்தாள்' உயிர் நீங்காதிருக்கப் பெற்றாள் என்று அனுமன் கூறினன்.

அனுமன் கூறிய செய்திகளைக்கேட்ட பிராட்டி இராம பிரானைக் கண் குளிரக்காணும் காலம் விரைவில் கிட்டிவிடும் என்ற நம்பிக்கையுடன் ஏக்கம் நீங்கப்பெற்று, இதுவரை உயிர்ப்பு விண்டவளாக இருந்த பிராட்டி, இப்போது, தன் பிராணன் வரப் பெற்றவளாகக் காட்சியளித்தாள்.

உயிர்ப்பு விண்டவளாக ஆனபோது. இயம்பலளாக (பேச்சற்றவளாக) இருந்த பிராட்டி, உயிர்ப்பு வந்தவளாக ஆனஉடன், அனுமனிடம் பேசத் தொடங்கிவிட்டாள். அந்தப் பேச்சை அனுமன் இராமபிரானிடம் சொல்கின்றான். அந்தச்செய்தி அடுத்த கவிதையில் வருகின்றது.

# 26. திங்கள் ஒன்று இருப்பன்

26 இங்குஉள தன்மை எல்லாம்
இயைபுளி இயையக் கேட்டாள்;
அங்குஉள தன்மை எல்லாம்
அடியனேற்கு அறியச் சொன்னாள்:
'திங்கள்ஒன்று இருப்பென் இன்னே:
திருஉளம் தீர்ந்த பின்னை,
மங்குவென் உயிரோடு' என்று, உன்
மலரடி சென்னி வைத்தாள். (கம்-6051)

சிறையிருந்த செல்வி, செவியாரக் கேட்டதைப் பற்றியும், வாயாரச் சொன்னதைப் பற்றியும், தெரிவிக்கின்றது இந்தக் கவிதை.

**இங்குஉள தன்மை எல்லாம் இயைபுளி இயையக் கேட்டாள்:**

இவ்விடத்தில் நடந்த நிகழ்ச்சிகள் அத்தனையையும், அதன் தன்மைகளையும் நிகழ்ந்த வரிசைப்படி பொருந்தக் கேட்டாள்.

சிறையில் இருந்த பிராட்டிக்கு, வெளியில் நடந்த செய்தி எதுவும் தெரியாது. சீதை, இராமபிரானை விட்டுப் பிரிந்ததிலிருந்து. அனுமன் தூதுவனாக இங்குவந்த காலம் வரை நடந்த நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் வரிசைப்படுத்தி,

முறையாகச் சொன்னான். அவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்த சீதாதேவி, ஒரு வியப்பான உள்ளத்தை உடையவளானாள். பிராட்டி, 'துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள்' என்று கவிச்சக்கரவர்த்தியால் குறிப்பிடப் படுபவள் ஆகின்றாள்.

பிராட்டியின் திருவுள்ளம், இப்போது, இரண்டுவிதமான உணர்வுகளைச் சுமக்க வேண்டிய நிலைக்கு உள்ளாகிவிட்டது எது சுமை? வேண்டாத ஒன்றை ஏற்கும்போதுதான், அது சுமையாக-பாரமாகஇருக்கும்.அதுவே வேண்டப்படும் ஒன்றாக இருக்குமானால், அது சுமையாக இருக்காது: சுகம் தருவதாக இருக்கும். தாய்க்குக் குழந்தை பாரமா?-சுமையா? அதுவே சுகம் தருவதாக அமைவது எதனால்? அன்புக்குரிய ஒன்றாக தாய் வேண்டப்படுவதால், குழந்தை சுமையாக இல்லை.

இங்கு சீதாப்பிராட்டியின் திருவுள்ளம், எதைச் சுமக் கின்றது? துன்பத்தையும் உவகையையும்.

'ஆரியன் (இராமபிரான்) வன் பொறை நெஞ்சினனாய் வருத்தத்தோடு உள்ளான்' என்று அனுமான் கூறிய செய்தி, பிராட்டிக்கு முதலில் துன்பத்தைத் தந்தது இந்தத் துன்பம் வேண்டாத ஒன்று. ஆகையால்,அது உள்ளத்துக்குச் சுமையாக இருந்தது.

பிறகு, 'அப்பெருமான், சீதையைப் பிரிந்த பிரிவாற்றாமை யால் ஏற்பட்ட துன்பத்தைத் தாங்க இயலாதவனாக உள்ளான்' என்று அனுமன், இராமபிரானைப் பற்றிய செய்தி யாகச் சொன்னான். இதனை நினைத்துப் பார்க்கின்றாள் பிராட்டி அந்நினைவு, தனது நாயகனுக்கு பிரிவு என்பது எப்பொழுது துயரம் தருவதாக இருக்கிறதோ, அப்பொழுதே அந்தப் பிரிவுத் துயரைப் போக்கிக் கொள்வதற்குத் தன்னை மீட்பதற்கு நிச்சயம் வருவான்' என்ற உறுதியைத் தோற்று வித்தது. அதனால், உவகை கொண்டாள் பிராட்டி. மீட்கும் பணி,உடனே மேற்கொள்ளப்படாததால் உவகையும் உள்ளத் துக்குச் சுமையாக ஆயிற்று.

இந்தச் சுமையைப் பிராட்டி எப்படி இறக்கிக் கொண்டாள். தன் செவியின் வழி புகுந்த செய்தியைச் சுமையாகக் கொண்ட பிராட்டி, அந்தச் சுமையை, தனது திருவாய் வழியாக இறக்கிவைத்துக் கொண்டாள். எப்படி?

**அங்குள தன்மை எல்லாம் அடியனேற்கு அறியச் சொன்னாள்:**

அவ்விடத்தில் உள்ள தன்மைகளை எல்லாம், அடியேனுக்குத் தெரியச் சொன்னாள். 'நான் தெரிந்துகொள்ளும் படியாகப் பிராட்டி சொன்னதில், பிராட்டியின் மன உறுதிப் பாட்டைக் கண்டேன்' என்ற தன் கருத்தைத் 'தெரியச் சொன்னாள்' என்ற தொடரில் அமைத்துக் காட்டுகின்றான் காலம் ஓர் மூன்றும் வல்லான். மூன்று காலத்து வரலாறுகளையும் அறியும் ஆற்றலுடையவன் அனுமன்.

அதனால், அங்குள தன்மையை பிராட்டி சொல்லிக் கொண்டிருக்கும் போதே, அதன் உட்பொருளை அறிந்து கொண்டுவிட்டான் அனுமான். பிராட்டியின் திருவுள்ளத்துப் பதிந்திருந்த எண்ணத்தை பிராட்டி தன் திருவாயால் சொல்லக் கேட்டவன் அனுமன்.

**'பொன்பிறங்கல் இலங்கை, பொருந்தலர்**
**எற்பு மால்வரை ஆக்கியது இல்லெனின்,**
**இற்பிறப்பும், ஒழுக்கமும், இழுக்கம் இல்**
**கற்பும், யான்பிறர்க்கு எங்ஙனம் காட்டுகேன்.'** (5362)

(பொன்மயமான திரிகூடமலை என்னும் இலங்கை நகர் பகைவர்களாகிய அரக்கரது பெரிய எலும்பு மலையாக ஆக்கப்பட்டது இல்லையென்றால் எனது உயர் குடிப் பிறப்பையும், நன்னடக்கையையும், தவறுதல் இல்லாத என்னுடைய கற்பையும், அயலவர்க்கு எவ்வாறு காண்பிப்பேன்) (பிறங்கல்-மலை:) பொருந்தலர்-பகைவர்: எற்பு-எலும்பு: மால்வரை-பெரியமலை: இழுக்கம்-தவறு.)

தனது, இற்பிறப்பு ஒழுக்கம், இழுக்கம் இல் கற்பு, ஆகிய குணங்கள் பிறரால் அறியப்பட வேண்டுமானால், இந்தப் பொன்மலை(இலங்கை)அரக்கரது எலும்பு மலையாக, மாற்றப் படவேண்டும். அந்த மாற்றத்தை ஏற்படுத்தக் கூடிய ஆற்றல் பெற்றவர் தனது நாயகனார் ஒருவர் மட்டுமே என்ற நம்பிக் கையை வெளியிடுவதன் மூலம், தனது உள்ளச் சுமையைச் சிறிது குறைத்துக்கொண்டாள் பிராட்டி.

**திங்கள் ஒன்று இருப்பென் இன்னே :**
ஒரு மாத காலம் இந்தச் சிறையில் இங்கே தங்கியிருப்பேன்.

இராமபிரான் இங்கு வந்து, தனது வில்லாற்றல் மூலம், இலங்கை மலையை; அரக்கர்களது எலும்பு மலையாக ஆக்கி என்னை மீட்டுக்கொண்டு சென்று விடுவார் என்று நம்புகின் றேன் இந்த நம்பிக்கை இன்னும் ஒரு மாத கால அளவுக்கு எனது உள்ளத்தில் தளராது நிற்கும் இந்தக் கால அளவு கடந்தால், நம்பிக்கை உள்ளத்தினின்றும் நகரும்: உயிரும் உடலினின்றும் நகரும். இது உறுதி.

**"இன்னம் ஈண்டுஒரு திங்கள் இருப்பல்யான்**
**நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியோய்"**
**பின்னை ஆவி பிடிக்கின்றிலேன்; அந்த**
**மன்னன் ஆணை இதனை மனக்கொள் நீ'**

இவ்வாறு பிராட்டி, அசோகவனத்தில் கூறியிருந்ததை நினைவு படுத்திக்கொண்ட அனுமன்,

**திருவுளந் தீர்ந்த பின்னை மங்குவென் உயிரோடு:**
என்று பிராட்டி சொல்லியதை அப்படியே சொல்கின்றான் இராமபிரானிடம்.

---

ஈண்டு-இங்கு : திங்கள்-மாதம் : இருப்பல்-இருப்பேன் : பகர்ந்தது-சொன்னது: ஆவி-உயிர்: ஆணை-சான்று(சத்தியம்)

அதற்குள் இங்குவந்து என்னை அழைத்துப்போக இராமபிரானுக்கு மனம் வராது போனால், அதற்குப் பிறகு எனது உயிரை இழப்பேன்.

எந்தக் காரியத்தையும் செய்து முடிப்பதற்கு, கால இடைவெளி வேண்டும். பிராட்டி, பெருமான்தான் நினைத்த காரியத்தைச் சரியாக நிறைவேற்றுவதற்கு, ஒருமாத இடைவெளி கொடுக்கின்றாள். 'இந்தக் காலம் கடப்பதற்கு முன், தான் சிறையை விட்டுக் கடந்துவிடவேண்டும் என்பது பிராட்டியின் திருவுள்ளக் கருத்து' என்பதை அனுமன் இந்தத் தொடரின் மூலம் குறிப்பிக்கின்றான்.

**என்று, உன் மலரடி சென்னி வைத்தாள்:**

என்று சொல்லிவிட்டு, உனது மலர் போன்ற மென்மையான திருவடியைத் தலைமேல் தரித்துக் கொண்டாள். நீ இருக்கும் இந்தத் திசை நோக்கித் தெண்டனிட்டாள்.

பிராட்டி, இராமபிரானைத் தெய்வமாகக் கருதுவதால் தான், மலரடி சென்னிவைத்தாள் என்று சொன்னான் அனுமான்.

இராமபிரான் இருக்கும் திசை நோக்கித் தொழுத சீதாப் பிராட்டி,அதற்குப் பிறகு என்ன செய்தாள் என்பதை அனுமன் தெளிவாக்குகின்றான் அடுத்த கவிதையில்.

# 27. மாமணிக்கு அரசு

27 ‘வைத்தபின், துகிலின் வைத்த
மாமணிக்கு அரசை வாங்கி,
கைத்தலத்து இனிதின் ஈந்தாள்:
தாமரைக் கண்கள் ஆர,
வித்தக! காண்டி;’ என்று
கொடுத்தனன்-வேத நல்நூல்
உய்த்துள காலம் எல்லாம்
புகழொடும் ஒக்க நிற்பான் (6052)

இராமபிரான் தனது அடையாளப் பொருளாக மோதிரம் கொடுத்தனுப்பியது போன்று, சீதாப்பிராட்டி தனது அடையாளப் பொருளாகக் கொடுத்தது என்ன என்பதையும் அதை இராமபிரானிடம் கொடுக்கும்போது என்ன சொல்லிக்கொடுத்தான் என்பதையும் அப்படிக் கொடுத்தவன் யார்? என்பதையும் தெரிவிக்கிறது இந்தக் கவிதை.

**வைத்தபின் :**

இராமபிரானது மலரடியைச் சென்னியில் வைத்த பிறகு.

சீதாப்பிராட்டியின் திருமுடி (சென்னி) இராமபிரானது திருவடியை ஏற்றுக் கொண்டு விட்டது. திருவடி சேர்ந்த திருமுடி அழகு பெறுகிறது. அந்தத்திருமுடியை அழகு செய்வதற்காக வைக்கப்பட்டிருக்கின்ற ஒன்றுக்கு, இனி வேலை இல்லை. ஒன்றை(திருவடி)வைத்துக்கொண்டாள்: ஏற்கனவே

வைத்துக் கொண்டிருந்த ஒன்றைக் கொடுக்கும் எண்ணத்தினளானாள் பிராட்டி.

**துகிலின் வைத்த மாமணிக்கு அரசை வாங்கி :**

தனது ஆடையில் முடித்து வைத்திருந்த சிறந்த இரத்தினங்களுக்கெல்லாம் தலைமையாக விளங்கும் சூடாமணியை எடுத்து. (வாங்கி-எடுத்து)

'சூடாமணி' தலையில் அணிந்து கொள்ளும் ஒரு ஆபரணம் சூடா-சூடை: தலை. மணி-பொன்னில் இ ர த் தி ன ம் (மணி) பதித்துச் செய்யப்பட்டதொரு ஆபரணம் பெண்கள் அணிந்து கொள்ளும் அணிகலன்களுள் சிறந்ததொன்றாகக் கருதப்படுவது.

இந்தச் சூடாமணி. பிராட்டிக்கு, தனது தந்தை சனக மன்னனால் திருமணப் பரிசாக அளிக்கப்பட்டது: தசரத சக்கரவர்த்தியால் பாராட்டப்பெற்றது; இராமபிரானால் நன்கு மதிக்கப்பெற்றது. மற்றைய ஆபரணங்களை எல்லாம் துணியில் கட்டி கிட்கிந்தையில் போடும் போது இதை மட்டும், துணியில் முடிந்து வைத்திருந்தாள் ஏன், இது தவிர மற்றைய அணி கலன்கள். அத்திரி மகரிஷியின் தர்மபத்தினி அனுசூயையால் கொடுக்கப் பட்டவைகள் இந்தச் சூடாமணி மட்டும் தந்தையாரால் கொடுக்கப்பட்டு, மாமனாரால் மதிக்கப்பட்டு, தனது நாயகனால், பா ரா ட் ட ப் ப ட் டு ம் இருப்பதனால்,இதன் சிறப்பைக் கருதி, இதனை, தனது ஆடையில் முடித்து வைத்திருந்தாள் பிராட்டி.

இது, மாமணிக்கு அரசாக விளங்குவதால் தலைமை அணியாகிறது: தலையணியாகவும் ஆகிறது.

**கைத்தலத்து இனிதின் ஈந்தாள் :**

எனது கையில் இனிமையாகக் கொடுத்தாள். தலையில் இருக்கவேண்டிய இந்தச் சூடாமணி இதுவரை சீதாப் பிராட்டியின் ஆடையில் இருந்தது. அனுமனது

கையைச் சேர்ந்தபிறகு, இராமபிரானது திருக்கண் பார்வைக்கு உரித்தாக்கப் பெறுகிறது. பிராட்டியின் ஆடைக்குள் அடங்கிக்கிடந்த மாமணிக்கு அரசு, அடை.யாளப் பொருளாக, அனுமனது கைத்தலத்தில் ஏறி அமர்ந்து, உலாவந்து, இராமபிரான் திருவுள்ளத்தை மகிழவைக்கப் போவதால், இது, இனிமை உடையதாகின்றது.

**'சூடையின்மணி கண்மணி ஒப்பது; தொல்நாள்**
**ஆடை யின்கண் இருந்தது, பேர்அடை யாளம்;**
**நாடி வந்துஎனது இன்உயிர் நல்கினை நல்லோய்!**
**கோடி' என்று கொடுத்தனள் மெய்ப்புகழ் கொண்டாள்.**
(கம்-5427)

என்று, அசோகவனத்தில் சீதாப்பிராட்டி, சொல்லிக் கொண்டு கொடுத்ததை நினைவு படுத்திக்கொண்டு, அனுமன், இப்போது இராமபிரானுக்கு முன்னால், 'கைத்தலத்து இனிதின் ஈந்தாள்' என்று சொல்கின்றான். பிராட்டி. தன் கைத்தலத்தில் ஈந்ததை, பெருமானைக் காணச்செய்கின்றான் அனுமான். எப்படி?

**வித்தக! தாமரைக் கண்களால் ஆரகாண்டி :**

ஞானத்தின் திருவுருவாய் விளங்கும் பெருமானே! உனது தாமரை போன்ற திருக்கண்களால், பூரணமாக மகிழுமாறு காண்பாய்.

தான் கண்டு வந்தது சீதாப்பிராட்டிதான், என்பதை உறுதிப் படுத்தும் வகையில், பிராட்டி தந்திருந்த சூடாமணியைக் காணுமாறு இராமபிரானை வேண்டுகின்றான் அனுமான்.

அந்தச் சூடாமணி எப்படிப் பட்டது என்பதை, பிராட்டி அசோக வனத்தில் காட்ட, கண்டவன் அனுமன். அதனால் இங்கு, பெருமானைக் காணுமாறு வேண்டுகின்றாள். அவன்.

---

சூடை-தலை: (முடி) நாடி-தேடி: நல்கினை-கொடுத்தாய்: கோடி-பெற்றுக்கொள்: மெய்ப்புகழ்-உண்மையான (நிலையான) புகழ்.

'கூந்தல்மென் மழைகொள் முதில்மேல் எழுகோளின்
வேந்தன் அன்னது மெல்லியல்தன் திருமேனி
சேந்தது, அந்தம் இல் சேவகன் சேவடிஎன்னக்
காந்துகின்றது, காட்டினள்; மாருதி கண்டான் (5426)

கூந்தலைப் போலக் கருமையுடைய மேகக்கூட்டத்தின் மேல் எழுகின்ற கோள்களின் மன்னனாகிய சூரியனை ஒத்திருப்பது பிராட்டியின் திருமேனியைப் போலச் செந்நிறம் பெற்றது: முடிவு இல்லாத இராகவன் திருவடிகளைப் போல ஒளி விடுவது: இதனைப் பிராட்டி காட்டினாள்: அனுமன் கண்டான்.

சூடாமணி, பிராட்டியின் திருமேனியையும் பெருமானது திருவடியையும் நினைவுபடுத்துவது. அதேசமயம், உலக இருளை அகற்றக் கூடிய சூரியனையும் ஒத்துள்ளது, இந்த மூன்று இயல்புகளையும் கொண்ட சூடாமணியை, பிராட்டி' காட்டினாள் மாருதி கண்டான்.' காட்டுதலிலும் காணுதலிலும் அமைந்துள்ள தத்துவப் பொருளை, பேராசியர் திரு. அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள். தமது 'கம்பன் - புதியபார்வை' என்ற நூலில் விளக்கியிருப்பது, நம் சிந்தனைக்கு உரிய ஒன்றாகும்.

'கூந்தல் ஞானத்துக்குக் குறியீடு. அதேபோல அவன் திருவடி என்பது திருவருளுக்குக் குறியீடு. அவனுடைய திருவருளைப் பெறுதலைத்தான் திருவடி அடைதல் என்று மரபாகக் கூறுகின்றோம்..............................

திருவடிக்கு ஒளி உண்டு என்பது ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒன்றுதான். இதனை ஓரளவு மாற்றி, திருவடிபோல ஒளிவிடும் ஒன்றைக் காட்டினாள் பிராட்டி: மாருதி அதனைக் கண்டான் என்று கூறும்பொழுது, குருவாக நின்று

---

எழுகோள்-நவக்கிரகங்கள்: வேந்தன்-அரசனாகிய சூரியன்: மெல்லியல்-சீதை: அந்தம்-முடிவு: சேவகன்-இராகவன்: மாருதி-அனுமன்.

ஒளியைக் காட்டலும், அதனைச் சீடன் காண்டலும் நினைவுக்கு வருகின்றது. அனைத்துத் தகுதிகளும் நிறைந்தவன் அனுமன், என்பதைப் பரம்பொருளே அவனைப் பார்த்த மாத்திரத்தில் கூறிவிட்டான்........................

அனைத்துப் பண்புகளும் நிரம்பி, நீக்கவேண்டிய குறை எதுவும் இல்லாமல் உள்ள அனுமனுக்கு, தீட்சை செய்யப்பட வேண்டிய காலம் வந்துவிட்டது. எனவே, பிராட்டி திருவடி போன்ற ஒளியுடைய ஒன்றைக் காட்டினாள்: அவன் கண்டான் என்று குறிப்பாகக் கூறிவிட்டான் கவிஞன். இந்தக் குறிப்பைக் கூறத்தான் காந்துகின்றது காட்டினள் என்று கூறினான். அனுமனுக்கு ஒளிக்காட்சி (ஜோதிதரிசனம்) காட்ட விரும்பினாள் என்பதைத்தான் காட்டினாள் என்றான். இறைவன் கருணை மிகுதியால் இக்காட்சியைக் காட்டினாலும், அதனைக் காணும் தகுதி உடையவர்கள் மட்டுமே அதனைக் காணமுடியும். அனுமனைப் பொறுத்தவரை அவள் காட்டினள்: மாருதி கண்டான். மேலும், காப்பிய நோக்கில் பார்த்தால் அவள் காட்டியது சூடாமணியை. சூடாமணி என்பது நடுவகிட்டில் நெற்றிக்கு நேரே தலையில் அணியும் அணியாகும். நடு வகிட்டில்நெற்றியில் படும்படி ஓர்அணியை அணிந்தால்,அது நடு நெற்றியில்இரண்டு புருவங்கட்கு மத்தியில் தொங்கிக் கொண்டிருக்கும் இரண்டு புருவங்கட்கு மத்தியில் உள்ள பகுதியைத்தான் 'ஆஞ்ஞை' என்று கூறுவர் ................ஆஞ்ஞை என்பது இரண்டு புருவங்களின் நடுவே நெற்றியின் நடுப்பாகத்தின் அடிப்பகுதி என்பதாகும். இங்கேதான் ஒளிக்காட்சி அல்லது ஜோதி தரிசனம் நடைபெறும் என்று அறிஞர் கூறுவர். எனவே சூடாமணியைக் காட்டினாள் என்று கூறவேண்டிய கம்பன், நேரிடையாகக் கூறாமல், இக்குறிப்பின் பொருளும் விளங்குமாறு கவிதை செய்துள்ளான். ★

---

★ கம்பன்-புதியபார்வை. அ. ச. ஞான சம்பந்தன், பக்-284, 285, 286, 287.

'காட்டினள் மாருதி கண்டான்' என்ற தொடரால் குறிக்கப்பெறும் செயல்கள் ஒரு குருநாதருக்கும் ஒரு சீடனுக் கும் உரிய செயல்களாக விளக்கிக் காட்டியுள்ள பேராசிரியர் கருத்து இங்கு, ஏற்புடைய தொன்றாகவே அமைந்துள்ளது.

பேராசிரியரின் தத்துவ விளக்கம், பிராட்டியைக் குருவா கவும், அவள் காட்டிய சூடாமணியை இறைவன் திருவடியாக வும் கண்ட. அனுமனை சீடனாகவும் ஆக்கிக் காட்டியுள்ளது. இறைவன் திருவடியைக் காட்டித் தருகின்ற குருநாதரை, இறைவனாகவே தெய்வமாகவே, மதித்துத் தொழுவதுதான் இந்து சமய முறையாகும் அம்முறையில், தனக்கு. சேவகன் திருவடி என்னக்காந்துகின்ற (ஒளிர்கின்ற) சூடாமணியைக் காட்டிய பிராட்டியைப் பெருந்தெய்வமாக மதித்துப்போற்றி வழிபடுகின்றான் அனுமன்.

முன்பு, அனுமான் மெய்ப்பெயர் தீட்டிய வண்ண மோதி ரத்தை, காட்ட பிராட்டி கண்டாள் இப்போது சூடாமணியை பிராட்டி காட்ட அனுமன் கண்டான். இரண்டும் அடையாளப் பொருள்கள். ஒன்று பெருமான் விரலை அணி செய்வது: மற் றொன்று பிராட்டியின் தலையை (முடியை) அணி செய்வது இரண்டும் அனுமனது கைத்தலத்தைச் சேர்ந்து, இந்தப் பக்தனது கையை அணி செய்து விட்டன பெருமானது மோதிரத்தைத் தனது கையில் வைத்து. பிராட்டிக்குக் காட்டி யதும், பிராட்டியின் சூடாமணியைத் தனது கையில் வைத்து பெருமானுக்குக் காட்டியதும் பக்த அனுமான்தான்.

அடையாளப் பொருள்கள் மோதிரம், சூடாமணி என்ற இரண்டு. இவற்றால் இணைக்கப்பட்டவர்கள், இராமன், சீதை, அனுமன்' என்ற மூவராவர். பொருள்கள் இரண்டும் தெய்வசம்பந்தம் பெற்றவைகள்: அதனால் இணைந்த மூவரும் தெய்வத்திருவுருவத்தினர் ஆவர்.

**என்று, கொடுத்தான்:**

'கண்களால் ஆரக்காண்டி' என்று சொல்லிக்கொண்டு, அந்தச் சூடாமணியைக் கொடுத்தான், யாவருக்கும் எதனை யும் கொடுக்கவல்ல பகவானுக்கு இராமபிரானுக்கு, தனது

கையால் கொடுத்தான். பகவானுக்கே, அவன் எதிர்பார்க்கக் கூடிய ஒன்றைக் கொடுக்கும் நற்பேறு பெற்றவன் யார்? கவிதையின் ஈற்றடி, அந்த வினாவிற்கு விடையாக அமைகின்றது.

**வேத நல்நூல் உய்த்துள காலமெல்லாம் புகழொடும் ஒக்க நிற்பான்:**

வேதங்களாகிய நல்ல நூல்கள் வழங்குவதான கால தத்துவம் உள்ள அளவும் புகழுடன் கூடியிருக்கும் அனுமான்.

அனுமான் சிரஞ்சீவியாக இருப்பவன். எதுவரை (எந்தக் காலம் வரை) இருப்பது என்ற கால எல்லையைக் காட்ட வந்த கவிச்சக்கரவர்த்தி, வேதங்கள் வழங்கிக் கொண்டிருக்கும் காலத்தை எல்லையாக்கினார். வேதங்கள் காலங் கடந்து நிற்கும். அதுபோல அனுமனும் என்றும் சிரஞ்சீவியாக புகழோடு நிலைத்து நிற்பான் என்பது கருத்து. 'ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டு எலாம் உலகம் ஏழும் ஏழும் வீவுற்ற ஞான்றும். இன்று என இருத்தி' என்று பிராட்டியால் ஆசீர்வதிக்கப் பட்டவன் அல்லவா அனுமன்!

இத்தகைய புகழுக்குரியவன், புகழுக்குரிய பொருளை சூடாமணியை, புகழுக்குரிய இராமபிரானிடம் கொடுத்தான்.

மாமணிக்கு அரசாக விளங்கும் சூடாமணியைப் பெற்ற இராமபிரானது தோற்றத்தை அடுத்த கவிதை காட்டுகின்றது

# 28. மணியின் காட்சி

28 பைபையப் பயந்த காமம்
பரிணமித்து உயர்ந்து பொங்கி
மெய்யுற வெதும்பி, உள்ளம்
மெலிவுறு நிலையை விட்டான்;
ஐயனுக்கு அங்கி முன்னர்,
அங்கையால் பற்றும் நங்கை
கைஎனல் ஆயிற்று அன்றே
கைபுக்க மணியின் காட்சி! (கம்: 6053)

இராமபிரான் சூடாமணியைப் பெற்றுக் கொண்டவுடன். அவனது திருவுள்ளத்தில் நின்றதையும், அதனின்றும் அகன்றதையும் கூறுகின்றது இக்கவிதை முன் இரண்டடிகள் திருவுள்ளத்தை விட்டு அகன்றதையும், பின் இரண்டடிகள் திருவுள்ளத்தில் நின்றதையும் தெரிவிக்கின்றன.

அகன்றது மெலிவு: நின்றது வலிமை. இதுவரை உள்ளத்தில் நிலைநின்ற மெலிவு நீங்கியதும் பழைய மங்கல நினைவாகிய வலிமை புகுந்து கொண்டு விட்டது.

**உள்ளம் மெலிவுறு நிலையை விட்டான் :**

மனம் தளர்ச்சியடையும் தன்மையை அகற்றினான். துன்ப நினைவுகள் உள்ளத்தைத் தளரச் செய்துவிடும். சூடாமணியைத் தன் கண்களால் கண்டான் இராகவன். கண்டதும் விண்டது (பிரிந்தது) துயரம். அந்தத் துயரம், இந்த மணியைக்காணும் முன்பு எதனால் வந்தது? என்ன செய்தது?

**பை பையப் பயந்த காமம் பரிணமித்து, உயர்ந்து, பொங்கி, மெய்யுற வெதும்பி :**

மெல்ல மெல்ல உள்ளே தோன்றிய ஆசையானது, வளர்ந்து. மேலும் மேலும் எழுதலால் உடம்பு மிகவும் கொதித்து (பை பைய-மெல்ல மெல்ல)

பிரிந்துவிட்ட சீதையை எப்பொழுது மீட்பது என்ற ஏக்கம், ஆசையாக இராமபிரானது திருவுள்ளத்தில் தோன்றியது. தோன்றிய ஆசையை நிறைவேற்ற இயலாததனால், அது வளர்ந்துகொண்டு வந்தது. அதைத் தணிக்கும் வகையை இதுவரை கண்டறியாததால். அந்த ஆசை நோய், மேன்மேலும் எழுந்தது. நோயின் மிகுதி உடம்பைக் கொதிக்க வைத்தது கொதிக்கும் உடம்பில் தங்கியுள்ள உள்ளம், தானாக மெலிந்து விட்டது.

எந்த ஆசையாகயிருந்தாலும், அதனை நிறை வேற்றா விட்டால், அது நோயாக உருவெடுத்து, உடம்பை வாட்டி உள்ளத்தை மெலியச் செய்து விடும்.

அனுமன் காட்டிய சூடாமணியைக் கண்டதும், பிரிந்த சீதை கூடுவாள் என்ற நம்பிக்கை பிறக்கிறது. அதனால், ஆசை நிறைவேற்றப் படுகின்றது. ஆசை நோய் அகல, உடம்பு குளிர்கிறது. உள்ளம் மெலிவு நீங்குகிறது. மெலிவு அகன்றால் வருவது வலிவுதானே!

கணவனும் மனைவியும் தனித்தனியாக, ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ளாத அளவில் பிரிந்து கிடப்பது இல்லறவாழ்வுக்குப் பெரும் மெலிவைத் தரும். இருவரும் சேர்ந்திருந்து இல்வாழ்வு நடத்துவது, நல்வாழ்வாக மலர்ந்து. வாழ்க்கைக்கு வலிமை சேர்க்கும்.

**கை புக்க மணியின் காட்சி :**

இராமபிரானது திருக்கரத்தை அடைந்த அந்த சூடாமணியின் தோற்றம்.

பிராட்டியின் திருக்கரத்திலிருந்து அனுமனது திருக் கையை அடைந்தபோது, அந்தச் சூடாமணி, 'அந்தம் இல் சேவகன் சேவடியாகத் (இராகவன் திருவடியாக) தோற்ற மளித்தது அனுமனுக்கு. அது இப்போது, அனுமன் கையி லிருந்து, இராமபிரான் திருக்கரத்தைச் சேர்ந்ததும், இராம பிரானுக்கு எவ்வாறு தோற்றம் அளிக்கிறது.' காண்பவர் களது உணர்வுக்கு ஏற்ப, காணப்படும் பொருளின் தோற்றம் வேறுபடுவதை இங்குக் காண்கின்றோம்.

அசோகவனத்தில் அதனைக் கண்ட அனுமன், பக்தி உணர்வினனாக இருந்தான். அதனால் அந்தச் சூடாமணி, பகவானது திருவடியாகத் தோற்றம் அளித்தது.இங்கு, இராம பிரான்.ஆவியை,சனகன் பெற்ற அன்னத்தை, அமிழ்தின் வந்த தேவியைப் பிரிந்த காதல் உணர்வினனாக உள்ளதால், சூடாமணியின் தோற்றம், இந்தக் காதல் உணர்வுக்கு ஏற்ப அமைகின்றது.

ஐயனுக்கு, அங்கி முன்னர், அங்கையால் பற்றும் நங்கை, கை எனல் ஆயிற்று அன்றே.

இராமபிரானுக்கு, அன்று மிதிலை நகரில், திருமண நேரத்தில்,அக்கினியின் முன்னிலையில் அழகிய திருக்கரத்தால் பிடிக்கப்பட்ட பிராட்டியின் கை, என்னலாம் படி ஆயிற்று.

சீதாப்பிராட்டியினால் கொடுத்தனுப்பப்பட்ட சூடாமணி, இராமபிரானுக்கு பிராட்டியின் தலை அணியாகக் காணப்பட வில்லை; பிராட்டியின் திருக்கரமாகக் காணப்பட்டது. அந்தத் திருக்கரம், அங்கி முன்னர், இராமபிரானது கைத்தலத்துள் அடங்கும் போது, எவ்வளவு சிறப்புக்கு உரியதாக இருந் திருக்கும் சனகன் மகளாக வாழ்ந்து கொண்டிருந்த சீதை இராமபிரான் தேவியாக உயர்வதற்குரிய நிகழ்ச்சியும் அது தானே! அதனால், அந்தத்திருமண நிகழ்ச்சியை நினைவூட்டும் சிறப்புத் திருக்கரமாகக் காட்சியளித்தது.

'இந்த இப்பிறவியில் இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்ற செவ்வரம் தந்தது இந்தக் கைத்தலம் பற்றும் நிகழ்ச்சி நடந்த போதுதானே! சிந்தையால் தொட்டு, பற்றும் போது நீட்டிய சீதையின் திருக்கரம் சிறப்புக்கு உரிய தாகின்றது. அந்தச் சிறப்பு நிகழ்ச்சித் திருக்கரத்தை, நினைவு படுத்துகின்றது இந்தச்சூடாமணி பிரிந்தவர் கூடும் திருமணக் காலத்து நிகழ்ச்சியை இந்தச் சூடாமணி நினைவுக்குக் கொண்டுவருவதால், இராமபிரான் திருவுள்ளத்தில் மெலிவு நீங்கி வலிமை சேர்கின்றது.

துன்பம் நீங்கி இன்பத்தால் நிறைவு பெற்ற இராமபிரானது தோற்றம் எவ்வாறு விளங்குகின்றது என்பதை அடுத்த கவிதை காட்டுகின்றது.

## 29. இராமபிரான் மெய்ப்பாடு

29 பொடித்தன உரோமம்: போந்து
பொழிந்தன கண்ணீர்; பொங்கித்
துடித்தன, மார்பும் தோளும்;
தோன்றின வியர்வின் துள்ளி;
மடித்தது மணிவாய்; ஆவி
வருவது போவது ஆகித்
தடித்தது மேனி; என்னே
யார்உளர் தன்மை தேர்வார்? (கம்-6054)

எதிர் பாராத இன்பம், உள்ளத்தில் புகுந்தால், புகுந்த இன்ப உணர்வு, மெய்யின் வழியாக வெளிப்படுவது இயல்பு. இது மெய்ப்பாடு எனப்படும். மெய்யில் படுதல் (தோன்றுதல்) என்று பொருள் இராம பிரானது இன்ப உணர்வு எந்த எந்த உறுப்புக்களின் வழியாக, எவ்வாறு வெளிப்படுகின்றது என்பதை விளக்குவது இந்தக் கவிதை.

இங்கு. மெய்ப்பாடு என்றால் என்ன என்பதற்கு, தொல்காப்பியத்திற்கு உரைஎழுதிய பேராசிரியர் தரும் விளக்கம் சிந்தனைக்குரியதொன்றாகும்.

'மெய்ப்பாடு' என்பது, பொருட்பாடு, அஃதாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப் படுவதோராற்றான் வெளிப்படுதல்.' இது பேராசிரியரின் விளக்கம்.

உள்ளத்தில் நிகழும் நிகழ்ச்சியைப் புறத்தார்க்குப் புலப்படுத்தும் மெய்ப்பாடு இராமபிரான் திருமேனியில் இப்போது காணப்படுகிறது. அதனைக் கண்டார் கவிச் சக்கரவர்த்தி. ஆனால் கண்டதைக் காட்டமுடியவில்லை என்று சொல்லுகின்றார் இந்தக் கவிதையில்.

பிராட்டி கொடுத்தனுப்பிய சூடாமணியைப் பெற்றுக் கொண்ட இராமபிரானது உள்ளத்துணர்வுகள். வெளிப்படும் மெய்ப்பாடுகளை, உள்ளபடி அறிந்து உணர்த்துவது எம்மனோர்க்கும் இயலாது என்று கவிச் சக்கரவர்த்தியே, கையை விரிப்பதாக அமைந்துள்ளது இந்தக் கவிதை.

காப்பியத் தலைவன் இராமபிரானது திருவுள்ளம், ஏதேனும் சோதனைக்குட்பட்டு. உணர்வுகள் மாறிவரும் போது, அதனை வெளிப்படுத்துங் காலத்து, இப்படிக் கூறி விடுவதுதான், கவிச்சக்கரவர்த்தியின் இயல்பாகக் காணப் படுகின்றது. கவிதையினால், வடித்துக் காட்டமுடியாத அளவுக்கு, உள்ளத்து உணர்வுகள் உயர்ந்தோங்கி அலை மோதிக் கொண்டிருக்கின்றன என்று வாசகர்கள் உணர்ந்து கொள்ளும் படியாக அமைத்துவிடுகின்றார் புலவர் பெருமான்.

முதல் நாள் இட்ட தந்தையின் ஆணையின்படி அயோத்தி அரசை ஏற்பதற்குமுன், தன் சிற்றன்னை கைகேசியிடம் ஆசிபெறச் சென்ற இராமபிரான் திருச் செவியில், 'நீ காட்டுக்குச் செல்: அங்கு பதினான்கு ஆண்டுகள் தவவாழ்க்கையை மேற்கொள்' என்ற ஆணைச்சொல் வந்து விழுந்தது. எதிர்பாராத இந்த ஆணைச் சொல்லைக் கேட்டதும், அப்பெருமான் திருமுகம் எப்படி இருந்தது என்பதை, 'இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கு எளிதே?' என்று கூற இயலாத தனது ஆற்றாமையைக் காட்டுகின்றார் கவிஞர் பெருமான்.

அவ்வாறே, இங்கும், 'என்னே! யார் உளர் தன்மை தேர்வார்?' என்று புலவர் பெருமான் புகழ்கின்றார். என்ன ஆச்சரியம்! சூடாமணியைக் கண்டதும். இராகவன் தன் திருவுள்ளத்து எழுந்து அலை மோதிக் கொண்டுவந்து மெய்ப்பாடுகளின் வழியாக வெளியில் தோற்றமளிக்கும் உணர்வுகளை உள்ளபடி அறிந்துரைப்பவர்கள் யார் இருக்கிறார்கள்? எவரும் இல்லை' என்பது கவிதையின் நிறைவுக் கருத்தாகும். இது, இராமபிரானது மெய்ப்பாட்டின் மேன்மையை, வாசகர்களைத் தாமே உணர்ந்து இன்புறுமாறு செய்துவிடுகிறது.

**பொடித்தன உரோமம்:**

சிலிர்த்தன மயிர்கள். வாழ்க்கையில் எதிர் பாராத ஒன்றைப் பார்க்கும் போதோ,செய்தியைக் கேட்கும் போதோ, மெய்மயிர் சிலிர்ப்பது இயல்பு. பிராட்டியின் சூடாமணி, இப்போது. இராமபிரான் எதிர் பாராத ஒன்று. இதனைக் கண்டதும், இராகவன் திருவுள்ளம், மகிழ்ச்சியில் மூழ்கியது. அம்மகிழ்ச்சி உணர்வின் மெய்ப்பாடுதான் மெய்மயிர் சிலிர்ப்பு ஆகும்.

**போந்து பொழிந்தன கண்ணீர்:**

வழிந்து பெருகின கண்ணீர். சீதாதேவி, அடையாளப் பொருளாகக் கொடுத்தனுப்பிய சூடாமணியைக் கண்ட கண்கள், ஆனந்த நீரைப் பெருக்கிக்கொண்டு விட்டன. இந்த மணியின் காட்சி, 'ஐயனுக்கு அங்கி முன்னர் அங்கையால் பற்றும் நங்கையின் கை' யாகத்தோன்றுவதால் இராகவன் திருவுள்ளத்தில் ஆனந்த வெள்ளம் பெருகியது. அவ்வெள்ளப் பெருக்கு கண்களின் வழியாக வழிந்தோடுகின்றது.

இராமபிரானது மோதிரத்தைப் பிராட்டி கண்டபோது. பெருகிய ஆனந்தக் கண்ணீர், மோதிரம் வஞ்சகர் ஊருக்கு வந்தது என்று, அதற்குத் திருமஞ்சனம்(ஆயிரம் கலசம் ஆட்டி

செய்வதற்குப் பயன்பட்டது. இங்கு பெருமானது கண்ணீருக்கு சூடாமணித் திருமஞ்சனம் செய்யும் வேலையின்மையால், வெறுமனே வழிந்தோடிக் கொண்டிருந்தது.

**பொங்கித் துடித்தன மார்பும் தோளும் :**

பூரித்து, துள்ளின மார்பும் தோளும் இராகவனது, மார்பு சூடாமணியைக்கண்ட நிகழ்ச்சியால் பூரித்தது: தோள், சூடாமணியைக் கொடுத்தனுப்பிய தனது தேவியை சிறையிலிருந்து மீட்பதற்கு, இராவண அரக்கனோடு போரிடுவதற்குப் பதை பதைத்துக் கொண்டிருந்தது. வீர உணர்வு தனது வெளிப்பாட்டைத் தோள்களின் வழியாகத்தான் புறத்தார்க்குப் புலப்படுத்தும். மார்பின் பூரிப்பு இராகவன் தன் மகிழ்ச்சிக்கு அடையாளம் தோளின் துடிப்பு, வீரச் செயலில் கொண்ட ஆர்வத்தின் அடையாளம்.

**தோன்றின வியர்வின் துள்ளி:**

வியர்வைத்துளிகள் உண்டாயின வீர உணர்வால் துள்ளிக் கொண்டிருக்கும் இராமபிரானின் தோள்கள், அப்பெருமானது திரு மேனியில், வியர்வைத் துளிகளைத் தோற்றுவித்து விட்டன. தோளின் துடிப்பு, செயலின் ஈடுபாட்டிற்குத் தூண்டிக் கொண்டிருப்பதால், செயலாற்றக் கூடிய திருமேனியில் செயல் செய்வதால் ஏற்படக் கூடிய வியர்வைத்துளி முன்கூட்டியே உண்டாகி விட்டது.

**மடித்தது மணிவாய் :**

மடிப்பை அடைந்தது அழகிய திருவாய். இராமபிரானது திருவாய், இப்போது மடிந்திருப்பதற்குக் காரணம், இராவணன் மேல் கொண்ட கோபம். கோப உணர்வின் மெய்ப்பாடு வாய்மடிப்பு. போருக்குச் செல்லத்துடிக்கும் தோளுக்குத் துணையாக, மணிவாய் மடிப்பு ஏற்பட்டுள்ளது. தனது தேவியைப் பிரித்த இராவணனது நினைவைத் தோற்றுவித்தது, இப்போது இங்கு சேரவந்த சூடாமணியின் தோற்றம். அதனால் பெருமானது திருவுள்ளத்தில் இராவண அரக்கன் மேல் கோபம் பொங்கியது. அது, மணிவாயை மடித்தது.

**ஆவி வருவது போவது ஆகித்தடித்தது மேனி :**

உயிர் வருவது போவதுமாகப் பெற்று, உடம்பு பெருத்தது. இராவணனது அரக்கர் கூட்டத்தின் மேல் கொண்ட கோப உணர்வு, வாயை மடிக்கவைத்து விட்டதால், உயிர்க்காற்று பெரு மூச்சாக வெளிவருவதும், உள்ளே செல்வதுமாக உள்ளது. அதற்கு ஏற்ப இராகவனது திருமேனி பெருத்துக் காணப் படுகின்றது.

உரோமத்தின் சிலிர்ப்பு, கண்ணீரின் பொழிவு, மார்பின் பூரிப்பு இம்மூன்றும் உவகை உணர்வின் மெய்ப்பாடுகள்; தோளின் துடிப்பு, வியர்வைத் துளிகளின் வெளிப்பாடு இந்த இரண்டும் வீர உணர்வின் மெய்ப்பாடுகள்: மணிவாய் மடிப்பு, திருமேனியின் தடிப்பு இவை இரண்டும் கோப உணர்வின் மெய்ப்பாடுகள்.

மாமணிக்கு அரசாக விளங்கும் சூடாமணி என்ற ஒன்றனது வருகை. இராமபிரான் திருவுள்ளத்தில், உவகை, வீரம், கோபம் என்ற மூவகை உணர்வுகளை ஒருசேர வரவழைத்தது; அவைகளை எழுவகை மெய்ப்பாடுகளாக வெளி படுத்தியது. ஒன்று, மூன்றுக்குக் காரணமாகி, அது ஏழாக எழுவதற்கும் அடிப்படையாகி விட்டது என்றால், அது ஆச்சரியமல்லவா! அதனால், 'என்னே!' என்ற வியப்புச் சொல்லால் கவிதையை நிறைவு செய்ய எண்ணம் கொண்டு விட்டார் கவிஞர் பெருமான். அதற்கு மேலும், அவரது வியப்பு உணர்வால் உந்தப் பட்ட எண்ணம், நீண்டு 'யார் உளர் தன்மை தேர்வார்?' என்ற வினாவோடு முற்றுப் புள்ளி வைத்துக் கொண்டு விட்டது.

இந்த எழுவகை மெய்ப்பாடுகளின் தன்மையை இயல்பை ஆராய்ந்து அறிந்து, உள்ளபடி எடுத்துரைப்பவர் எவரும் இலர் 'அந்த இல்லாதவர் வரிசையில் நானும் ஒருவனாய் நிற்கின்றேன்' என்று சொல்லாமல் சொல்கின்றார் கவிஞர் பெருமான் இவர் யார்? 'ஆரியம் நன்கு உணர்ந்து தமிழின் ஆழம் அளந்து கண்ட கவிச்சக்கரவர்த்தி இப்படிப்பட்ட ஒருகவிஞராலேயே இராகவனது மெய்ப்பாடுகளின் தன்மையை அறிந்து உரைக்க முடியவில்லை என்றால், அது எத்தகைய உயர்விற்கு உரியதாக இருக்கும்? என்று வாசகர்கள் சிந்தித்துக்கொள்ள வேண்டும் வாசகர்களின் சிந்தனைக்கு விருந்தளிக்கும் உயர் பெரும்கவிஞர்களுக்குரிய கவிதத்துவத்தை இந்தக்கவிதையில் காணலாம்.

# 30. அடுத்த வேலை

30 ஆண்டையின் அருக்கன் மைந்தன்,
'ஐய! கேள், அரிவை நம்பால்
காண்டலுக்கு எளியள் ஆனாள்'
என்றலும், காலம் தாழ,
ஈண்டு, இனும் இருத்தி போலாம்,
என்றனன்; என்ற லோடும்,
தூண்திரண் டனைய தோளான்,
பொருக்கென எழுந்து சொன்னான் (கம்-6055)

நாடிய பொருள் கைகூடுவதற்கான சூழ்நிலை ஏற்பட்ட பிறகு அதனைப்பெறுவதற்குரிய முயற்சியில் ஈடுபட்டு அடுத்து செய்யத்தக்க காரியத்தை மேற்கொள்வதைப்பற்றிச் சொல்கின்றது இந்தக் கவிதை.

இராமபிரானது மெய்ப்பாட்டின் தன்மையைப் பக்கத்திலிருந்து கவனித்துக் கொண்டிருந்த சுக்கிரீவன், தனது கருத்தைப் பெருமானிடம் வெளியிடுதல், அதனைக்கேட்ட இராகவன், தனது எண்ணத்தைச் சொல்லுதல், பிறகு சுக்கிரீவன் தனது வானரப்படைகளுக்கு ஆணையிடுதல் என்ற மூன்று செய்திகள் அடங்கியுள்ளன இந்தக் கவிதையில்.

**ஆண்டையின் :**

அந்தச் சமயத்தில் சூடாமணியைத் தன் கண்களாரக் கண்டு, உவகையும் வீரமும், கோபமும் கொண்டு தோற்றம் அளித்த அந்த நேரத்தில். இந்த மூன்று உணர்வுகளும் மெய்ப்பாடுகளாக வெளிப்பட்ட அப்பொழுது.

**அருக்கன் மைந்தன் :**

சூரிய தேவன் மகன் சுக்கிரீவன். இவன் இராமபிரான் பக்கத்திலேயே இருந்து கொண்டிருப்பதால், பெருமான் திருவுள்ளத்தில் தோன்றியுள்ள உணர்வுகளைப் புரிந்து கொண்டான். அதனால், அந்த உணர்வுகளைச் செயல் படுத்துவதற்கு ஏற்ற வகையில் பேசத் தொடங்குகின்றான்.

**ஐய! கேள் :**

சுவாமியே, நான் சொல்வதைச் சிறிது கேளுங்கள். சுக்கிரீவனது வாய்ச் சொல், இராமபிரானது திருச்செவி ஏற்கும் வண்ணம் அமைகின்றது.

**அரிவை நம்பால் காண்டலுக்கு எளியளானாள் :**

சீதாப் பிராட்டி நாம் காண்பதற்கு எளிய வளாயினாள். 'இதுவரை, பிராட்டி நமக்கு மிகமிக அரியவளாக இருந்தாள். அனுமனது அளவிலா உழைப்பின் பயனால், அப்பிராட்டி, நம்பார்வைக்கு-நம்மால் மீட்கப் படுவதற்கு எளிமையுடையவ ளாக ஆகிவிட்டாள். என்று சொன்னான் சுக்கிரீவன்.

**என்றலும்:**

என்று சுக்கிரீவன் சொன்னவுடன். சுக்கிரீவனது வார்த் தைக்கு உடன்பாட்டு முறையில் உடனே இராகவன் பதில் சொல்லத் தொடங்குகின்றான்.

**காலம் தாழ இனும் ஈண்டு இருத்தி போலாம் என்றனன் :**

'காலம் கழியும்படி, சீதையிருக்கும் இடம் தெரிந்த பிறகும், இங்கேயே இருக்கின்றாய் போலும்' என்று இராம பிரான் கூறினான். சீதாதேவியிருக்கும் இடம் தெரியாததால் இங்கேயே இருந்து கொண்டிருந்தோம். காலம் வீணாகக் கழிந்து கொண்டிருந்தது. இனி, இருக்கும் இடம் தெரிந்த பிறகும், இங்கேயே இருப்பது, காலத்தை மேலும் வீணாக்கு வதாகும். ஆகையால், இனி காலம் தாழ்த்தக் கூடாது என்பது இராகவன் திருள்ளக் கருத்து.

**என்றலோடும் :**

என்று இராமபிரான் தனது கருத்தை வெளியிட்டதும். இதைக் கேட்டவுடன் சுக்கிரீவன், அடுத்துசெய்யவேண்டிய வேலைக்குத் தயாரானான்.

**தூண் திரிண்டனைய தோளான் பொருக்கென எழுந்து சொன்னான் :**

தூண் திரண்டிருப்பது போன்ற தோள்களை உடைய சுக்கிரீவன் விரைவாக எழுந்து நின்று, தனது வானரப் படைகளுக்கு ஆணையிட்டான்.

சுக்கிரீவனது தோள்கள் தூண் திரண்டு உருண்டிருப் பது போன்று வன்மை பெற்றவைகள். அரக்கர்களோடு போரிடுவதற்கேற்ற ஆற்றல் பெற்றவன் சுக்கிரீவன் என்பதைக் குறிக்கிறது தோளாற்றல்.

வானரச் சேனைகளை ஒன்று திரட்டி, இலங்கைக்குப் புறப்படுவதற்கு, அவைகளைத் தயார்ப் படுத்துகின்றான், சுக்கிரீவன்.

நாடிய பொருள் இருக்கும் இடம் தெரிந்தது இனி இதனை அடைவதற்கு முயல வேண்டும் முயற்சிக்கு இராமபிரானது அருளாசி கிட்டவேண்டும், ஆசியின் துணையோடு முயன்றால் நாடும் பொருள் நன்குவந்து கிட்டும் இராமாயணக் காப்பியத் தின் நிறைவு, நாடிய பொருள் கை கூடியதுதான்.

நாடும் பொருள், ‘பெருந் தெய்வம்’ அதனைப் பெறு வதற்குக் கடல் கடந்து செல்லவேண்டும் கடலைக் கடக்கத் தெப்பம் வேண்டும். இந்த ஆர்வம் இருந்தால், இறைவனது திருவடியே கப்பலாக வந்து,நம்மைப்பிறவிக்கடலைக் கடக்கச் செய்து, பெருந் தெய்வத்தைத் தரிசிக்கச் செய்யும்.

**சீதையைப் பற்றிய கவிதைத் தொடர்கள்:**

**செய்யுள் எண்:- சென்னைக் கம்பன் கழகப் பதிப்பு.**

---

| எண். | தொடர்கள். | கூற்று. | செய்யுள் |
|---|---|---|---|
| 1. | எங்கள் நாயகற்கு உயிரினும் இனியாள் | அனுமன் | 5031 |
| 2. | மானுயர்த் திருவடினள் | ,, | 5035 |
| 3. | காந்தள்மெல்விரல் சனகி | ,, | 5041 |
| 4. | வார்தேன் உடும் தகைமொழியாள் | ,, | 5048 |
| 5. | வாளாற்று கண்ணாள் | ,, | 5053 |
| 6. | கற்றைப் பூங்குழலாள் | ,, | 5057 |
| 7. | பொன் துன்னும் மணிப்பூணாள் | ,, | 5059 |
| 8. | கற்பழியாக் குலமகள் | ,, | 5060 |
| 9. | கனங்குழை | ,, | 5062 |
| 10. | ஊழியான் பெருந்தேவி | ,, | 5063 |
| 11. | வடித்தாய் பூங்குழலாள் | ,, | 5067 |
| 12. | துன்று அல் ஓதி | கவி | 5070 |
| 13. | நலன் அற உணங்கிய நங்கை | ,, | 5071 |
| 14. | வெயிலிடைத் தந்த விளக்கு என ஒளி இலா மெய்யாள் | ,, | 5072 |
| 15. | இழைக்கும் நுண்ணிய மருங்குலாள் | ,, | 5074 |
| 16. | தேவு தெண்கடல் அமிழ்துகொண்டு அனங்கவேள் செய்த ஓவியம்புகை உண்டதே ஒக்கின்ற உருவாள் | ,, | 5079 |
| 17. | இருந்த மாநிலம் செல்லரித்திடவும் ஆண்டு எழாதாள் | ,, | 5083 |
| 18. | நொவ் இடை மடந்தை | ,, | 5123 |
| 19. | இருநிறத்து உற்றவேற்கு இயைந்த காந்தம் | ,, | 5131 |
| 20. | மடக்கொடிச் சீதை | ,, | 5132 |
| 21. | கமலக் கண்ணனார் உள் உறை உயிர் | அனுமன் | 5133 |
| 22. | கமலச் செல்வி | ,, | 5134 |
| 23. | தேவி | ,, | 5135 |
| 24. | காசுண்ட கூந்தலாள் | ,, | 5136 |
| 25. | மாசுண்ட மணி அனாள் | ,, | 5136 |
| 26. | வனிதையர் திலகம் | ,, | 5137 |

| | | | |
|---|---|---|---|
| 27. | பெண்ணின் விளக்கு எனும் தகையாள் | கவி | 5166 |
| 28. | கூசி ஆவிகுலை உறுவாள் | ,, | 5167 |
| 29. | சானகி | ,, | 5168 |
| 30. | நோவ் இடைக் குயில் | இராவணன் | 5169 |
| 31. | குழைசென்று இறங்கி மறம் தருசெங்கணாய் | ,, | 5171 |
| 32. | திலகமே | ,, | 5172 |
| 33. | பூந்தண்வார் குழல் பொன் கொழுந்தே | ,, | 5173 |
| 34. | வார்குன்றா முலை | ,, | 5174 |
| 35. | சனகரின் மடந்தையே | ,, | 5178 |
| 36. | கிள்ளை | ,, | 5179 |
| 37. | இலங்கிழாய் | ,, | 5180 |
| 38, | அருந்ததிக் கற்பின் என்னை ஆளுடை நாயகன் தேவி | அனுமன் | 5027 |
| 39. | புனித மாதவத்து அணங்கு | ,, | 5027 |
| 40. | தேன் என்பது அறிந்த சொல்லாய் | இராவணன் | 5212 |
| 41. | மென் தோளாய் | ,, | 5213 |
| 42. | பாவை! குதலைச் சொல்லாய் | ,, | 5214 |
| 43. | பழிப்பு இலாதாய் | ,, | 5215 |
| 44. | பைந்தொடி | ,, | 5216 |
| 45. | போது அரிக்கண்ணினாள் | கவி | 5218 |
| 46. | பொங்கு அரா நுணங்கிக் கான்ற வெண்மதியம் ஒத்த தோகை | ,, | 5220 |
| 47. | நெறிந்து ஆர் ஓதிப் பேதை | ,, | 5227 |
| 48. | மின் துன்னும் மருங்குல் விளங்கு இழையாள் | ,, | 5237 |
| 49. | தொண்டை வாய் மயில் | ,, | 5249 |
| 50. | மடந்தை | அனுமன் | 5250 |
| 51. | நெய் உறு விளக்கு அனாய் | ,, | 5252 |
| 52. | அன்னை | ,, | 5256 |
| 53. | அருவி நீர் ஒழுகு கண்ணாள் | கவி | 5265 |
| 54. | துடி இடை | அனுமன் | 5267 |
| 55. | ஏந்திழாய் | ,, | 5269 |
| 56. | அன்னையே | ,, | 5270 |
| 57. | தெய்வமே | ,, | 5273 |
| 58. | தோகை அன்ன நடையாய் | ,, | 5284 |

| | | | |
|---|---|---|---|
| 59. | வான் நுதலி | கவி | 5290 |
| 60. | நல் நுதலி | ,, | 5291 |
| 61. | முத்த நகையாள் | கவி | 5297 |
| 62. | அன்னை | அனுமன் | 5305 |
| 63. | வில் கூடு நுதல் திரு | ,, | 5321 |
| 64. | துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள். | கவி | 5322 |
| 65. | நயனவாரியின் தொய்யல் வெஞ்சுழியிடைச் சுழிக்கும் மேனியள் | ,, | 5323 |
| 66. | சுருங்கு இடை | அனுமன் | 5324 |
| 67. | முத்தினும் நிலவினும் முறுவல் முற்றினாள். | கவி | 5325 |
| 68. | வஞ்சி அம்மருங்குல் அம்மறு இல் கற்பினாள் | ,, | 5333 |
| 69. | தூண்டல் இல் விளக்கு அனாள் | ,, | 5335 |
| 70. | திருவின் முகத்துத் திரு ஆனாள் | ,, | 5340 |
| 71. | அருந்ததியே | அனுமன் | 5341 |
| 72. | வம்பின் முலையாய் | ,, | 5344 |
| 73. | அண்டமுதல் நாயகனது ஆவி அனையாள் | ,, | 5345 |
| 74. | பொன் திணி பொலங் கொடி | ,, | 5347 |
| 75. | நெறிந்த குழல் | ,, | 5348 |
| 76. | அருந்ததி | ,, | 5350 |
| 77. | இந்து நுதல் | ,, | 5353 |
| 78. | அம் சொல் இளவஞ்சி | ,, | 5354 |
| 79. | தூயமென் சொல் | கவி | 5355 |
| 80. | பூவை | ,, | 5370 |
| 81. | இவ் உலகுடை நாயகன் தன் துணைப் பெருந்தேவி. | அனுமன் | 5371 |
| 82. | தையல் | ,, | 5383 |
| 83. | பூண்டாள் கற்புடையாள் பொய்யாள் | ,, | 5390 |
| 84. | தேவி! அன்னை! | ,, | 5415 |
| 85. | நங்கை | ,, | 5416 |
| 86. | குராவரும் குழலி | ,, | 5418 |
| 87. | தோகை | கவி | 5419 |
| 88. | இன்சொல் இசைப்பாள் | ,, | 5420 |
| 89. | மெய்ப்புகழ் கொண்டாள் | ,, | 5428 |
| 90. | எழுதுபாவை | ,, | 5429 |
| 91. | தொண்டை அம் கனிவாய்ச் சீதை | ,, | 5468 |

| | | | |
|---|---|---|---|
| 92. | விம்முறும் உள்ளத்து அன்னம் | கவி | 5272 |
| 93. | அன்னை! நங்கை! | அரக்கியர் | 5475 |
| 94. | நன்னுதல் | கவி | 5475 |
| 95. | மயில் இயல் சீதை | அரக்கர் | 5819 |
| 96. | விரைக்குழல் சீதை | கவி | 5822 |
| 97. | தூவி அன்னம் அன்னாள் | ,, | 5835 |
| 98. | அறம் கொள் கொம்பு | அனுமன் | 5860 |
| 99. | தீயைச் சுட்டதோர் கற்பெனும் தீயாள் | கவி | 5840 |
| 100. | அம்கண் நாயகன் தனது ஆணை கூறிய மங்கை. | அனுமன் | 5868 |
| 101. | நன்னுதல் | ,, | 5886 |
| 102. | தாயின் தீர்வு அருங்கேடு அருங் கற்பினாள் தீயின் தூயவள் | ,, | 5897 |
| 103. | சனகன் பாவை | ,, | 5935 |
| 104. | ஞாலநாயகன் தன்தேவி | கவி | 6013 |
| 105. | ஆண் தகை தேவி | ,, | 6015 |
| 106. | தேவி | குரங்குகள் | 6016 |
| 107. | சேவகன் தேவி | கவி | 6017 |
| 108. | வெறிக் கருங்குழலி | இராமன் | 6023 |
| 109. | முளரி நீங்கிய தையல் | ,, | 6028 |
| 110. | வண்டு உறை ஓதி | இராமன் | 6029 |
| 111. | கற்பினுக்கு அணி | அனுமன் | 6031 |
| 112. | என் பெருந் தெய்வம் | ,, | 6032 |
| 113. | பொறையில் நின்றாள் | ,, | 6033 |
| 114. | எம்மோய் | ,, | 6034 |
| 115. | நற்பெருந்தவத்தளாய நங்கை | ,, | 6035 |
| 116. | தவம் செய்த தவமாம் தையல் | ,, | 6037 |
| 117. | வான் உயர் கற்பினாள் | ,, | 6038 |
| 118. | சோகத்தாளாய நங்கை | ,, | 6040 |
| 119. | அணங்கு அன்னாள் | ,, | 6041 |
| 120. | தையல் நங்கை | ,, | 6043 |
| 121. | அணங்கு | ,, | 6044 |
| 122. | நங்கை | ,, | 6045 |
| 123. | மஞ்சு என வனமென் கொங்கை வழிகின்ற மழைக்கண் நீராள் | ,, | 6046 |
| 124. | தோகை. | ,, | 6050 |
| 125. | அரிவை | சுக்கிரீவன் | 6055 |

ஸ்ரீ:

# பாடல் முதல் குறிப்பு அகராதி

## கருத்து விளக்கத்துக்கு உதவிய நூல்கள் :


1 கம்பராமாயணம் - சென்னைக் கம்பன் கழகப் பதிப்பு

2 ,, அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு

3 ,, வை. மு. கோபாலகிருஷ்ண மாச்சாரியர் பதிப்பு

4 ,, மர்ரே அண்டு கம்பெனி எஸ்.ராஜம்

5 பெரியாழ்வார் திருமொழி - பெரியாழ்வார்

6 திருவாய் மொழி - நம்மாழ்வார்

7 திருநெடுந் தாண்டகம் - திருமங்கையாழ்வார்

8 ஸ்ரீ வசன பூஷணம் - வியாக்கியானத்தின் தமிழாக்கம் B. R. புருஷோத்தம நாயுடு

9 ஸ்ரீ ராமாயணத் தனிச்சுலோகம் - பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம். கிருஷ்ணசாமி அய்யங்கார் விளக்கம்

10 சிலப்பதிகாரம் - அடியார்க்கு நல்லார் உரை

11 திருக்குறள் - பரிமேலழகர் உரை.

12 கம்பன் - புதிய பார்வை பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்.

13 லியர் அரசன் - எஸ். மகராஜன்.

14 காவ்ய ராமாயணம் - கே. எஸ். ஸ்ரீநிவாசன்.

15 சீவக சிந்தாமணி - நச்சினார்க்கினியர் உரை.

16 தொல்காப்பியம் - பேராசிரியர் உரை.

17 ஞானதீபம் - சுவாமி விவேகாநந்தர்.

18 Sitayana Epic of the Earth born K. R. Srinivasa Iyengar.

## ஆசிரியரின் பிற நூல்கள் :

1 இராமாவதாரம்

2 ஓவியப் புரு

3 படிவங்கள் எப்படியோ?

4 வள்ளல் நாயகி

5 வைணவக் களஞ்சியம்

6 நெய்க்குடம்

7 என் சிந்தனைக் குறிப்பின் ஒப்புமை மலர்கள்

8 விவேகாநந்தரும் தேசியமும்

9 பாரதி கண்ட பாரதத் தாய்

10 ஆழ்வார்களின் அருளிச் செயல்

11 தினசரி தியானம்

12 வாழித் திருநாமம் விளக்கம்

13 கம்பனும் சடையனும்

14 நாராயண கவசம்

15 தேசிய காப்பியம்

16 திருமணப் பாமாலை

17 ஆர்வவிளக்கு அம்மணியம்மாள்

18 தெய்வ மாக்கவிகள்

19 தேசிகர் அடிப்பொடி

20 பிரபந்த சாரம்

21 எங்கள் குலவிளக்கு



